சுவாமி நாராயணானந்தாவின்

# அகண்டைக மதம்

# (Universal Religion)



This Book is Published with the
Financial Assistance of
Tirumala - Tirupati Devasthanam
under their scheme
'Aid to Publish Religious Books.'

தமிழாக்கம் — பிரசுரம்

**சுவாமி நித்தியானந்தா**

என். யூ. சரணாலயம்,
வேடன்தாங்கல் (வழி)
அஞ்சல் எண்: 603 314

N. U. YOGA TRUST
GYLLING - DENMARK
First Edition: December 1992
Copies: 1000
Pages: IV + 216 = 220
Price: Rs. 25-00
Tamil Translation Right is
Vested with Swami Nithyananda
Translated and Published by:
Swami Nithyananda
N. U. Charanalayam,
Vedanthangal (Via)
Pin : 603 314
Printed at : Alaigal Achagam, Madras - 600 024.
Wrapper at : ACE Graphics, Madras - 600 094.
Binding : Umapathy binding works,
Madras - 600 014.

## சமர்ப்பணம்

அனைத்து

ஆன்மிக

சாதகர்களுக்கும்

## சுவாமி நாராயணானந்தாவின்
## பிற நூல்கள்

| | |
|---|---|
| மனக்கட்டுப்பாட்டின் ரகசியங்கள் | ரூ. 24.00 |
| சாந்தி ~ சக்தி - நீண்ட ஆயுள் | ரூ. 28.00 |
| ஆதார சக்தி | ரூ. 38.00 |
| தியான பிம்பம் | ரூ. 45.00 |
| குறிக்கோள் வாழ்வும் வீடுபேறும் | ரூ. 25.00 |

கிடைக்குமிடம்:

சுவாமி நித்தியானந்தா
தமிழாக்க ஆசிரியர்,
என். யூ. சரணாலயம்,
(வழி) வேடந்தாங்கல்,
செங்கை - எம். ஜி. ஆர். மாவட்டம்
அஞ்சல் எண் : 603 314

# முகவுரை

இந்நாட்களில் 'பக்தி' உணர்வு பரவலாகக் காணப்படுகிறது.

கடவுள் நம்பிக்கை மேலோங்கி இருக்கிறது.

மாணவர் முதல் பெரியோர்வரை ஆன்மிக விழிப்பு ஏற்பட்டுள்ளது.

யோகம், தியானம் போன்றவற்றில் பெரும் பாலானோர் ஆர்வம் காட்டுகின்றனர்.

அவர்களுக்கு இப்புத்தகங்கள் வழிகாட்டியாகத் திகழும் என நம்புகின்றோம்.

சுவாமி நாராயணானந்தா பல ஆண்டுகள் கடுந் தவமியற்றி 'நிர்விகல்ப சமாதி' என்னும் பரம அம்ச நிலையை எய்தியவர்.

ஆன்மிக சாதகர்களுக்குச் சாதனை செய்வதைப் பற்றி எளிய முறையில் விளக்கமாக எழுதியுள்ளார் அவர்.

தியானம், யோகம் பயிலும் ஆன்மிக சாதகர் களுக்கு நல்ல துணையாக அமையும் இந்த தொகுப்பு.

சுவாமிநாராயணானந்தா தென்னிந்தியாவில் கூர்க் பிரதேசத்தில் (கர்நாடக மாநிலம்) பிறந்தவர். ஸ்ரீ இராம கிருஷ்ண பரம அம்சரின் பேலூர் மடத்தில் ஆன்மீகப் பயிற்சி பெற்றவர். பரம அம்சரின் நேர்ச் சீடர், மகாபுருஷர் என்றழைக்கப் படும் சுவாமி சிவானந்தரின் சீடர். ஆன்மீகத்தைப் பற்றி அரிய பல நூல்களை ஆங்கிலத்தில் எழுதி யுள்ளார். அதன் தமிழ் வடிவமே இத்தொகுப்பு.

ஐந்து சிறு நூல்களில் பல்வேறு ஆன்மீக அனுபவ விவரங்களை விளக்கியுள்ளார். எல்லா வயதினரும் இவர் நூல்களை மிக்க ஆர்வத்துடன் படிக்கின்றனர்.

மாணவ சாதகர் ஒருவர் இவரது புத்தகங் களைப் படித்துவிட்டு அதைப்பற்றிப் பாராட்டி எழுதி யுள்ளார்.

'பிரம்மச்சரியம்' என்றால் திருமணமே செய்து கொள்ளாமல் இருப்பது என இதுநாள்வரை எண்ணி இருந்தேன். ஆனால்,

சுவாமி நாராயணானந்தாவின் புத்தகங்களைப் படித்தபின் என் எண்ணம் தவறு என்ற தெளிவு ஏற்பட்டது.

இதைப் போன்று பற்பல கடிதங்கள், விமரி சனங்கள்.

இந்தப் புத்தகத்திற்குத் திருமலை திருப்பதி தேவஸ்தான உதவி கிடைத்துள்ளது. இதைப்

பார்க்கும்போது 'நாமே இதைச் செய்து முடித்தோம்' என்ற நினைப்பு தவறானது— 'அந்த ஒன்றை'ச் செய்வித்தது, 'தெய்வீக ஆற்றலே' என்பது தெளிவாகிறது.

இத்தொகுப்பை அழகிய வடிவில் கொண்டு வர முழுப் பொறுப்பையும் அன்புடன் ஏற்றுக் கொண்டவர் கலைஞன் பதிப்பக 'நந்தா'. இதை ஏற்று முடித்துத் தந்ததை ஆன்மீக மொழியில் சொல்வதானால் 'சாதனையில் வெற்றி பெற்றவர்' என்று பாராட்டலாம்.

'குருவருள் எல்லா நலன்களையும் அவருக்கு நல்குவதாகுக!'

அவரைச் சார்ந்த புத்தகக் கட்டுமானக் கலைஞர்களாகிய 'அலைகள் அச்சகத்தார்' — 'ஏஸ் கிராபிக்ஸ்' நிறுவனம் — உமாபதி பைண்டிங் நிறுவனம் — எழுத்தாளர் சிவன் ஆகியோருக்கு எமது உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றோம். குரு தேவரின் பரிபூரண ஆசிகள் இவர்களுக்குத் தெய்வீக ஆற்றலை அருள வேண்டுகிறோம்.

— சுவாமி நித்தியானந்தா.

# பொருளடக்கம்

| | | பக்கம் |
|---|---|---|
| 1. | ஆன்மிக சாதகனுக்கு ஒரு வார்த்தை (A word to Sadhaka) | 9 |
| 2. | மெய்ஞ்ஞானம் (Wisdom) | 27 |
| 3. | உங்கள் பிறப்புரிமை (Your Birth Right) | 61 |
| 4. | வாழ்க்கையின் குறிக்கோள் (The Aim of Life) | 99 |
| 5. | அகண்டைக மதம் (The universal Religion) | 131 |
| 6. | ஆசிரியரும் அவர் பணியும் | 203 |



*1929-ம் ஆண்டு செப்டம்பர் 5-ந் தேதி மைசூரில் துறவு நிலை ஏற்ற மறுநாள் சுவாமி நாராயணானந்தா.*



*1964-ல் ரிஷிகேஷ் ஆசிரம மாடியில் சுவாமி நாராயணானந்த*
*பின்புறம் கங்கை ஆறு ஓடுவதைக் காணலாம்.*



*1976 ஜுலை 11-ம் தேதி டென்மார்க், ஜில்லிங்கில் நடைபெற்ற குரு பூர்ணிமை விழாவின்போது குரு குடீரில் சீடர்களுடன்.*

# சாதகர்களுக்கு ஒரு வார்த்தை

## [A WORD TO SADHAKA SPIRITUAL ASPIRANT]

*By:* **SWAMI NARAYANANANDA**




From:

The Complete Works Swami Narayanananda, Vol. 17

# ஆன்மிக சாதகனுக்கு ஒரு வார்த்தை

எண்ணம், சொல், செயலில் பிரம்மச்சரியத்தை (கற்பு நெறியை)க் கடைப் பிடியுங்கள். பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்காதவரை ஆன்மீக உலகில் ஓர் அங்குல அளவுகூட முன்னேற முடியாது. பிரம்மச்சரியம்தான் வலிமை மிக்கது! பிரம்மச்சரியமே உயிர்!பிரம்மஞான மார்க்கத்திற்குப் பிரம்மச்சரியமே வழிகாட்டி! பிரம்மஞானம் என்பது இறை உணர்வு பெறுதலும் மெய்யறிவுமாகும். பிரம்மச்சரியத் திடவிரதத்தைக் கடைப் பிடிக்காத வரைக்கும் பிரம்மஞானம் கிட்டவே கிட்டாது. பிரம்மச்சரியத்தின் அடித்தளத்தின் மேல்தான் ஆன்மீகக் கட்டிடத்தை நிறுவ முடியும். பிரம்மச்சரிய வாழ்க்கையைக் கடைப் பிடிப்பவன் தனது ஆன்மீக சாதனையில் முக்கால் பங்கு சுயமாகவே முன்னேறும் பேறுபெற்றவன். திருமணமான ஆணோ பெண்ணோ ஒன்றிரண்டு குழந்தைகளுக்குப் பின்னர் பிரம்மச்சரியத்தை அனுசரித்தால் மனச் சாந்தியையும் பிரம்மானந்தத்தையும் ஆன்மீக வெற்றியையும் எளிதில் அடையலாம்.

ஆரம்ப கட்டத்தில் சாதாரணமான ஒருவன் அல்லது ஒருத்திக்கு மனம், மனச் செய்கைகளின்

மீதான கட்டுப்பாடு இல்லாமற் போனால் எண்ண
தினால் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்ப
இயலாது. அவர்கள் சொல் — செயலில் பிரம்
சரியத்தை ஏற்பதற்கான தீவிர கவனத்தை மே
கொள்ள வேண்டும். இந்த இரண்டு முறைகளிலு
ஒருவர் நிலையான முன்னேற்றத்தைப் பெ
வேண்டும். அதனால் மனம் தூய்மையடைந்
சூக்கும நிலைபெற்று ஒருமுகப்படுகிறது. இதனா
ஒருவருக்கு எண்ணத்தின் மூலம் பிரம்மச்சரிய க
பாட்டிற்கான வழி புலனாகிறது.

சாதகர்கள் ஆரம்பநிலையில் ஆணும் பெண்ணு
தாராளமாகப் பழகுவதும் வம்பளப்பதும் கூடாது
பிரம்மச்சரிய விரதம் என்பது சிற்றின்பத்தை
மறக்கடிக்கப் பழகும் நோன்பு. அச்சமயத்தி
புலன்கள் விழிப்புடன் இயங்கும் நிலையில் உள்ள
இத்தகைய ஆபத்தைக் கடக்கக் கூடிய ஒரு நிலை
பேறு உள்ளது. அதுவே சமாதி நிலை. அந்
நிலையில் ஒருவனோ ஒருத்தியோ சிற்றின்
ஆசையோ எண்ணமோ 'இம்'மியுமின்றி இரண்
பேரும் ஒரே இடத்தில் ஒரே அறையில் சலனமின்
உறங்க இயலும். இந்நிலையை எய்துவதற்
முன் சாதகன் மிகவும் எச்சரிக்கையுடன் இருத்த
அவசியம். இன்றேல் தோல்வியே கிட்டும்.

வயிற்றைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டு
இயற்கை உபாதைகளைக் கட்டுப்படுத்தலாகாது
உறங்குவதற்கு முன் சிறுநீர் கழிக்க வேண்டு

உண்டதும் உறங்கக் கூடாது. இரவுச் சாப்பாட்டிற்குப் பின்னர் ஒரு மணி நேரம் கழித்தே உறங்க வேண்டும். படுப்பதற்கு முன் ஒரு கோப்பைக் குளிர்ந்த நீரைப் பருக வேண்டும். தியானத்தை முடித்ததும் உடனே எழுந்திருக்கக் கூடாது. வேலை செய்யக் கூடாது. உடனே உறங்கவும் கூடாது. இவற்றைக் கடைப் பிடித்தால் பிரம்மச்சரியத்திற்கு மிகவும் உதவிகரமாக இருக்கும். (பிரம்மச்சரியத்தைப் பற்றிய முழு விவரத்திற்கும் விதிகளுக்கும் ஆசிரியரின் 'சாந்தி சக்தி நீண்ட ஆயுளுக்கான வழி' என்ற நூலைப் பார்க்கவும்.)

உங்களது தொழில் வழிபாடு போன்றவற்றில் ஒழுங்கும், கட்டுப்பாடும் அவசியம். தினசரி பின் பற்ற உதவுமாறு கால அட்டவணையை அமைத்துக் கொள்ளுங்கள். பிறகு தவறாமல் அதைப் பின் பற்றுங்கள். எல்லாவற்றையும் குறித்த நேரத்தில் குறிப்பிட்டபடி செய்யுங்கள். சாதாரண வேலை என்று எதையும் புறக்கணிக்காதீர்கள். இவற்றை முறையாகப் பின்பற்றினால் உங்கள் மனம் ஒரு நிலைப்படும். உங்களுடைய உள்ளுணர்வின் ஆற்றல் பெருகும். தனக்குள்ள வேலையையும், பொறுப்பையும் தட்டிக் கழிப்பதே, மனித மனத்தின் இயல்பு. நொண்டிச் சாக்குகளைக் கண்டுபிடித்து மனிதனை ஏமாற்றுவதே அதன் வழக்கம். எனவே உறுதியுடன் வேலையைச் செய்யுங்கள். நீங்கள் எதைச் செய்ய நினைத்தாலும் அதை நாளைக்கு

என்று தள்ளிப் போட வேண்டாம். உங்களுக்க
அது நாளைவரை காத்திருக்காது.

உணவு, உடை போன்றவற்றில் எளிமையை
பழகுங்கள்; எதிலும் படாடோபம் கூடாது. எல்லே
ரிடமும் இனிமையாகவும், பெருந்தன்மையாகவ
பழகுங்கள். பணத்திற்கோ, அதிகாரத்திற்கே
வளைந்து கொடுக்காதீர்கள். ஏழை எளியவர்கள
உதாசீனப் படுத்தாதீர்கள். கர்வமே சற்று
கூடாது!

ஒரு சாதகன் (ஆன்மீகவாதி) தன்னுடை
சாதனையில் வெற்றி பெற, மூன்று காரியங்களை
தவிர்க்க வேண்டும். பெரிய மனிதர்களுடன் ப
வேண்டுமென்ற ஆசை, சரித்திர நூல்கள் உட்ட
எல்லாவற்றையும் அதிகமாகப் படிக்கும் வேட்
தர்க்க வாதத்தில் ஈடுபாடு ஆகியனவே அ
மூன்றுமாகும்.

ஓர் உண்மையான சாதகன் எப்பாடு பட்டாவ
காமினியையும், காஞ்சனையை (பெண்ணாசை
யும், பொன்னாசையை)யும் துறந்து விடுகிறா
ஆனால் பலரிடம் பெயர், புகழ் போன்ற ஆசைக
வேரூன்றிப் போயிருக்கிறது. அவர்களைய
அறியாமல் இந்த ஆசை அவர்களைப் பற்
கொள்கிறது.

ஒளிந்து கொண்டுள்ள பெயர், புகழ் ஆசை
வெற்றி கொள்வதற்கு அசைக்க முடியாத உ

தேவை! அநேகர் இந்த ஆசையில் சிக்கிக் கொண்டு முயன்ற காரியத்தை அறவே மறந்து விடுகிறார்கள். தங்களுடைய குறிக்கோளை இழந்து விடுகிறார்கள். ஆகவே இந்தப் பிசாசைக் கண்காணித்து முளையிலேயே மாயையைக் கிள்ளி எறியுங்கள்.

பேச்சைக் குறையுங்கள். எல்லாரிடமும் கண்டபடி பழகாதீர்கள். அளவோடு பேசுங்கள். வீண் பேச்சுக்களால் மகத்தான உடல் — மனோ வலிமையை இழந்து விடுவீர்கள். ஒவ்வொரு சொல்லை உச்சரிக்கும் போதும் உடலிலிருந்து ஒரு குறிப்பிட்ட அளவு சக்தி வெளியேறி விடுகிறது. அதிகமாகப் பேசுபவர்களிடம் செயல் திறன் குறைந்து போகும். அவர்கள் தங்களுடைய நேரத்தையும், சக்தியையும் நீண்ட பேச்சுகளில் செலவழித்து விடுகிறார்கள்.

காரியத்தில் கண்ணாகயிருங்கள். உங்களுடைய தினசரி கருமங்களான ஜபம், தவம் (கடவுள் நாமத்தை உச்சரித்தலும், தியானமும்) பாராயணம் போன்றவற்றை முனைப்பாக, முறைப்படி ஒரே சீராகச் செய்யுங்கள். காலை, மதியம், மாலை, நள்ளிரவு ஆகிய நான்கு வேளைகளில் தியானம் செய்தால் சீக்கிரம் முன்னேற்றம் கிட்டும். நள்ளிரவில் ஒரு மணி நேரம் செய்யும் தியானம் பகலில் இரண்டு மணி நேரப் பயிற்சிக்குச் சமம். ஆரம்பத்தில் நள்ளிரவில் எழுந்து தியானம் செய்வது கடினம். சிறிது முயற்சியுடன் தொடர்ந்து முயன்றீர்களானால் வெற்றி பெறலாம். இந்தத் தியானத்தின் ஆனந்தத்தையும் அனுபவிக்கலாம்.

தியானத்தில் வெற்றி பெறவும், உறக்க
சோம்பலைக் கட்டுப்படுத்தவும் உண்பதிலும், ப
வதிலும் நியமம் இருக்க வேண்டும். எப்போ
வயிறு புடைக்க உண்ணக் கூடாது. அதற்காக
நாளைக்கு ஒரு வேளை உண்பது என்ப
கூடாது. ஒரு நாளைய உணவை மூன்று அல்
நான்கு வேளைகளுக்குப் பங்கிட்டுக் கொ
வேண்டும். இரவில் எளிய, மிதமான உண
சாப்பிட வேண்டும். இது மன வளத்தையும், உ
நலத்தையும் சீரான நிலையில் வைத்திருக்க உ
கிறது. இதனால் ஆன்மீக சாதகன் சாதனை
ஒழுங்கான முன்னேற்றத்தைப் பெறலா
தியானத்தின் அமைதியையும் அனுபவிக்கலாம்.

ஒரு நாளைக்கு ஒரே வேளை சாப்பிடுபவர்
வயிறு நிரம்பச் சாப்பிடுவதால் இரண்டு மூன்று ம
நேரம்வரை மூளை மந்தித்து வேலை செ
தில்லை. அதிகச் சாப்பாட்டினால் தம்மை அறி
மலேயே சோம்பல் பற்றிக் கொள்கிறது. என
இந்த நிலைமைக்கு இடந்தரலாகாது!

ஒரு சாதகன் மேற்கொள்ளும் முயற்சிகள
மூன்று பிரதான பிரிவுகளாகப் பிரிக்கலாம். அ
மிதமானது; நடுத்தரமானது; தீவிரமானது!

ஐந்து மைல் தொலைவுள்ள ஓர் இடத்தி
நீங்கள் செல்ல வேண்டியுள்ளது. இந்தத் தூரத்
கடக்க நடந்தோ அல்லது சைக்கிளிலோ அல்

மோர்ட்டார் வாகனத்திலோ செல்வதாக வைத்துக் கொள்வோம்.

நடந்து செல்வதானால் அந்த இடத்தை அடைய இரண்டு மணி நேரம் ஆகும். சைக்கிளானால் ஒரே மணி நேரத்தில் போய் விடலாம். மோட்டார் வாகனத்திலானால் நிமிஷ நேரத்தில் போய்ச் சேரலாம்.

தூரமென்னவோ ஒரே அளவானதுதான். அந்த இடத்தைச் சேர மூன்று வெவ்வேறு வழிகளில் முயல்கின்றபோது கால அளவு ஒன்றுக்கொன்று மாறுபடுகிறது.

இது போலவே சரியான முயற்சியினால் மேற்கொள்ளும் சாதனையைத் தீவிரப்படுத்தினால் நீங்கள் இறையுணர்வைக் குறித்த நேரத்திற்கு முன்னரே எய்தி விடலாம்.

அதற்காக உடனேயே உங்கள் சாதகத்தைத் தீவிரப்படுத்தி விடாதீர்கள். மெல்ல மெல்ல ஒரே சீராகச் சாதகம் புரியுங்கள்.

உங்கள் மனத்தை அலட்ட விடாதீர்கள். உங்கள் உடலையும் அதிகமாக வருத்தாதீர்கள். அதீத உடலுழைப்பையும் தவிர்க்க வேண்டும். கடின உழைப்பினால் சிந்தனா சக்தி சோர்வடைகிறது. மனம் ஒருமுகப்படுவதில்லை.

நல்லவர்களோடும், பண்பாளர்களோடும், துறவிகளோடும் கலந்து உறவாடுங்கள். எப்

பயனையும் எதிர்பாராமல் நேசப் பாங்குடன் உங்களால் இயன்ற அளவு அவர்களுக்குச் சேவை செய்யுங்கள். உங்கள் குருவிடம் பக்தி செலுத்துங்கள். அவரிடம் மாறாத நம்பிக்கை வையுங்கள். நீங்கள் இவற்றைச் செய்வீர்களானால் உங்கள் மனமும் இதயமும் தூய்மையடைகிறது. அது தியானத்திற்குப் பக்கபலமாக நின்று கடவுள் தரிசனத்தை எளிதில் கிட்டச் செய்கிறது.

பிறரைப் பற்றி அவதூறு பேச முயலாதீர்கள். மற்றவர்களின் தவறுகளைச் சுட்டிப் பேசாதீர்கள். பிறரைப் பற்றி அவதூறு பேசுவதாலும், அவர்களுடைய பாபச் செயல்களை எடுத்துக் கூறுவதாலும் அவர்களுடைய பாப கிருத்தியங்களில் உங்களுக்கும் ஒரு பங்கு வந்து சேருகிறது. அது ஒரு தொற்று நோய். உங்களையும் திண்ணமாகப் பற்றிக் கொள்கிறது. இதுபோன்ற கெடுதிகளையும், வீழ்ச்சிகளையும் தவிர்த்துக் கொள்ளுங்கள்.

எளியவர்களிடமும், துன்பப்படுபவர்களிடமும் அனுதாபம் காட்டுங்கள். இயன்றால் அவர்களுக்கு இலவசச் சேவை செய்யுங்கள். இது உங்களுக்கு உதவும். மேன்மையுறச் செய்யும்.

சாதகத்தின் ஆரம்பத்தில் நீண்ட நேரத் தனிமையைத் தவிர்த்து விடுங்கள். ஒரு கற்றுக்குட்டி இருபத்துநான்கு மணி நேரமும் தியானத்தில் மனத்தை நிலை நிறுத்த இயலாது. தியானத்தினால் ஏற்படும் விளைவின்போது ஒருவர் ஆனந்த

மடைகிறார். வெற்றிமுனை வெகு அருகில் இருப்பதாகவும் தோன்றுகிறது. ஒரு சில நாட்களிலேயே இறையுணர்வு பெற்றுவிடலாம் என்றும் எண்ணுகிறார். ஆனால் இந்த மனநிலை வெகு நாட்கள் நிலைத்திருப்பதில்லை,

எதிர் விளைவுகள் தோன்றத் தொடங்குகின்றன! அப்போது மனத்தின் இயக்கம் தடைப்படுகிறது. சுற்றுச் சூழலில் குழப்பநிலை ஏற்படுகிறது.

உடல், மனம் பாதிப்படைந்து இயல்பான நிலையை இழக்கிறது. ஒளிந்தும் அமுத்தியுமுள்ள ஆசைகள் மேலுக்குக் கிளம்பி வந்து செயல்படுகின்றன. புலன்களும், ஆசைகளும் போகப் பொருள்களை அனுபவிப்பதற்காக விழிப்புடனும் துடிப்புடனும் காத்திருக்கிறது. சாதகனை இனம் புரியாத வேதனை வந்து கவ்விக் கொள்கிறது. எதிர் விளைவுகள் நேரிடும் இச் சமயத்தில் ஒரு கற்றுக் குட்டியினால் இதைத் தாங்க முடிவதில்லை. பெரும்பாலோர் இத்தகைய சமயத்தில் மனத்தைப் போட்டு வாட்டுவதால் மூளைக் கோளாறுகளுக்கு ஆளாகிறார்கள். சிலருக்குப் பைத்தியம் பிடித்துவிடுகிறது. சிலர் தற்கொலையும் செய்து கொள்கிறார்கள். எனவே ஆரம்பத்தில் நெடுநேரத் தனிமையைத் தவிர்க்க வேண்டும். துவக்கத்தில் மேற்கொள்ளும் நீண்ட நேரத் தனிமை என்பது உடலுறவில் ஈடுபடுவதைவிட ஆபத்தானது. சாத

கத்தில் முன்னேறிய ஒருவரே (ஆன்மீகவாதியே) நீண்ட நாள் தனிமையில் எந்தவிதப் பாதிப்புமில்லாமல் இருக்க முடியும். அவரால் சாதகத்தின் எதிர் விளைவுகளின்போதும் தன் மனத்தைத் தியானத்தில் நிலைநிறுத்த முடியும். அதன் மூலம் எதிர்மாறான விளைவுகளைத் தன் இச்சைப்படி மாற்றிக் கொள்ள முடியும். சாதக வீரர்கள் சில நாட்கள் தனிமையிலிருந்து சாதகம் புரிந்தாலே ஒரே மாதத்தில் நல்ல முன்னேற்றத்தைப் பெறுவார்கள்.

உணவு, பானத்தைப்பற்றி

இந்த விஷயத்தில் நீங்களேதான் ஒரு முடிவெடுக்க வேண்டும். உங்கள் உடல் நிலையைப் பற்றியும், அப்போதுள்ள தட்ப வெப்ப நிலை குறித்தும் உங்களுக்குத்தான் தெரியும். எத்தகைய உணவும் பானமும் உங்களுக்கு ஒத்துக் கொள்கிறது என்பதும், மனம், உடல் ஆரோக்கியத்தை சமச்சீராக வைத்துக் கொள்ள உதவுகிறது என்பதும் உங்களால் மட்டுமே கணிக்க முடியும்.

அதீதச் சூட்டையும், அதிகக் குளிர்ச்சியையும், தந்து வெகு எளிதில் சீரணிக்க முடியாத உணவையும் பானத்தையும் அறவே தவிர்க்க வேண்டும். உணர்ச்சிகளைத் தூண்டி, உறக்கத்தைத் தரும் உணவுகளைத் தவிர்க்க வேண்டும்.

குளிர் காலத்தில் சூட்டைத் தரக்கூடிய உணவும், பானமும் அத்தியாவசியப்படுகிறது.

நல்ல வெயிற்காலங்களில் சூட்டைத் தணிக்கக்கூடிய உணவும் பானமும் அவசியமாகிறது. எல்லாத் தேசங்களுக்கும், எல்லாக் கால நிலைகளுக்கும் பொதுவான ஓர் உணவை எந்தச் சாத்திர நூலும் வற்புறுத்தவில்லை.

இயற்கை தானாகவே பலதரப்பட்ட பறவை இனங்களையும், பல்வேறு தாவர, மலர்ச் சாதி களையும் பல்வேறு நாடுகளில் மாறுபட்ட பருவ நிலைகேற்பப் படைத்திருக்கிறது! அந்தந்த நாட் டைச் சேர்ந்த பல்வேறு இனத்தவர், அவரவர் நாட்டில் கிடைக்கும் இது போன்ற பொருள்களையே உணவாக உட்கொள்வதால் தங்கள் ஆரோக்கி யத்தை நல்ல நிலையில் பேணிக் காத்துக் கொள் கிறார்கள்.

அவரவர்களுக்கு ஒத்துப் போகும் உணவை இயற்கையே அவர்களுக்குச் சொல்லித் தருகிறது. இந்த உணவு, பானத்தினுடைய நுட்பத்தை அறிந்து கொள்ளாத தன்மையினால் சிலர் குழம்பிக் கொள்கிறார்கள். இது அறியாமையே தவிர வேறொன்றுமில்லை.

பொய் பேசுவதாலும், புறம் கூறுவதாலும், வம்பளப்பதாலும் நாக்கு அழுக்காகிறது.

காமம், கோபம், பேராசை, பொறாமை, போன்றவற்றால் இதயம் தூய்மை இழக்கிறது.

காமாந்தகாரப் பார்வையால் கண்கள் அழுக் கடைகின்றன.

பிறரைப் பற்றிய அவதூறுகளைக் கேட்பதால் காதுகள் புனிதம் இழக்கின்றன.

எந்தச் சந்தர்ப்பத்திலும் இவற்றைத் தவிர்க்க வேண்டும்.

ஒரு தேனீ நல்ல மணமும், துர்நாற்றமும் கொண்ட பலதரப்பட்ட மலர்களின் மீது உட்காரு கிறது. ஆனால் அந்த மாறுபட்ட மணமுள்ள மலர் களிலிருந்து அது இனிப்பான ரசத்தையே பருகு கிறது. அந்த ரசத்தைச் சுத்தமான தேனாக மாற்று கிறது! அதே போல ஒவ்வொருவரிடமுமுள்ள நல்லதை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். அது மட்டுமா? எறும்பிடமிருந்துகூட நல்ல குணங் களைக் கற்றுக் கொள்ளுங்கள்.

உங்களிடமுள்ள தவறுகளையும், குறை களையும் கண்டுபிடியுங்கள். அவற்றைத் திருத்திக் கொள்ளுங்கள். லட்சிய வாழ்வை மேற்கொள்ளுங் கள். அதன் மூலம் சீர்திருத்தவாதிகள் என்று கூறிக் கொள்பவர்களைவிட நீங்கள் பரந்தஅளவில் மனித சமுதாயத்திற்கு மேலான சேவை செய்தவர்களா வீர்கள்.

உங்களுடைய மூளைக்கும், மனச் சான்றிற்கும் மோதல் ஏற்படும்போது, உங்கள் மனச்சான்று (தூயமனச் சாட்சி) கூறுகின்றபடி நடந்து

கொள்ளுங்கள் அதனால் சரியான பாதையில் நீங்கள் எப்போதும் செல்ல முடியும்.

எப்போதும் உடம்பை உதாசீனப்படுத்தாதீர்கள்! அதே சமயம் பற்று வைக்காதீர்கள்!உடலின் மீது அதிகப் பற்று வைத்தல் அல்லது உடம்பை உதாசீனப்படுத்துதல் என்பதன் பொருள் மரணம்! இந்த இரண்டு நிலைகளுமே அளவுக்கு மீறிய செயல்களாகும். அளவுக்கு மீறிய செயல்கள் எப்போதுமே தோல்வியைத் தருவன. இரண்டுக்கும் பொதுவான நிலையையே கடைப்பிடிக்க வேண்டும். இதற்கு மனம், புலன்களின் மீதான கட்டுப்பாடே மிக மிக அவசியம்.

உடல் என்பது மனத்தின் ஒரு கருவியே. அதை மனத்தின் கரங்கள் என்றும் கூறலாம். மனிதனுக்குக் குடியிருக்கும் வீடு எப்படியோ அதே போலத்தான் ஆத்மாவிற்கு (உயிருக்கு) இந்த உடல்!

ஒருவன் தான் குடியிருக்கும் வரை அவன் வசிக்கும் வீட்டைச் சுத்தமாகவும், தேவைப்பட்ட போது பழுது பார்க்கவும் வேண்டும். இன்றேல் அவன் மகிழ்ச்சியோடு வாழ முடியாது. அதே போலத்தான் ஆத்மாவிற்கு இந்த உடலும். பிறவி எடுத்ததின் குறிக்கோளே இறையுணர்வு பெறுவதாகும். அதற்காக வேண்டியாவது உங்கள்உடலைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். தேவைப் பட்டவற்றை அதற்குத் தந்தாக வேண்டும். அப்போதுதான் மனம் மகிழ்ச்சியோடிருந்து இறை

யுணர்வைப் பெற்றுத் தரும். நலிவடைந்த உடல் மன நலிவைத் தரும். நலிவுற்ற மனத்தைக் கொண்டு இறையுணர்வை எய்துவதென்பது முடியாத காரியம்.

உலகாயதப் பொருள்களை அனுபவிப்பதில் ஆசை வைக்காமல் ஒதுக்கித் தள்ள வேண்டும். மனம், புலன்களை அடக்கி ஆளப் பயில வேண்டும், ஆசைகள், எண்ணங்களைக் கட்டுப்படுத்தி மனத் தூய்மை பெற்று அதைப் புனிதப்படுத்துங்கள். கடவுள் தரிசனத்துக்கான தாபங் கொள்ளுங்கள். அந்த ஆர்வமிக்க ஆசையைத் தன்னிலையில் இயங்க விடுங்கள். இந்த உயர்ந்த குறிக்கோளுக்கு முதலிடம் கொடுங்கள். சின்னச் சின்ன வெற்றி களால் திருப்தி அடைந்து விடாதீர்கள். இதயபூர்வ மாகவும், ஆன்ம நேயத்தோடும் பாடுபடுங்கள்.

உண்மையாகப் பாடுபடுங்கள்; மனச் சாட்சிக்கு விரோதமில்லாமல் உழையுங்கள். நீங்கள் உண்மை யுடன் உழைத்தீர்களானால், எதிர்பார்த்ததற்கு முன்னமேயே உங்களுக்குப் பலன் கிடைக்கும்.

ஆன்மீகப் பாதை மிக நெடியது. கரடு முரடானது. தோல்விகள் நெடுக இருக்கும்; இருந்தே தீரும். வீழ்ச்சிகளும், அபாயங்களும் குறுக்கிடும். வாழ்க்கையில் மேடு பள்ளங்கள் எப்படி இயல்பாக இருக்குமோ அதே போலத்தான் ஆன்மிக

உலகிலும் இருக்கும்! இதைக் கடக்கத் தேவையானது எல்லையற்ற பொறுமையும், தளராத விடா முயற்சியும் ஆகும்.

பலவீனமானவர்களுக்கு ஆன்மீக உலகில் இடமே கிடையாது. வீரர்களுக்கும், திடகாத்திரர்களுக்குமே அங்கு இடமுண்டு. அவர்களுக்குத்தான் வெற்றியின் வாழ்த்துக்கள் கிட்டும்.

துணிவுடன் செயலாற்றுங்கள்! உறுதியுடன் இருங்கள்! குறிக்கோளில் அசைக்க முடியாத நம்பிக்கை வையுங்கள்! தன்னம்பிக்கைக்கு முதலிடம் தாருங்கள்! கடவுளிடமும், சாத்திரங்களிடமும், நம்பிக்கை வையுங்கள்.

தன்னம்பிக்கை இல்லாதவன் அனைத்தையும் இழந்தவனாகிறான்.

ஆன்மீக ஆசானாகவுள்ள குருவின் ஆசி கிட்டினாலும், இறை அருள் கிடைத்தாலும், உள்ளத் தூய்மை அடையாதவனாக இருப்பின், அவனுக்கு வெற்றி வாய்ப்புக் கிட்டாது.

ஸ்ரீமத் பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளதாவது:

''பக்குவப்பட்ட மனம் ஒருவனுக்கு உற்ற தோழனாகவும், வழிகாட்டியாகவும் திகழ்கிறது. அழுக்குற்ற மனம் ஒருவனுக்கு விரோதியாகிறது.''

ஆதலின் மனத்தை நல்வழியில் பக்குவப்படுத்துங்கள். சிறந்த ஆசானைத் தேர்ந்தெடுங்கள். நேர்பாதையைக் கண்டு கொள்ளுங்கள். விடாமுயற்சியுடன் கூடிய நேர்மையான சாதகத்தை மேற்கொள்ளுங்கள் வெற்றி முனையை எட்டுங்கள்.

எழுமின்! விழிமின்! வெற்றி பெறும் வரை அயராது உழைப்பீர்! ஆசிகள்!

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

  

# குண்டலினி சக்தி அல்லது ஆதார சக்தி

ஆண்-பெண் உடம்பின் மைய சக்தியாக இருப்பதுவே குண்டலினி சக்தியாகும். மனிதனின் மாறுபட்ட நிலைகளுக்குக் காரணமாக இருப்பதும் இந்த சக்தியே.

இந்தச் சக்தியானது கீழ்மட்ட மையமான மூலதாரச் சக்கரத்தில் தங்கியுள்ளபோது அந்த மனிதனிடம் உணவு, உறக்கம், காம உணர்வு, ஆகிய மூன்றும் ஆதிக்கம் செலுத்துகிறது. அவன் இவற்றிடம் அடிமையாக இருக்கிறான்.

குண்டலினி சக்தியை மூலாதாரச் சக்கரத்தி லிருந்து முழுமையாக சகஸ்ராரத்திற்கு எழுப்பிச் செல்வதற்குக் கீழ்க்கண்ட மூவகைத் தூய்மை நிலை கள் அத்தியாவசியமாகின்றன. அவை உடல் தூய்மை, நாடிகளில் தூய்மை, மனத் தூய்மை யாகும். இந்த மூவகைத் தூய்மைப் பேற்றை எய்தியவுடன் குண்டலினி சக்தி முழு அளவில் சிரம மின்றி மேலுக்கு எழுகிறது.

இந்த மூவகைத் தூய்மையை அடைவதற்கு முன்னரே உயர் வகை பிராணாயாமப் பயிற்சியி னாலும் மயக்க - போதை மருந்துகளை உட்கொள்வ தினாலும் குண்டலினி சக்தியை பலவந்தமாக எழுப்ப முயன்றால், சக்தியின் ஒரு பகுதி எழுச்சியே கிட்டும். இந்தப் பகுதி எழுச்சி என்பது மிகவும் கெடுதலானது. மனிதனை அது நரக வேதனைக்கு உட்படுத்துகிறது. சிலருக்குப் பைத்தியம் பிடித்து விடும். மற்றும் சிலருக்கு தீராத வியாதிகள் பீடிக்கும்.

இந்தச் சக்தியின் இரகசியங்களை அறிய வேண்டுமாயின் கண்டிப்பான கற்பு நெறி (பிரம்மச் சரியம்) அத்தியாவசியம். நினைப்பு, சொல், செயலில் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்காமற் போனால் பலருக்குக் குண்டலினி சக்தி எப்போதும் ஒரு மறை பொருளாகவே தோன்றும். விந்துச் சுரப்பி என்பது குண்டலினி சக்தியோடு இணைந் திருப்பது. குண்டலினி சக்தி அடிமட்ட மையத்தில் தங்கியுள்ளபோது மட்டுமே ஒருவரிடம் காம விகாரம் தோன்றுகிறது. இந்தக் குண்டலினி சக்தி ஐந்தாவது சக்கரமாகிய விசுத்த மையத்திற்கு வந்தவுடன் உடலுறவு உணர்வுகள் அற்றுப் போகின்றன. அந்த ஆண் - பெண்ணுக்குக் காம உணர்ச்சித் தூண்டுதல் இருப்பதில்லை.

குண்டலினி சக்தி சிரசின் மையத்தை அடைந்த உடன் சமாதி நிலை (மேலான மெய்யறிவு நிலை)

சித்திக்கிறது. இந்தச் சமாதி நிலையை எய்தியவுடன் ஒருவர் ஞானத் தெளிவு பெறுகிறார். இந்த சமாதிப் பேற்றை அடையாமற் போனால் மிகவும் உயர்ந்த ஞானத் தெளிவு கிட்டாது.

## சக்தி மையம் எனும் குண்டலினி சக்தி

ஓர் உயிர்ப் பொருளின் உடலில் சூக்குமச் சக்தியாக இயங்குவதே குண்டலினி சக்தி. நாடி ஓட்டங்களுக்கு இந்தச் சக்தியே காரணமாகும்.

மருத்துவ விஞ்ஞானம் ஓர் உயிருள்ள உடலில் இயங்கும் நாடி ஓட்டங்களை அறிந்திருக்கிறது. ஆனால் அதற்கு நாடி ஓட்டங்களின் மின் இயக்கிச் சாதனமான டைனமோவைப் பற்றித் தெரியாது. ஒரு சாதாரணமான மனிதனுடைய குத மையத்தில் தான் இந்த 'டைனமோ' இயங்குகிறது. இந்தக் குண்டலினி சக்தி மையம் ஏற்ற இறக்கத்திற்கு ஏற்ப இடம் மாறுகிறது. மின்சாரத்திற்கும் நாடி ஓட்டங்களுக்குமிடையே எந்தவித வித்தியாசமும் கிடையாது. மின்சாரம் எங்கும் வியாபித்து இருக்கிறது. பரவெளி முழுமையும் இது சூக்கும உருவில் பரவியுள்ளது. ஆனால் அதை ஒரு 'டைனமோ' மூலமாக இயங்கச் செய்தால் ஓரிடத்தில் குவிந்து வெளிப்படுகிறது.

ஓரிடத்தில் குவிந்த நிலையில் வெளிப்படும் இந்த மின்சாரத்தைப் போல் அல்லாமல் நாடி

ஓட்டங்கள் சூக்குமநிலை பெற்ற மின்சாரமாக, இயங்குகின்றன.

குண்டலினி சக்தி அதி சூக்குமமானது. மனிதனால் படைக்கப்பட்ட எந்தக் கருவியினாலும் அதைப் பார்க்க முடியாது. மனம், எண்ண அலைகளை விட அதி சூக்குமமானது இந்தச் சக்தி. இத்தகைய சக்தியே உயிருள்ள உடலில் இயங்கிக் கொண்டிருக்கிறது. மனத்தைத் தூய்மையடையச் செய்து ஒருமுகப்படுத்தும் நிலையில்தான் குண்டலினி சக்தியையும் அதன் இயக்கத்தையும் அறிய முடியும். இந்த விவகாரத்தில் ஒருவருடைய மூளையே மருத்துவக் கூடமாகவும் மனமே இந்தச் சக்தியை அறியும் கருவியாகவும் இருக்கிறது.

மூளை மனம் அல்ல. மனம் மூளையில் வேலை செய்கிறது. மூளையை ஒரு வானொலிப் பெட்டியாகப் பாவித்தால் மனம் மின் சக்தியாக இருக்கிறது. மூளை தூல வடிவமுள்ளது. மனம் அந்த மூளை மையத்தில் சூக்குமச் சக்தியாக வேலை செய்கிறது.

மனம் ஜட சக்தி அல்ல. அதன் பின்னணியில் உயிர்ச் சக்தி வேலை செய்கிறது. ஜடசக்தி போல் அல்லாமல் மனம் தான் செய்வதை இன்னதென்று உணரும் சக்தி பெற்றுள்ளது.

துப்பாக்கியிலிருந்து வெளிப்படும் தோட்டா ஜட சக்தியாகும். அதற்கு தான் செய்வது இன்ன

தென்று புரிவதில்லை. இவ்வாறு இல்லாமல் மனம் தான் செய்வதை அறிகிறது. இருப்பினும் அது மிகவும் சூக்குமமான சக்தியாகும்.

குண்டலினி சக்தி இருபத்தி நான்கு மணி நேரமும் ஓய்வு ஒழிச்சலின்றி, நாடியோட்டங்களின் மின் இயக்கி சாதனமாக இயங்குகிறது. உயிருள்ள உடலில் இயங்கும் இந்தச் சக்தி சில நிமிடங்கள் வேலை செய்யாமல் நின்றாலும்கூட உயிர் அத்தோடு முடிந்து விடுகிறது.

ஓயாது வேலை செய்யும் குண்டலினி சக்தியின் இயக்கம் அதிசயமானது.

குண்டலினி சக்தி இரண்டு திசைகளில் இயங்கு கிறது. அதாவது மேல்நோக்கியும் கீழ்நோக்கியும். உடலுறவின்போது அது வெகு எளிதில் கீழ் நோக்கிச் செல்கிறது. கற்பு நெறியை (பிரம்மச்சரி யத்தை)க் கடைப்பிடிக்கும் பொழுது அது மேல் நோக்கி எழுகிறது.

ஆண்- பெண் இருபாலாருக்கும் விந்து வெளிப் படல் பொதுவானது. உடலுறவில் பெண்ணுக்கு விந்து நஷ்டம் கிடையாது. ஆயினும் ஆண்-பெண் இருபாலாருக்கும் பொதுவான பல்வேறு காமக் கசிவுகள் உண்டாகின்றன. இதுபோன்ற கசிவுகளி னால் ஆண்-பெண் இருபாலாரும் பெருமளவில் நாடிக்கதிர் சக்திகளை இழக்கின்றனர்.

இத்தகைய விந்துக் கசிவு ஆண்-பெண் இரு வருக்குமே ஈடுசெய்ய முடியாத இழப்பு. மூளை மையத்திலிருந்து இந்த விந்துச் சக்தி புறப்படுகிறது. உடல் முழுவதிலுமுள்ள நாடிக்கதிர் சக்தியைப் பிழிந்தெடுத்துக் கொண்டு ஆண், பெண் உறுப்புகள் மூலம் அது வெளியேறுகிறது.

நாடிகள் தளர்ச்சியுற்றால் மருத்துவவிஞ்ஞானம் அதற்கான சிகிச்சையை இன்னும் கண்டு பிடிக்க வில்லை.

அதீதச் சிற்றின்ப உறவினால் நாடி சக்தியில் ஈடுசெய்ய முடியாத இழப்பு நேரிடுகிறது. அதன் மூலம் மருத்துவ விஞ்ஞானத்திற்குப் பிடிபடாத பல்வேறு நோய்கள் தோன்றுகின்றன. அதன் பின்னர் மின் இயக்கி சாதனத்திலேயே நாடிசக்தி வெளியேறக் கூடிய அபாயம் உண்டாகி விடுகிறது. இந்த வாக்குமூலத்தில் எந்தவித மிகையுமில்லை. இது அப்பட்டமான உண்மை. நவீன கால மனிதனும், நவீன கால விஞ்ஞானமும் இதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

## வெற்றியின் இரகசியம்

புலன் போகங்களினால் மனோசக்தி சிதறி விடுகிறது. மாறாக மன ஒருமைப்பாடு சிதறிய சக்தி களை ஒன்று திரட்டுகிறது. இந்த ஒருமைப்பாடே

வலிமை மிக்கது. இவர்களின் சிற்றின்பப் போகங்கள் அளவில்லாத மகிழ்ச்சி இன்பத்தைத் தரவல்லதானாலும் மனத்தில் பெருத்த மாசை விளைவிக்கிறது. சாதாரண வாழ்க்கைக்கு மிதமான உடலுறவு உபயோகமுள்ளதாக இருப்பினும் உயர்நிலை ஆன்மீக சாதனைகளைப் பெறுவதற்குக் கற்புநெறி (பிரம்மச்சரியம்) அத்தியாவசியம். உடலுறவு மனத்தின் ஆற்றலைச் சிதறடிக்கிறது. அது உடலின் கட்டுக் கோப்பை சீர் குலைக்கிறது.

எல்லாப் புலன் ஆசைகளையும் கட்டுப்படுத்தித் தற்காத்துக் கொண்டால் அது 'ஓஜஸ் சக்தி'யாக (மாபெரும் மனோசக்தியாக) மாற்றம் பெறுகிறது. இந்தச் சக்தி (ஓஜஸ் சக்தி) ஒருவனிடம் பெருகப் பெருக அவன் ஆற்றலுள்ளவனாகத் திகழ்கிறான். படைப்பாற்றலுக்கும் மெய்ஞ்ஞான ஆற்றலுக்கும் இடையே பெருத்த வித்தியாசம் உள்ளது. குண்டலினி சக்தியின் ஒரு பகுதி எழுச்சியின்போதே ஒருவரிடம் படைப்பாற்றல் தோன்றுகிறது. அதன் முழு எழுச்சியின் பயனால் ஒருவர் மெய்ஞ்ஞான ஆற்றல் திறனைப் பெறுகிறார்.

ஆழ்ந்த துக்கம் அதீத உஷ்ணத்தை உண்டாக்கும் உணவு, பானம், சீதோஷ்ணம், தட்பவெப்ப நிலை போன்றவையும் குண்டலினி சக்தியின் பகுதி எழுச்சிக்குக் காரணமாகும். அத்தகைய எழுச்சியினால் கலை. கவிதைபேச்சுத் திறன்போன்ற படைப்பாற்றல் உருவாகும். குண்டலினி சக்தியின் இத்

த்தைகய பகுதி எழுச்சியினால் பெரிய ஆபத்தும் விளையும். பலசமயங்களில் குண்டலினி சக்தியின் பகுதி எழுச்சியினால் புலன் போகங்களில் மோகமும் தீராத வியாதிகளும், மூளைக் கோளாறுகளும் விளைகின்றன. குண்டலினி சக்தியின் பகுதி எழுச்சி சிரசின் மையத்தில் நீண்ட நேரம் தங்கி இருக்க முடியாத நிலை ஏற்படுவதாலேயே இந்தக் கோளாறுகள் ஏற்படுகின்றன. மேலும் அது ஒரே அடியாக கீழ்மட்ட மையத்தில் இறங்கி வீழ்ச்சி யடைகிறது. அது சிரசின் மையத்தில் இருக்கும் போது படைப்பாற்றலை அளிக்கிறது. அது அடிமட்ட மையத்திற்கு வீழ்ச்சியுறும்போது மேற் கூறிய வேதனை விளைவுகளை ஏற்படுத்துகிறது.

மெய்ஞ்ஞானத்தைப் பெறுவதற்குக் குண்டலினி சக்தி முழு அளவில் சிரசின் மையத்திற்கு எழுவது அத்தியாவசியமாகிறது. திண்மையான பிரம்மச் சரியம் (கற்பு நெறி) இல்லாவிட்டால் குண்டலினி சக்தி சிரசின் மையத்திற்கு உயர்ந்து செல்லாது! குண்டலினி சக்தி ஒரு முறை முழு அளவில் சிரசின் மையத்தைப் போய்ச் சேருமானால் அது விசுத்த சக்கரத்திற்குக் கீழே இறங்குவதில்லை. குண்டலினி சக்தி தலை உச்சிக்கு முழுமையாகப் போய்ச் சேரும் போது நிர்விகல்ப சமாதி நிலை கிட்டுகிறது. இத்தகைய பேற்றினால் மெய்ஞ்ஞான நிலை உண்டாகிறது. இதுவே ஆன்ம உணர்வு பெறுதல், கடவுள் தரிசனம் காணல், மேலான மெய்யறிவு பெறுதல், மூலப் பொருளில் போய்க் கலத்தல்

என்பன போன்ற பல்வேறு அடைமொழிகளில் வருணிக்கப்படுகிறது. குண்டலினி சக்திக்கும் ஆன்மாவுக்கும் இடையிலான இடைவெளித் தோற்றமே மாறுபட்ட நிலைகளுக்குக் காரணம். குண்டலினி சக்தி தலை உச்சிக்கு முழுமையாக எழுந்து சென்று அங்குள்ள ஜீவான்மாவில் கலக்கும் போது மாறுபட்ட நிலை மறைந்து போகிறது. இரு நிலையில் ஒரு நிலை பிறக்கிறது.

## இழந்த சாம்ராஜ்யத்தை மீளவும் பெறுவோம்

விழித்தெழுங்கள் செல்வங்களே விழித்தெழுவீர்!
நீண்ட உறக்கம் கலைந்து விழித்தெழுவீர்!
உங்களுக்காக ஒரு செய்தி கொணர்ந்தேன்!
மாபெரும் செய்தி கொணர்ந்தேன்!

இழந்த சாம்ராஜ்யத்தின் செய்தியே அது!
ஆண்டவன் எனும் பேருண்மைச் செய்தியே!
ஆண்டவன் உன்னுள் உயிராய் இருக்கிறான்!
செய்த பாவங்களும் பாபச் செய்கை
நினைவுகளும்
உன்னைப் பாவியாய்ச் செய்து வாட்டுகிறது!
பலவீனங்கள் பற்றிய எண்ணமும்
குறைபாடுகள் குறித்த நினைவுமே

உம்மை பலவீனராய் முட்டாள்களாய் மாற்றி
விட்டதே —அந்தோ!
எதை விதைத்தீரோ அதையே அறுக்கிறீர்!
கடவுளிடமிருந்தே வந்த நீங்கள் கடவுள்
நிழலிலே வாழ்கின்றீர்!
முடிவில் கடவுளிடமே போய்ச் சேருவீர்!
உள்ளுறை ஆன்மா தூயதாய் சுதந்திர
தேவனாய்
உடலுக்குள் அது ஒரு சாட்சியாய் நிற்குதே!
உன் மனம் உமிழ்த் தோற்றமே இந்த
அகிலத்தின் ரூபமே!
பந்த பாசமும் தொடரும் வேதனையும்
ஆசைகளால் வரும் துன்பமே!
அகந்தையும் அகங்காரமும் ஆசைகள் காரண
ரூபமே!
கணமே தோன்றி மறையும் சிற்றின்பச்
சிலிர்ப்புகள்
மனதின் தூய்மையைப் போக்கிடுதே
வலிமையைக் குறைத்திடுதே!
தூய்மை இழந்த மனம் பந்த பாசத்தில்
வீழ்த்துமே வேதனையுண்டாக்குமே!
தூயமனம் சுதந்திர தேவனிடம் அழைத்துப்
போகுமே—
சாம்ராஜ்யத்தை மீட்டுத் தேற்றுமே!
உம்மை உயர்த்துவது தூயமனம்
பந்தத்தில் ஆழ்த்துவது மாசுமனம்!
தூய்மை, எளிமை, தெய்வீகம் போற்றி
வாழுங்கள் செல்வங்களே!
சாதனை புரிந்து மனதைக் கட்டுவீர்!

விழித்தெழுங்கள் செல்வங்களே
விழித்தெழுங்கள்!
நீண்ட உறக்கம் கலைந்து விழித்தெழுவீர்!

*சுவாமி நாராயணானந்தா (1973)*

# மெய்ஞ் ஞானம்

## கடவுள்

காரணமின்றிக் காரியமில்லை. சூனியத்திலிருந்து ஒன்றும் பிறப்பதில்லை. உயிர்ப்பற்ற சக்தியோ உயிரற்ற ஜடமோ அறிவு ஜீவிகளை உண்டாக்க முடியாது. பேரண்டத்திற்கு மூல காரணமாக உள்ள பெருங்காரணனையே 'கடவுள்' ஆதிசக்தி, இயற்கை என்பன போன்ற பெயர்களிட்டு அழைக்கிறோம். பெயர்கள் மாறுபடலாம். பொருள் ஒன்றே.

ஒரு வட்டத்திற்கு ஒரே மையம்தான் உண்டு. ஆனால் அதற்குப் பல ஆரங்கள் உள்ளன. அது போலவே அகிலாண்டத்திற்கு ஒரே கடவுள்தான். ஆயினும் பல மதங்கள் உள்ளன.

கடவுள் சர்வ வியாபி. அனைத்துச் சக்தியும் படைத்தவர். நிரந்தரமானவர்; எல்லையற்றவர். உயிர்ச்சார சமுத்திரமாகவே இருப்பவர். இத்தகைய குணங்களைப் பெற்றவர் ஒரே தெய்வமாகத்தான்

இருக்க முடியும். இருவர் என்றால் ஒன்று மற்றொன்றுக்கு எல்லை வகுத்து ஒரு முடிவு பெற்றதாகி விடுகிறது. கடவுள் சர்வ வியாபி. உயிர்ச்சார மகா சமுத்திரம் இந்த குணங்களுக்குப் பிறகு வேறுபட்ட தன்மையுடைய உயிரற்ற சக்தி யாகவோ உணர்வற்ற ஜடமாகவோ இருக்க முடியாது. உயிர்ச்சாரமெனும் உயிர்ச்சார உணர்வே வியாபித்துள்ளது. பரவெளி எங்கணும் எல்லையற்ற வெளி பூராவிலும் ஒரே உயிர்ச்சார உணர்வு நிரம்பிப் பரவியுள்ளது. உயிர்ச் சாரம் தாதுக்களில் உறங்குகின்றது. காய் கறிகளில் கனவு நிலையில் இருக்கிறது. மிருக இனங்களில் விழித்தெழுந்து நடக்கின்றன.

மனிதனில் அது விழித்து, நடந்து, சிந்தனை ஆற்றலைப் பெறுகிறது. துறவிகள் முனிவர்களிடம் அது தன்னைத் தானே உணர்ந்த நிலையில் உள்ளது. கடவுள் உருவமுள்ளவரா உருவமற்ற வரா? உருவமோ அருவமோ இல்லாத நிலையே அவரது முடிவான நிலை. இந்த நிலையில் எண்ணற்ற உருவங்களில் அவர் மீண்டும் மீண்டும் வெளிப்படுகிறார். ஒருவன் கடவுளை ஒரு உருவ வடிவத்தில் தரிசிக்கிறான். அருவ நிலையில் உணரு கிறான்.

சவிகல்ப சமாதி நிலையில் இறைவனை உருவ நிலையில் தரிசிக்கிறான். நிர்விகல்ப சமாதி நிலை யில் உருவமற்ற கடவுள் நிலைக்கே உயர்ந்து

கலக்கிறான். நிர்விகல்ப சமாதி நிலையில் மட்டுமே ஒருவர் அகண்ட பரவெளியில் போய்க் கலந்து ஒன்றிப் போகிறார். சூரியனும் அதன் ஒளியும் பிரிக்க முடியாதவை. ஒரு நாணயத்தின் இரு புறம் போல் கடவுளும் அகிலாண்டமும் பிரிக்க முடியாதவை. அகிலாண்டம் இல்லாதிருந்த காலமும் இல்லை. அது இல்லாமல் போகக் கூடிய காலமும் இல்லை. அது இருந்தது; இருக்கிறது; இருக்கப் போகிறது. கடவுள் இல்லாத அகிலம் என்பது அர்த்தமற்றது. கடவுள் இல்லாமல் இந்த அகிலம் ஒரு கணம்கூட இருக்க முடியாது. எனவே படைப்பு எப்போது ஆரம்பித்தது என்ற கேள்வியே குதர்க்கமானது.

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்றும் அகிலத்தில் ஒரு குறிப்பிட்ட கால கட்டங்களில் நிகழ்பவை என்றால் கடவுள் இந்த நாளில் இந்த நேரத்தில்தான் பிறந்தார் என்பது நமக்கும் தெரியும், நம்மால் சொல்லவும் முடியும். அது போன்ற கேள்வியோ அல்லது பதிலோ குதர்க்க மானது; அபத்தமானது!

அகிலாண்டத்தின் பரவெளியில் எண்ணற்ற சூரிய மண்டலங்கள் இருக்கின்றன. அவற்றில் சில தோன்றுகின்றன. சில அழிக்கப்படுகின்றன. சில உள்ளவாறே உள்ளன. இம்மூன்று நிலை செயல் களும் அதாவது எண்ணற்ற சூரிய மண்டலங்களின் பிறப்பு, வளர்ச்சி, அழிவு ஆகியவை, எல்லையற்ற

பரவெளியில் ஓய்வு ஒழிச்சலின்றி நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றன.

சூரியனில் ஒரு ஒளிக்கதிர் எப்படியோ அதே நிலைதான் கடவுளில் ஒரு தனி மனித உயிரின் நிலையும்! சூரியனிலிருந்து புறப்பட்ட ஒளிக்கதிர் அதைவிட்டு விலகி வந்து அதைப் போன்றதொரு சிறிய சூரிய பிம்பத்தைப் பிரதிபலிக்கிறது. இந்த பிம்பத்திற்கு உயிர், மனம், தன்முனைப்பு, அறிவு, சித்தம் (மனக்கோப்பு) எல்லாம் அமைந்துள்ளன. ஆதலின் 'கடவுள் இல்லை' என்று சொல்வதின் பொருள் ஒருவர் தன்னுடைய மூலாதார சக்தியையே இல்லை என்பதற்கு ஒப்பாகும். இது சுத்த-வடி கட்டின முட்டாள்தனம்.

ஒரு மனிதனுடைய மனம் ஐம்புலன்களின் மூலமாக அவ்வப்போது வெளியே போய் விடுகிறது. அதனால் அதன் மூலாதாரமாக உள்ள கடவுளை மறந்து விடுகிறது. இதைத்திருத்தத் தேவைப்படுவது என்னவெனில் முதலில் அவ்வப்போது வெளியேறும் மனத்தைப் போகாமல் தடுக்க வேண்டும். பின்னர் அதை அதன் மூலாதாரத்திற்கே திருப்ப வேண்டும். சாதனை அல்லது யோகம் மனத்தை ஒரே இடத்தில் நிலை நிறுத்தும் சாதனம்.

சமாதி நிலையில் ஒருவர் தன் மூலாதார மாகவுள்ள ஆரம்ப நிலை எனும் கடவுளிடம் போய்ச் சேருகிறார்.

# ஆன்ம விடுதலை

பிறவியின் நோக்கமாக இருப்பது விடுதலை உணர்வு. பிறப்பிலேயே தோன்றிய விடுதலைக்கான இந்த நோக்கம் புல் இதழில்கூடப் படிந்துள்ளது. யாருமே துன்பத்தை விரும்புவதில்லை. நோய், சாவு என்று சொன்னாலே எல்லோருக்கும் கசக்கிறது. இருந்தபோதிலும் மாறான பாதையில் செயல் புரியும் மனிதன் ஆன்ம விடுதலை, பேரானந்தம் என்பதற்குப் பதிலாக பந்த பாசம், வேதனைகளை அரவணைத்துக் கொள்கிறான்.

சிற்றின்பத்தில் நிரந்தர 'ஆனந்தம்' கிட்டாது. ஒன்றை அனுபவிக்க முற்பட்ட உடன் பலதரப்பட்ட ஆசைகளுக்கு வழி திறக்கிறது. புலன் போகங்களுக்குப் பணம்தான் முக்கிய காரணமாகிறது. பெயரும் புகழும் மனிதனைப் பந்தப்படுத்துகிறது. வேதனையை அதிகரிக்கிறது. அப்படியானால் உண்மையான ஆனந்தம் எதில் கிடைக்கிறது? ஒருவர் தன்னுடைய பேருண்மை இயல்பை அறிவதால் இது கிடைக்கிறது.

எப்போதும் ஒருவர் 'என் உடம்பு' 'என் புலன்கள்' 'நான்' 'என் மனம்' என்றெல்லாம் சொல்லிக் கொள்கிறார். இப்படிச் சொல்வதிலிருந்தே அவரே அவரையும் அறியாமல் அவர்

'தன் உடம்பல்ல, 'தன்புலன்களும் அல்ல' 'தானுமல்ல' தன் மனமுமல்ல என்ற முறையில் மறுத்துக் கொண்டே போகிறார். எனில் அவர் யார்? 'நான் யார்' என்பதின் விடை கண்டு பிடிப்பதே மதம், தத்துவம் அல்லது யோகம் ஆகும்.

அகிலம் என்பது ஒருவருடைய மனத்தில் பிறந்ததே யொழிய வேறொன்றுமில்லை. நீங்கள் என்னவாக நினைக்கிறீர்களோ அதுவாகவே ஆகி விடுகிறீர்கள். எதை விதைக்கிறீர்களோ அதை அறுவடை செய்கிறீர்கள். கடந்த காலத்தில் ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் உருவில் நீங்கள் விதைத்ததையே இப்போது அனுபவிக்கிறீர்கள். தற்போதுள்ள இன்பமும் துன்பமும் உங்களுடைய கடந்த கால நன்மை தீமைகளின் விளைவுகளாகும். அதன்படி உங்களுடைய எதிர்கால வெற்றி — தோல்விகளும் நன்மை தீமைகளும் தற்போது நீங்கள் செய்யும் நன்மை தீமைகளைப் பொறுத்தே அமையும்.

எனவே அமைதியும், வளமான வாழ்க்கையும் அமைய வேண்டுமானால் தூய, எளிய, தெய்வீக வாழ்க்கையைப் பின்பற்றுங்கள். மனக் கட்டுப்பாட்டுப் பயிற்சியை மேற்கொள்ளுங்கள். உங்களுடைய பேருண்மை ஆற்றலை உணருங்கள். ஆன்ம விடுதலையை எய்துங்கள்.

# மனத்தின் தோற்றமே உலகம்

ஓடுகின்ற காரின் பின்னணியில், ஒரு சக்தி இயங்குகிறது. துப்பாக்கிக் குண்டின் பாய்ச்சலின் பின்னணியில் ஒரு சக்தி வேலை செய்கிறது. இதிலுள்ள சக்தி ஜட சக்தி.

மனம் சூக்கும சக்தியால் இயங்குகிறது. ஆனாலும் அதன் பின்னணியில் உயிர்ச்சார உணர்வு இருக்கிறது. என்ன செய்கிறோம் என்பதை அது உணருகிறது. எனவே அது ஜட சக்தியன்று! உயிருணர்வு உடையது.

ஆன்மா, உடலில் ஒரு சாட்சியாகவே இருந்து கொண்டிருக்கிறது. அது மனம், உடல் செயல் களினால் பாதிப்படைவதில்லை. ஆன்மாவின் பிரதான கருவியாக இருப்பது மனம். மனம் ஆன்மாவிலிருந்தே தன்னியக்கத்திற்கான உயிர்ப் பையும் ஒளியையும் பெறுகிறது. ஆன்மாவை ஒரு சக்கரவர்த்திக்கு ஒப்பிடலாம். அந்தச் சக்கர வர்த்தி மனம் எனும் பிரதமரிடம் ஆளும் அதிகாரங்கள் அனைத்தையும் ஒப்படைத்து விடுகி றார். மூளை மையமே தலைநகரமாக விளங்கு கிறது. பரம ஆன்மாவே பரந்த சாம்ராஜ்ஜியம்.

தன்முனைப்பு (அகந்தை), புத்தி, உள்ளுணர்வு, சித்தம், மனக்கோப்பு ஆகியவை அந்த மந்திரி சபையின் முக்கிய அமைச்சர்கள். பரம ஆன்மா மண்டலத்தை மனம் எனும் பிரதமரே நிர்வகித்து அரசாள்கிறார்.

ஒவ்வொரு நாளும் ஒருவர் மூன்று மாறுபட்ட நிலைகளை அனுபவிக்கிறார். விழிப்பு நிலை, கனவு நிலை, கனவுகளற்ற ஆழ்ந்த உறக்க நிலை.

விழிப்பு நிலையில் மனம் தூல உடலில் நின்று இயங்கி உலகாயதத்தை அனுபவிக்கிறது.

கனவு நிலையில் மனம் தனது சூக்கும உடலால் கனவு உலகை அனுபவிக்கிறது. கனவுகளற்ற ஆழ்ந்த உறக்கத்தின்போது அது ஆன்மாவில் லயித்து இருக்கிறது.

ஆழ்ந்த உறக்கத்தில் உயிரியக்கம் இருந்தாலும் உலகைப் பற்றிய நினைவே இருப்பதில்லை!

விழித்தெழுந்த உடன் மனம் செயல்படத் துவங்குவதால் புற உலக அனுபவம் புலனாகிறது.

ஒவ்வொரு நாளும் விளையும் இந்த அனுபவத்தின் போது உடலில் உள்ள ஆன்மா ஒரு சாட்சியாகவே இருக்கிறது. மனம் செயல்படும்போதுதான் உலகம் தெரிகிறது. மனத்தின் தோற்றமே உலகம்.

வேறொன்றுமில்லை என்கிற உண்மை விளங்கு கின்றது. எனவே மனத்தை அடக்குங்கள். அகிலம் முழுவதையுமே அதன் மூலம் அடக்கியாளலாம்.

## கடவுளும் அகிலமும்

சூரியனும் ஒளியும் போலக் கடவுளும் அகிலமும் பிரிக்க முடியாதவை. சூரியனின்றி ஒளி இல்லை. ஒளி இல்லையேல் சூரியன் என்பதற்குப் பொரு ளில்லை. அதே போல் கடவுள் இன்றேல் அகிலம் இல்லை. அகிலம் இல்லாமற் போனால் கடவுள் என்ற வார்த்தைக்கும் பொருள் இல்லை.

கடவுள் நிரந்தரமானவர். எல்லையற்றவர். சர்வ வியாபி. எல்லாச் சக்திகளும் நிரம்பியவர். உயிர்ச்சார உணர்வின் மகா சமுத்திரமாக இருப் பவர். எல்லா ஆற்றல்களையும், முடிவில்லாத எல்லா நிலைகளையும் பெற்ற அது ஒன்றே ஒன்று தான். எல்லாக் காரணங்களுக்கும் மூல காரண மானது. எல்லாச் சக்திகளுக்கும் ஆதி சக்தியானது. ஆரம்பமற்றது. முடிவே இல்லாதது. அது உயிர்ச் சாரமானது. மாறுதல் என்பதே இல்லாமல் ஒரே நிலையில் முன்பே இருந்தது, இப்போதும் இருப்பது, இனியும் இருக்கப் போவது. அது ஒரு கலவையல்ல!

எல்லாவற்றுக்கும் மூலமாக இருப்பதால் அதை ஒரு தனிப் பொருளாக விளக்க முடியாது. இது இன்னது என்பதன் பொருள் அந்தப் பொருளைக் காண்பது ஆகும். காணும் நிலையில் அது இருப்பின் அதற்கு ஓர் எல்லையும் முடிவான உருவமும் ஏற்பட்டு விடுகிறது. கடவுள் முடிவே இல்லாதவர். ஆதலால் அவரைக் காண்பதென்பது இயலாது.

வேறு வகையில் சொல்வோமானால் கடவுள் உன் அறிவிற்கு அப்பாற்பட்டவர்; கடவுள் உன்னுள்ளேயே இருக்கும் உயிர்! உன்னுள் உள்ள ஆன்மாவும் அவரே. நீ உயிருடன் இருக்கிறாய் என்பதற்கு ஏதாவது ஆதாரம் தேவையா? அவசியமே இல்லையே! உனக்கு உயிர் இருக்கிறது என்பது உனக்கே தெரியுமே. இல்லையேல் நீ யார்? உனது உண்மை சொரூபத்தை உணர்ந்து கொள். நீ என்பது உன் உடல் அல்ல! புலன்கள் அல்ல; மனமும் அல்ல; புத்தியும் அல்ல. நீ என்றால் அதுவே உன்னுள் உள்ள ஆன்மா. உன் மனத்திற்கு உயிர்ப்பையும் ஒளியையும் தரும் உயிர்ச்சார உணர்வு.

மனத்தூய்மை இல்லாததால் உன்னுடைய உண்மை சொரூபத்தைக் காணத் தவறி விட்டாய். மனம் பல்வேறு ஆசைகள், பாபங்களால் அழுக்கடைந்து விடுகிறது.

நீ ஒரு ஏரியின் கரையில் அமர்ந்திருப்பதாக வைத்துக் கொள்வோம். உனது நிழலுருவம் ஏரியின் நீர்ப்பரப்பின் மேல் விழுகிறது. நீர் நிலை அலைகளில்லாமல் அமைதியாக இருந்தால் உனது நிழலுருவம் அதில் நன்றாகப் புலப்படுகிறது. மாறாக அந்த நீர் நிலை கலங்கலாகவும் அலைகள் அதிகமாகவும் இருப்பின் உனது நிழலுருவம் நீர் நிலையின் மேற்பரப்பில் இருந்தாலும் உனக்கு அந்த உருவம் தென்படுவதில்லை. தண்ணீரை மனத்துக்கும் தண்ணீரின் நிறத்தை பாபங்களுக்கும் சிற்றலை, பேரலைகளை எண்ணற்ற ஆசைகளுக்கும் ஒப்பிடலாம். உன்னுடைய உண்மை சொரூபம் காண இயலாமற் போவதற்கு இவையே காரணங்கள். உன்னுடைய முற்பிறவியின் பாபங்களைத் துடைத்துக் கொள்வதற்கும், ஆசைகளைத் துறப்பதற்கும் அதன் விளைவால் மனத்தைத் தூய்மைப் படுத்துவதற்கும் 'சாதனை' என்று பெயர். மனத் தூய்மை பெற வேண்டும். எனில் உங்கள் ஆன்மா பரிசுத்த நிலையில் பிரகாசிக்கும். இதுவே 'சமாதி'. இதுவே உண்மை சொரூப தரிசனம், இதுவே கடவுளிடம் போய்ச் சேரும் நிலை!

## முடிவற்ற பரம்பொருள்

முடிவில்லாத பரம்பொருளுக்கு ஆரம்பமும் இல்லை. நடுவும் இல்லை (மையம் இல்லை) முடிவுமில்லை. பரம் பொருள் என்பது ஒன்றே ஒன்று

தான். இரண்டு என்று சொன்னால் ஒன்று மற்றொன்றுக்கு எல்லை வகுக்கும். அதனால் இரண்டுமே முடிவுள்ளதாகிவிடும்.

முடிவற்ற பரவெளியில் ஓர் அணு அளவையும் சேர்ப்பதோ குறைப்பதோ இயலாது. சேர்ப்பதும் குறைப்பதும் இயலுமானால் முடிவற்றது என்பது முடிவுள்ளதாகிவிடுகிறது. முடிவுள்ள நிலை பெற்ற வுடன் அது முடிந்த நிலை பெறுகிறது.

'படைப்பு' எனும் வார்த்தையே பெயர்ப் பொருத்தமற்றது. படைப்பு என்று சொன்னவுடன் படைத்தவர், படைக்கப்பட்ட உயிர் அல்லது பொருள் என்று தொடருகின்றன. மேலும் ஒன்று மில்லாததிலிருந்து வேறொன்று பிறக்கிறது என்ற கருத்தும் உண்டாகிறது. இந்தக் கருத்து அபத்த மானது. ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்றும் பிறப்ப தில்லை. கடவுள் இந்த அகிலத்தைப் படைத்தார் என்று சொன்னால், எல்லையற்ற பரம்பொருளான கடவுளுக்கு ஒரு எல்லைக் கோடு வகுக்கிறது. கடவுளுக்கு எல்லை இருக்குமானால் கடவுள் எங்கும் நிறைந்தவர் என்ற கருத்துக்கே அர்த்தமில்லாமல் போகிறது.

கடவுள் என்பது சர்வ வியாபியாக இருக்கும் ஒரே ஒருவர் எனில் எதை எப்படி எதிலிருந்து படைப்பது? பரவெளி பூராவும் வியாபித்துள்ள நிலையிலும், எதையும் கூட்டவோ குறைக்கவோ முடியாத நிலையிலும் படைத்தல் என்பது இயலாது.

'படைத்தல்' என்ற சொல் எல்லையற்ற ஒன்றுக்கு எல்லை வகுக்கிறது. கடவுளை முடிவுள்ளவராக்கி முடிந்த பொருளாக்குகிறது. எல்லையற்றது என்ற நிலை மாறி முடிவுள்ளது, வரையறுக்கப்பட்டது என்ற நிலை தோன்றுகிறது.

கடவுள் உயிர்ச்சார மகா சமுத்திரமாகவே இருப்பதால் அனைத்து ஆற்றல்களும் அனைத்துச் சாதனைகளும் அவரிடம் நிரம்பியுள்ளது. அந்த உன்னத நிலையில் காட்சிகள் தோன்றுவதும் மறைவதும் மீண்டும் தோன்றுவதுமாக மாறிக் கொண்டேயுள்ளன. இது ஒரு திருவிளையாடல்.

## மெய்ப் பொருள்

மெய்ப் பொருள் என்பது ஒன்றே ஒன்றுதான். அதுவே கடவுள். அது எல்லா உயிர்களுக்கும் பொதுவுடைமையானது. ஒவ்வொரு உயிருக்குள்ளும் நிலவும் உயிர்ச்சாரமே கடவுள். ஒரு குறிப்பிட்ட மதம், சாதி, இனம், பிரிவு, ஆண் அல்லது பெண், தேசம் கடவுளைத் தனக்கே உரித்தானது என்று சொந்தம் கொண்டாட முடியாது. யார் ஒருவர் உண்மையான வாழ்க்கை முறையை அனுசரித்து வாழ்ந்து அதை அடைவதற்குச் சாதனை செய்கிறாரோ அந்த ஒருவருக்கே அது சித்திக்கும்.

## அரசு, கல்வி, மதம்

இலட்சியம் படைத்த ஒரு அரசின் குறிக்கோள் அந்நாட்டு மக்களிடையே அமைதியையும் வளமான வாழ்வையும் மகிழ்ச்சியையும் மிளிரச் செய்வதே யாகும். உண்மையான கல்வித் திட்டமும் மதமுங் கூட இதே குறிக்கோளைப் பெற்றிருக்க வேண்டும். ஆதலால் அரசு, கல்வி முறை, மதத்துறை ஆகியவை ஒன்றுடன் ஒன்று எதிர்த்துக் கொள்ளும் தனித்தனித் துறைகள் அல்ல. அவர்கள் ஒன்றாக இணைந்து மக்கள் சமுதாயத்தை முன்னுக்குக் கொண்டுவரச் செயல்பட வேண்டும்.

## கீழை - மேலை நாடுகளின் கலாச்சாரங்களும் உலக சமாதானமும்

இன்றைய உலகில் இரு பெரும் கலாச்சாரங்கள் இருக்கின்றன. அவை கிழக்கு நாடுகளின் கலாச்சாரம், மேலை நாடுகளின் கலாச்சாரம் ஆகும்.

கிழக்கிந்தியக் கலாச்சாரம் மதத் துறையிலும், தத்துவத் துறையிலும் உன்னத நிலையை அடைந்துள்ளது. மேற்கத்தியக் கலாச்சாரம் விஞ்ஞானத்திலும் உலகாயத முன்னேற்றத்திலும் உயர் நிலையைப் பெற்றிருக்கிறது. இந்த நிலையில் இவ்விரு

கலாச்சாரங்களும் ஒருதலைப்பட்சமானதாகவும் குறையுள்ளதாகவும் ஆகிவிட்டது. கீழை நாடுகள் உலகாயதத்தையும், மேலை நாடுகள் ஆன்மீகத்தையும் புறக்கணித்து விட்டன.

தேசங்களின் அமைதிக்கும் வளமான வாழ்வுக்கும் இந்த இரு வேறு கலாச்சாரங்களும் இணைந்து செயல்படுவது அத்தியாவசியம். எல்லாத் தேசங்களிலும் அதற்குரிய பொறுப்பில் உள்ளவர்கள் இந்த முடிவை எய்துவதற்கான உள்ளார்ந்த முயற்சியை மேற்கொள்ள வேண்டும். அதன் பின்னரே இந்த உலகில் அவர்கள் உண்மையான அமைதியை நிலை நாட்ட முடியும்.

## கற்பு நெறி அல்லது பிரம்மச்சரியம்

அடித்தளம் இல்லாத கட்டிடம் இல்லை. பிரம்மச்சரியம் இல்லாத ஆன்மீக முன்னேற்றம் இல்லை. கண்டிப்பான கற்பு நெறியுடன் ஒழுகாமற் போனால் பிரம்ம ஞானம் கிட்டாது. அதாவது மெய்ஞ்ஞானம், ஆன்மீக அறிவு, சமாதி நிலையை அடைதல் போன்றவை இயலாது.

குண்டலினி சக்தி கீழ் மட்ட மையமான மூலாதாரச் சக்கரத்தில் தங்கியுள்ளவரை புலன் போகங்களில் ஈடுபட இயலும். அதே குண்டலினி சக்தி இதய மையமான அனாகதச் சக்கரத்திற்கும் மேலே ஏறிவிட்டால் காம இச்சைகள் அற்றுப் போய்விடும்.

இந்தச் சக்தி சகஸ்ராரத்திற்கு(சிரசின் மையம்)ப் போய்ச் சேர்ந்தால் ஒருவர் சமாதி நிலையைப் பெறுகிறார். குண்டலினி சக்தியை சிரசின் மையத்திற்குக் கொண்டு செல்லாதவரை சமாதி, மெய்ஞ் ஞானம் அல்லது ஆன்ம அறிவு சித்திக்காது! கீழ் மட்ட மையமான மூலாதாரத்தில் சக்தி தங்கி இருக்கும்வரை தமோ குணமே மேலோங்கி நிற்கிறது. அத்தகைய மனிதரிடம் உணவு, உறக்கம், காமம் இம்மூன்றிற்குமான பேராசை மேலோங்கி நிற்கிறது. அதன் காரணமாகவே பெரும்பாலான மக்கள் இந்த மூன்று முக்கிய விஷயங்களின் மூலம் கிடைக்கும் இன்பத்தில் விழுந்தடித்து மூழ்கித் திளைக்கிறார்கள்.

## அறம்

அறங்கள் மூவகைப் படும். பசியுடன் இருக்கும் ஒருவனுக்கோ அல்லது ஒரு குடும்பத்துக்கோ உணவளித்துக் காப்பாற்றுதல், நோயாளிக்குச் சேவை செய்தல், ஏழைகளுக்கும் உயிரினங்களுக்கும் காப்பகங்கள் கட்டுவது போன்றவையே, ஒருவன் நல்வழியில் ஈட்டிய பொருளைச் செலவழிப்பதற்கான அறவழிகளாகும். இவை அனைத்தையும் விடச் சமதர்ம அறிவை கற்றுத் தருதல் மேலான தர்மம்.

பட்டினியால் பரிதவிக்கும் ஒரு குடும்பத்திற்கு ஆயிரம் ரூபாயை உதவியாகக் கொடுத்தால் அது ஒரு சில நாட்களுக்கே இருக்கிறது. உதவி பெற்றவர் அறிவீனராக இருந்தால் அந்தப் பணத்தை வீண் சிலவு செய்து விடுகிறார்.

அதே பணத்தைச் சிலவழித்துக் கல்வியைக் கற்பித்தால் வாழ்நாள் பூராவும் அது பயன்படுகிறது. இரண்டாவது வகை உதவியே முதல் வகையைவிட மேலானது. இவை அனைத்தையும் விட உயர்ந்த தருமம் இவ்வுலகிலும் அவ்வுலகிலும் உதவும் வகையில் ஆன்மீக போதனை அளிப்பதாகும். ஒரு சாதகன் தூய, எளிய, தன்னலமற்ற ஆன்மீக வாழ்க்கையையும் பிரம்மச்சரியத்தையும் கடைப்பிடித்து வாழ்ந்தாலே போதும். இத்தகைய தெய்வீக வாழ்வை மேற்கொண்டு வாழ்ந்தாலே அதைக் கண்ணுறும் ஆயிரக்கணக்கான மக்களை ஈர்த்து அவர்கள் அருள் நிலை எய்துவதற்கு உதவுகிறது. ஒரு சாதகனும் மெய்ஞ்ஞானியும் மேலான இந்த தர்மத்தை மனித குலத்துக்கு அளிக்கிறார்கள். முதல் இருவகை அறவழிகளை உலகாயத மக்கள் செய்கிறார்கள். மூன்றாவது வகை தர்மத்தைச் சாதகர்கள், சித்தர்கள் (பண்பாளர்கள் அல்லது இறைநிலை பெற்றவர்கள்) மட்டுமே செய்து காட்ட முடியும்.

## நற்செய்தி

அறியாமையே ஆனந்தம் என்றால், அறிவாளியாக இருப்பது குற்றமாகும். நன்முத்துக்களைப் பன்றிகள் முன் எறியாதீர். எனினும் அந்தப் பன்றி

களையும் கடைத்தேற்ற நாம் ஏதாவது செய்தாக வேண்டும். உதவியற்றவனுக்கு உதவிக்கரம் நீட்டி உதவி செய்வோம்; உதாசீனப் படுத்த மாட்டோம் என்பதே நமது குறிக்கோளாக இருக்கட்டும்.

நவீன கல்வி முறையினால் உலகின் நாகரீகம் வழி தவறிப் போய் விட்டது. அது ஒருதலைப்பட்ச மானது - குற்றம் நிறைந்தது. அது வாழ்வின் குறிக்கோளை இழந்து விட்டது. மனக் கட்டுப்பாடு இல்லாத புலன்களுக்கு இன்பமூட்டும் எந்த ஒரு பொழுது போக்கும் மனிதனுக்கு மகிழ்ச்சியைத் தராது. அது கணநேர இன்பத்தை அளித்துவிட்டு அவனை வேதனையில் ஆழ்த்துகிறது. ஏராளமான செல்வம்கூட இன்பத்தைக் கொடுக்காது. தனக் கென்று எதையும் வைத்துக் கொள்ள முடியாத ஒருவன் மனக்கட்டுப்பாட்டுடன் இருந்தால் அவன் வாழ்க்கை இன்பமானதாக இருக்கும். இதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

ஒருவன் அழுக்கடைந்த தன் மனம் போன போக்கில் செல்வதுதான் சுதந்திரம் என்று நினைப்பது தவறு. உண்மையான சுதந்திரம் அதுவல்ல; அப்பட்டமான அடிமைத்தனத்தில் கொண்டு சேர்ப்பதே அது.

அடக்குதல் என்பது ஒருவகை; கட்டுப்படுத் துதல் என்பது மற்றொரு வகை. கட்டுப்படுத்துதல் என்ற சொல்லே மறந்து போன ஒன்றாகி விட்டது. பீறிட்டெழும் உணர்ச்சியை அடக்குதல் தவறு. அதைச் சரியான முறையில் கட்டுப்படுத்தி நல்

வழிக்குத் திருப்பினால் நல்ல பலன் கிட்டும். அதன் மூலம் ஒரு மனிதன் மேலும் மேலும் வலுப்பெறு கிறான்.

ஏற்கெனவே காமாந்தகாரத்தில் மூழ்கியுள்ள உலகுக்கு ஃப்ரூட் (FREUD) என்னும் ஜெர்மானிய காமத்துறை நிபுணர் உடலுறவுக்குத் தாராள அனுமதி வழங்கி விட்டார். இந்தக் காம வேதாந் தியின் செய்தியும் உலகின் மூலை முடுக்குகளிலெல் லாம் காட்டுத் தீ போலப் பரவி விட்டது.

உடலுறவு இன்பத்தைக் கட்டுப்படுத்தினால் பைத்தியமும், நோய்களும் ஏற்பட்டு விடும் என இவர் கூறியுள்ளார். இது, உண்மையானால் காமக்கல்விக்குத் தாராள அனுமதி பெற்றுள்ள தற் போதைய உலகில் பைத்தியக்காரர்களே இருக்கக் கூடாதல்லவா?

ஓர் ஆணோ அல்லது பெண்ணோ, ஒரு சிறுவனோ அல்லது சிறுமியோ வலுவுள்ள உணர்ச் சிகள் தங்கள்பால் பீறிட்டெழும்போது அதைக் கட்டுப்படுத்த இயலாத நிலையில் எளிதில் மூளைக் கோளாறுகளுக்கு உட்படுவது பரிதாபகரமானது! இந்தக் கோளாறுகளுக்கு நிவாரணம் மனக்கட்டுப் பாடே!

மனக்கட்டுப்பாடு இன்றேல் உண்மையான சாந்தி கிட்டாது.

விந்து சக்தி மனத்திற்கு மாபெரும் ஆற்றலைத் தருகிறது - உடலுக்கும் கூடத்தான்! எப்பொழுது

இந்தச் சக்தியை அடக்கி ஆள்கிறோமோ அப்போது இம்மாபெரும் ஆற்றல் 'ஓஜஸ் சக்தி'யாக மாற்றமடைகிறது! ஆன்மிகப் பரிணாம உயர்வுக்கு விந்து சக்தியின் கட்டுப்பாடு (பிரம்மச்சரியம்) மிக மிக அத்தியாவசியம்.

சிறந்த ஆரோக்கியத்திற்கும் முறையான உடலுறவுப் பழக்கம் தேவை. இந்த ஒரு கொள்கையை என்னால் நிரூபிக்க முடியும். இந்த உலகத்தின் எந்தப் பகுதியிலிருந்து இதற்கு மறுப்பு வந்தாலும் அதை நான் ஒரு சவாலாகவே ஏற்றுக் கொள்கிறேன்!

அரசாங்கம், கல்விமுறை, மதம் எல்லாமே பொதுவான ஒரே நோக்கத்தைக் கொண்டவை. அதாவது ஒருவனுடைய வளத்திற்கும், அமைதிக்கும், ஆனந்தத்திற்கும் பாடுபடுவதே அந்தப் பொது நோக்கம்!

கொள்கை படைத்த அரசாங்கத்தை அன்பும் பரிவும் மிக்க தாய்க்கு ஒப்பிடலாம். கல்வியையும், மதத்தையும் இரண்டு 'கன்னிப்' புதல்விகளுக்கு ஒப்பிடலாம். ஏன் அவர்களை 'கன்னிப் பெண்கள்' என்று சொல்கிறேன்? இந்த இரண்டு துறைகளுமே தூய்மையாகவும், மாசற்றும் இருக்க வேண்டும். ஒரு தேசத்தின் உண்மையான முன்னேற்றத்திற்கு இந்த மூன்றுமே ஒற்றுமையுடன், சீரிய முறையில் இயங்க வேண்டும். ஆனால் மனித குலத்தின் பெரும்பான்மையினர் மனமாற்றத்திற்கு ஆளாக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது மட்டுமின்றி அவர்களின் சிந்திக்கும் கோணமே திசைமாற்றம் செய்யப்பட்டு விட்டது என்பது துக்ககரமானது!

செய்தித்தாள்கள், வானொலி, டெலிவிஷன், சினிமா போன்ற சாதனங்களின் தவறான பிரச்சாரத்தால் மக்கள் அனாதரவான முட்டாள்களாகி விட்டனர்! அவர்கள் தங்களுக்குள்ள சிந்தனா சக்தியையே இழந்து விட்டார்கள்! அவர்களில் பெரும் பான்மையினர் 'டார்வின்' சித்தாந்தமான கற்காலத்திற்கும் பின்னடைந்து விட்டார்கள்!

மனக் கட்டுப்பாடற்ற வாழ்க்கை நரக வேதனை மிக்கது. மனம், புலன்களைக் கட்டுப்படுத்தும் ஒருவன் சொர்க்க போகத்தை அனுபவிக்கிறான்.

நரகமும் சொர்க்கமும் மனத்தைப் பொறுத்ததே!

## மனம்

மனம் உயிர்ச்சார உணர்வைப் பின்னணியாகக் கொண்டு இயங்கும் சூக்கும சக்தி! எனவே, அதுதான் இன்னது செய்கிறோம் என்பதை உணருகிறது. ஒரு துப்பாக்கிக் குண்டு வெடிக்கும்போது அது சக்தியை வெளிப்படுத்துகிறது. ஆனால் இந்தச் சக்தி ஜடமானது; வெடிக்கும் குண்டு தன்னுடைய செயலை உணர்வதில்லை. இவ்வாறன்றி மனம் தன் செயலை உணர்கிறது.

மூளை மையத்தில் சிந்தனையாகவும், உள்ளுணர்வாகவும், அகந்தையாகவும் மனம் செயல்

படுகிறது. மூளையில்லா மனம் உயிர்ச்சார உணர்வுமல்ல! சிக்கல்கள் நிறைந்த இயக்க சக்தி கொண்ட ஒரு 'வானொலிப் பெட்டிக்கு மனித மூளையை ஒப்பிடலாம்! மனத்தை மின்சாரத்திற்கு ஒப்பிடலாம். ஆன்மா, உயிர் எனும் உயிர்ச்சார உணர்வுக்கு மின் இயக்கி சாதனமான 'டைனமோ' வை ஒப்பிடலாம். எனவே மூளை மனமாகாது! மனம் உயிர்ச்சார உணர்வு அல்ல. இந்த மூன்றுமே வெவ்வேறானவை. ஆனால் ஒன்றோ டொன்று பின்னி இருப்பவை!

மனம் இன்றேல் மூளை வேலை செய்யாது. உயிர்ச்சார உணர்வு இல்லையெனில் மனம் என் பதே இருக்காது!

மனம் மூளை மையத்தில் இயங்குகிறது. பெயர்கள், உருவங்கள் கொண்ட உலகை அது கண்கள் மூலமாகத் தெரிந்து கொள்கிறது.

மூக்கினால் அது நல்வர்சனையையும், துர்நாற் றத்தையும் புரிந்து கொள்கிறது.

அது காதுகளின் மூலம் ஒலிகளை அறிந்து கொள்கிறது. நாக்கினால் சுவையைப் புரிந்து கொள்கிறது. உடலால் ஸ்பரிசத்தைப் புரிந்து கொள்கிறது. இந்த ஐம்புலன்களின் உதவியின்றி மனம். எந்த ஓர் அனுபவத்தையும் பெற முடியாது.

ஐம்புலன்களுங்கூட மனத்தின் உதவியின்றி இந்த அகிலத்தை உணர முடியாது. இந்த மனமே கூட உயிர்ச்சார உணர்வின் உதவியின்றிச் சுயமாக இயங்கவோ இயக்கவோ ஏலாது.



# உங்கள் பிறப்புரிமை

## [YOUR BIRTH RIGHT]

***By:*** **SWAMI NARAYANANANDA**




From:

The Complete Works Swami Narayanananda, Vol. 19

# 1. உங்கள் பிறப்புரிமை

சுதந்திரமே உங்கள் பிறப்புரிமைக்கான குறிக்கோள். புலன் போகங்களை நாடுவதால் இதை இழந்து விடுகிறீர்கள். தெரிந்தோ தெரியாமலோ எல்லா உயிரினங்களும் இந்த ஆன்மிக விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருக்கின்றன. இந்த விடுதலைக்கான நாட்டம் புல்லின் இதழில் கூடப் படிந்திருக்கிறது. இருப்பினும் விடுதலைக்கான நாட்டம் தவறான பாதையில் திரும்புவதால் உயிரினத்தின் நடவடிக்கைகள் பந்தத்திலும் துன்பத்திலும் ஆழ்ந்து விடுகின்றன. இதனால் ஆனந்தமும் விடுதலையும் கிட்டாமற் போகிறது.

மனம், புலன்களின் எல்லா அபிலாஷைகளையும் அடைந்தே தீர வேண்டுமென முயல்கிறார்கள். அதனால் பந்தப்பிணைப்பில் சிக்கிக் கொள்ள நேரிடுகிறது. எனவே நரக வேதனைக்குள்ளாகிறார்கள்.

ஒரு கண்ணாடி அறைக்குள் பல வண்ண மலர்கள் உள்ளன. அறைக்கதவு பரக்கத் திறந்திருக்கிறது. பூத்துக் குலுங்கும் மலர்களின் அழகைக் கண்டு வண்ணத்துப்பூச்சிகள் கண்ணாடி அறைக்குள் செல்கின்றன. அவை பல்வேறு மலர்களை நாடி தேனைச் சுவைக்கின்றன. சிறிது நேரங்கழித்து

அங்கிருந்து வெளியேற நாட்டங் கொள்கின்றன. கூரை வழியாக வரும் ஒளியைப் பார்த்து அவை களில் சில அதை வழியெனக் கருதுகின்றன. மேலே பறந்து கூரையில் அடிபட்டுக் குழம்பிப்போகின்றன. மீண்டும் குழப்ப மிகுதியால் இங்குமங்கும் பறந்து கண்ணாடிச் சுவர்களிலும் அடிபட்டு மேலும் குழம்பு கின்றன. அவை உள்ளே வந்த வாயிற்கதவுகள் திறந்தே இருக்கின்றன. குழப்பத்தினால் வந்த பாதையை அவை மறந்து விடுகின்றன. ஒரு சில கொடுத்து வைத்த வண்ணத்துப் பூச்சிகள் மட்டும் திறந்த கதவு வழியாக வெளியேறி விடுதலை அடைகின்றன. கண்ணாடி அறைக்குள் மடிந்து போவன பல. தோட்டக்காரனால் துடைத்து வெளியே எறியப்படுவதும் சில. மேலும் அந்தத் தோட்டக்காரன் வண்ணத்துப்பூச்சிகள் வெளியேற முயலும் போராட்டத்தைக் காண்கிறான். ஒவ்வொன்றாகப் பிடித்து வெளியே தூக்கி எறிகிறான்.

உலகம் ஒரு கண்ணாடி மாளிகை, வாழும் மனித உயிர்கள் வண்ணத்துப்பூச்சிகள். "ஓ, மனிதா! விடுதலைக்காக இந்த உலகில் பிறந்தாய்! ஆனாலும் கணநேரப் புலன் இன்பங்களைத் தேடி ஓடுகிறாய்! வெற்றி, தோல்வி, இன்பம், துன்பம் என்று மாறி மாறிப் பந்தாடப்படுகிறாய்! உன்னு டைய இயற்கையான இயல்பையும், விடுதலைக் கான நோக்கத்தையும் அடியோடு மறந்து போய் விடுகிறாய்!

விரிவுபடக் கூறுவோமாயின் மனித குலத்தை மூன்று பிரதான பிரிவுகளாக்கலாம். மிருக மனிதன்; மனிதன்; தெய்வீக மனிதன்!

மிருக மனிதன் உணவு, உறக்கம், காமம் மூன்றிலும் திளைக்கிறான். மனித குலத்தின் மிகப் பெரும் பகுதியினர் இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள்.

மனித குலத்தின் ஒரு பகுதியினர் மோட்சத்திற்கான (விடுதலை) குறிக்கோளை அடையப் போராடுகிறார்கள். அதற்காக அவர்கள் தாய்மையும் எளிமையும் புனிதமும் கலந்த வாழ்வைப் பின்பற்றுகிறார்கள். தெய்வீகச் சிந்தனையிலேயே வாழ்கின்றனர். அவர்களையே மனிதர்கள் என்கிறோம்.

சமாதிநிலை எய்தியவர்களை தெய்வீக மனிதர்கள் என்கிறோம்.

பரிதாபத்துக்குரியவரே! நீங்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள்? இப்பொழுதாவது கண நேரம் சிந்தியுங்கள்!

இப்பொழுது சொல்லுங்கள். உங்களுக்கு விடுதலையும், சுதந்திரமும் வேண்டுமா? பந்தமும் துன்பமும் தேவையா?

பந்தமும் துன்பமும் வேண்டுமா? சாப்பிடுங்கள், குடியுங்கள், குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள். என்ன வேண்டுமாயினும் அனுபவியுங்கள்! உங்களைக் கட்டுப்படுத்த யாரால் முடியும்?

மாறாக ஆன்ம விடுதலை வேண்டுமா? நிம்மதி வேண்டுமா? ஆனந்தம் வேண்டுமா!—எளிமையான தூய்மை நிறைந்த புனித வாழ்வை கடைப் பிடியுங்கள். மனத்தைக் கட்டுப்படுத்துங்கள். சமாதிப் பேற்றை அடையுங்கள்!



# 2. கடவுள்

'படைப்பு' என்னும்போதே 'படைத்தவன்' என்பவனும் இருக்கிறான். காரணமின்றிக் காரிய மில்லை. ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்று வருவ தில்லை. இது ஒன்றோடொன்று தொடர்புள்ளது.

அகண்டத்தின் தோற்றத்திற்கு காரணப் பொருள் ஒன்றுண்டு. அந்த மிகப்பெரிய காரண மாக இருப்பவர் கடவுள்.

ஜடசக்தியிலிருந்தும், ஜடப்பொருளிலிருந்தும் அறிவு ஜீவிகள் தோன்ற முடியாது. அறிவாற்றல், உயிருணர்வு இல்லாத உயிர்ச்சக்தி என்பது கிடை யாது. ஒரே ஒரு மகாசக்திதான் உண்டு. அதுவே எங்கும் நிறைந்த உயிர்ச்சார மகாசமுத்திரம். இந்த அகிலாண்டத்தின் பெருங்காரணமாகத் திகழ்வதும் அதுவே. இந்த மகாசக்தி எனும் உயிர்ச்சார சாகரமே கடவுள்.

வட்டத்திற்கு ஒரே ஒரு மையந்தான் உண்டு. அதே மாதிரி இந்தப் பேரண்டத்திற்கும் ஒரே ஒரு கடவுள்தான். அவை இரண்டோ அல்லது பல வாகவோ இருப்பின் ஒன்றுக்கொன்று எல்லை வகுக்கும். எல்லை வகுக்கப்பட்ட பொருள்கள் கடவுள் ஆகாது.

கடவுள் ஒரே ஒருவர்தான். பல பெயர்களிட்டு அவரைக் குறிப்பிடுகிறோம். அதாவது பிரம்மம், கடவுள் (உருவம் அல்லது அருவம்), மகாசக்தி; வாலறிவன்; உயிர்ச்சார மகாசமுத்திரம் என்றெல் லாம் சொல்கிறோம்.

எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் அது ஒன்றையே குறிக்கும். அது அன்றும், இன்றும், என்றும் ஒரே நிலையில் நிலைத்து நிற்பது.

கடவுளுக்குப் பெயர் கிடையாது. உருவம் கிடையாது. அதே சமயத்தில் பல உருவங்களை, பல பெயர்களைப் பெற்றுள்ளன; அதுமட்டுமா— அவன், அவள், அது என்கிறோம்.

ஒரு பக்தன் கடவுளை அவள், அவன் (அகிலத் தின் தாய் தந்தை) என்கிற உறவில் அழைக் கிறான்.

ஒரு ஞானி (தத்துவவாதி) கடவுளை 'அது' என்கிறான்.

கடவுளைப்பற்றிய மிக உயரிய அறிவுபூர்வ விளக்கமாக இருப்பது சத்-சித்-ஆனந்தம் (உயிருணர்வு, அறிவாற்றல், பேரானந்தம்). அதுவே மகா சக்தி— பராசக்தி— அறிவாற்றல் சக்தி ஆகும். இதுவே கடவுள். இதைவிட மேலானதுவும் கடவுள் தான். இதைத் தன்னில் தானாக நிறைந்துள்ள உயிர்ச்சார மகாசமுத்திரம் என்றும் சொல்கிறோம்.

கடவுள் ஆற்றல் மிக்கவர். எல்லாம் வல்லவர். அதற்கு எல்லை கிடையாது. முடிவும் கிடையாது. கடவுள் சர்வ வியாபி. அசைவற்றவர், மாற்ற மற்றவர், பிறப்பற்றவர், வளர்ச்சியற்றவர், இறப் பற்றவர், ஆண்-பெண் பேதமில்லாதவர்.

அவர் தன்னில் தானாக இருப்பவர். ஆகவே கடவுளின்றி ஓர் அணுவும் அசையாது.

எல்லையில்லாதது எனில் ஒன்றே ஒன்றுதான். எல்லையற்ற பரம்பொருள் எனில்அதற்குத்தோற்றம் வளர்ச்சி, முடிவு என்பதே கிடையாது. அது போன்றது ஒன்றே ஒன்றுதான் இருக்க முடியும். எல்லையற்றது இரண்டாக இருக்குமாயின் ஒன்று மற்றொன்றுக்கு எல்லை வகுக்கும். எல்லை வகுக்கப்பட்டவுடன் அது ஒரு முடிவு பெற்றதாகி விடுகிறது. இந்த நிலையில் அது முடிவு அற்றதாக இருக்க இயலாது.

சக்தியின் மொத்தச் சேர்க்கையாக இருப்பதுவே மகாசக்தியாக மாறாமல் உள்ளது. முடிவற்ற

பராசக்தியின் அளவை ஓர் அணுகூட கூட்டவோ குறைக்கவோ முடியாது.

'படைப்பு' என்ற வார்த்தையை ஆழ்ந்து சிந்திப்போமாயின் அது அர்த்தமற்றது. அது வாதப் பிரதிவாதங்களுக்கு ஒத்து வராதது. கடவுள் எல்லையற்றவராகவும், ஒரே ஒருவராகவும் இருக்கும் நிலையில் யாரை யார் படைப்பது? எங்கிருந்து படைப்பது? அப்படி நடக்குமாயின் எல்லையற்றவர் எல்லையுள்ளவர் ஆகி விடுகிறார். கடவுளுக்கும் எல்லை வகுத்து விடுகிறீர்கள். எல்லை வகுக்கப்பட்டது கடவுள் அல்ல; பிசாசுதான்! பிறகு கடவுளை மகாசக்தி, பராசக்தி, அறிவாற்றல் சக்தி என்றெல்லாம் வருணிக்க முடியாது. உங்களைப் போலவே அவரும் ஒருவராகி விடுவார். கடவுள் அல்லது எல்லையற்ற பரம்பொருளில் மாற்றமே கிடையாது. மாற்றம் என்றால் எல்லை வகுக்கப் பட்டது!

கடவுள் சர்வ வியாபி. அவரன்றி ஓர் அணு கூடக் கிடையாது. கடவுள் உயிர்ச்சார மகாசமுத்திர மாக நிறைந்திருக்கும்போது உயிருணர்வு அற்ற ஜடப் பொருளோ ஜடசக்தியோ அத்துடன் இணைந்து இருக்க முடியாது. அது போன்ற ஒன்று இருக்குமானால் கடவுள் சர்வ வியாபியாக வுள்ள உயிர்ச்சார மகாசமுத்திரம் என்ற வர்ண னைக்கே பொருளில்லை.

பொன் ஆபரணங்களுக்குப் பொன்னே மூலப் பொருள். மட்பாண்டங்கள். செய்வதற்கு மண்தான்

மூலப் பொருள். அதேபோல இந்த அகிலத்தின் மூலப் பொருள் கடவுள்.

பொன் இல்லாத பொன் ஆபரணமில்லை; மண் இல்லாத மட்பானைகள் இல்லை. அது போலவே பெயர்களும் உருவங்களும் படைத்த இந்த அகிலம் (கண்ணால் காணும் உலகம்) கடவுளன்றி ஒரு கணம்கூட இருக்க முடியாது.

அலைகள், சிற்றலைகள், நீர்க்குமிழிகள் கடலிலேயே தோன்றி மறைகின்றன. அதேபோல் பெயர்களும் உருவங்களுமுடைய இந்த உலகம் கடவுளிடமே தோன்றி முடிவில் கடவுளையே போய்ச் சேர்கின்றது.

கடவுளின் சக்தியால் மட்டுமே இவ்வுலகில் எண்ணற்ற பொருள்கள் தோன்றி, மறைந்து, மீண்டும் பிறக்கின்றன. உண்மை என்னவெனில் இதில் மாற்றமோ, அசைதல் என்பதோ இல்லை. இருப்பது என்னமோ ஒன்றே ஒன்றுதான். அந்த ஒன்றே எங்கும் வியாபித்து நிற்கும் உயிர்ச்சார மகா சமுத்திரம். இது பிறப்பற்றது; வளர்தலற்றது; இறப்பற்றது. ஆண்-பெண் பேதமற்றது. ஒன்றே ஒன்றாக இருப்பது. ஆயின் அது என்னவாக மாறுகிறது? முடிவற்ற பரம்பொருளில் மாற்றமென்பது இயலாது. அசைதல் என்பதும் இல்லை. மாற்றமும், அசைதலும் உலகின் முரண்படும் நிலையினுள்மட்டும்தான்.

இந்த உலகில் உயிரோட்டம் இருப்பதற்குக் காரணம் கடவுள். உடலிலுள்ள உயிர் உலகில் தனிப்பட்டு இயங்குவதற்குக் காரணம் கடவுளே.

நீ வாழ்வதற்கும், உண்பதற்கும், உறங்குவதற்கும் கடவுளே காரணம். அது மட்டுமா? உயிர்மூச்சும் கடவுளே! கடவுளால் மட்டுமே உனது உயிரியக்கம் நடக்கிறது. கடவுள் இல்லாமல் நீ ஒரு கணம்கூட உயிர் வாழ முடியாது.

சூரியனும் ஒளியும் இணைந்து இயங்குவது. சூரியனின்றி ஒரு கணம்கூட ஒளி பிரகாசிக்காது. அதே போல இந்த அகிலம் கடவுளின்றி இயங்காது. நீங்கள் நிர்விகல்ப சமாதி நிலைக்குள் புகுந்தவுடன் உலகத்தின் காட்சி தோற்றத்திலிருந்து மறைகிறது. அதன்பிறகு உணரக்கூடியது உயிர்ச்சார மகா சமுத்திரம் மட்டுமே! அந்தக் கணமே நீங்கள் புறப்பட்ட இடத்தைப் போய்ச் சேருகிறீர்கள். அதுவே உங்கள் இயல்பான இடம். அப்போது ஒன்றே கடவுள் என்பதையும் உணர்கிறீர்கள். மூல காரணம் அப்படியிருக்கும்போது 'பெயர்களும் உருவங்களும் பெற்ற அகிலம்' எனும் அடைமொழியை எவ்வாறு விளக்க முடியும். ஒரு அப்பாவி மனிதனுக்குப் புரிய வைக்கப் பொருத்தமான விளக்கம் இதோ:

ஒளிக்கதிர் ஒன்று சூரியனுக்கு எப்படியோ அதேபோல் ஒரு தனி உயிர் (அகிலத்தில் இருக்கும் உயிரினங்களில் ஏதேனும் ஒன்று) கடவுளிடமிருந்தே தோன்றுகிறது.

சூரியனிலிருந்து புறப்பட்டு வரும் ஒவ்வொரு ஒளிக்கதிரும் விலகி வந்து சின்னஞ்சிறு உருவமாகப் பிரதிபலிக்கிறது. இந்த உருவம் தோற்றத்திற்கு ஒரு தனிப்பட்டதாகவே காட்சியளிக்கிறது. இந்தச் சிறு உருவத்திற்குள் ஒரு ஆன்மா, மனம், அகந்தை' அறிவு, சித்தம் (மனக் கோப்பு), உடலமைப்பு(தூல, சூக்கும, காரண உடல்கள்) பொதிந்துள்ளன,

# 3. மனம்

ஆன்மா அல்லது உயிர் உடலின் முடிசூடா மன்னன். மனம் அதனுடைய அறியும் கருவி. மனத்தின் மூலமே ஆன்மாவானது உலகத்தை உணருகிறது. மனமானது ஐந்து தூலப் புலன்களையும், ஐந்து சூக்குமப் புலன்களையும் இயக்குகிறது. அது மூளை மையத்தில் இயங்குகிறது. மனமே பிரதம அமைச்சர். அது உடலை (நாட்டை) ஆட்சி செய்கிறது.

மனத்தின் தன்மையே புலன்கள் வழியாக வெளிச் செல்ல முயல்வதாகும். வெளியே அலையும் இந்த வழக்கத்தினால் இது மாசடைகிறது. புனிதத்தையும் இழக்கிறது. தனது மூலத் தத்துவமான பேருண்மையை — கடவுளை மறந்து விடுகிறது. இந்த மாசும், மூலத்தை மறந்த மறதிப் போக்குமே பந்தத்திற்கும் துன்பத்திற்கும் காரணங்களாகின்றன.

உயிருணர்வைப் பின்னணியாகக் கொண்டுள்ள மனம் சூக்குமச் சக்தி படைத்தது. தன் செயலை அது அறிந்தே செய்கிறது. மனமானது ஐந்து தூலப் புலன்கள் மூலமாகவும், ஐந்து சூக்குமப் புலன்கள் வழியாகவும் உலகை அனுபவிக்கிறது. புலன்களும், மனமும் எதைக் காட்டுகின்றதோ அதுவே நீங்கள் காணும் உலகம். சுருக்கமாகச் சொல்வதானால் உங்கள் மனம் உமிழ்த் தோற்றமே உலகம்! இந்தத் தோற்றம் நீங்கள் உங்களுடைய மனத்திற்குக் கொடுக்கும் பயிற்சியைப் பொறுத்தே அமைகிறது.

உதாரணத்திற்கு ஒன்று சொல்வோம். சாலையோரம் ஒரு மொட்டை மரம் நிற்கிறது. கும்மிருட்டு நேரம் அந்தச் சாலை வழியே நடக்கிறான் திருடன். அவன் கண்ணுக்கு இந்த மொட்டைமரம் 'போலீஸ்' போலத் தோற்றமளிக்கிறது. ஓட்டமெடுக்கிறான்.

இரண்டாமவன், பேய் பிசாசு எனில் பயப்படுபவன். அதைப் பிசாசு என்றெண்ணி அலறி ஓடுகிறான்.

மூன்றாமவன், தனது நண்பனைக் காண வருபவன். மொட்டை மரத்தை நண்பன்தான் என நினைக்கிறான். அதை நெருங்கி கட்டித் தழுவுகிறான்! ஏமாற்றமடைகிறான்!

நான்காமவன் எந்த ஒரு நினைப்புமின்றி அந்த வழியே நடந்து வருபவன். அவன் கண்ணுக்கு அது

மொட்டை மரமாகவே தெரிகிறது. அவனுக்கு எந்த ஒரு ஏமாற்றமோ அதிர்ச்சியோ இல்லை!

இதே மாதிரிதான் உலகம் என்பதும் வேறொன்று மல்ல; உங்கள் மனம், புலன்களின் உருவகமே ஆகும்!

உண்மையில் கடவுள் என்பவர் ஒரே ஒரு கடவுள்தான். தவறான மனப் பயிற்சியினால் ஒன்றுக்குப் பதிலாக பலவற்றைக் காண்கிறோம்.

ஆகவே உங்கள் தலைவிதியை நிர்ணயிப்பது நீங்களேதான். நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அதுவாகவே ஆகிறீர்கள். ஆசைகள், எண்ணங்கள் செயல்கள் உருவில் நீங்கள் எதை விதைக் கிறீர்களோ அதையே காலப்போக்கில் அறுவடை செய்கிறீர்கள்.

தற்போது உங்களுக்கு நேரிடும் இன்ப துன்பங் களும், வெற்றி தோல்விகளும் பூர்வத்தில் உங்க ளுக்கு ஏற்பட்ட நல்லதும் கெட்டதுமான ஆசைகள், எண்ணங்கள் செயல்களைப் பொறுத்ததேதான்.

தற்போது நீங்கள் அனுபவிக்கும் லாப— நஷ்டங்கள் பூர்வத்தில் நீங்கள் செய்த நல்லதும் கெட்டதுமான செயல்களைப் பொறுத்ததுதான். உங்களுடைய எதிர்காலம் முழுக்க முழுக்க இன்றைய நடவடிக்கைகளைப் பொறுத்ததேயாகும்.

நீங்கள் வெற்றிகரமான நல்வாழ்வு வாழ வேண்டுமெனில் இக்கணத்திலிருந்தே தூய-புனித வாழ்க்கையை வாழுங்கள். மனத்தைக் கட்டியாளுங்கள். அவ்வாறன்றி நீங்கள் துன்பமும், தோல்வியும், அவமானமும் அனுபவிக்க வேண்டுமானால் கட்டுப்பாடின்றி மிருகமாகவே இருங்கள்.

ஆன்மா எப்போதும் தூய்மையானது. கண்ணியமானது. உடலில் அது ஒரு சாட்சியாகவே தங்கியிருக்கிறது. மனம், புலன்கள் அல்லது உடல் மட்டுமே இன்பத்தையும், துன்பத்தையும் அனுபவிக்கின்றன. அதனால் புனிதமடைவதோ, புனிதத்தை இழப்பதோ மனம் ஒன்றுதான். மாற்றங்கள் நிகழ்வது உடல், புலன்கள் மனத்தில் மட்டுமே!

எடுத்துக்காட்டாக நீங்கள் நீர் நிலையின் கரையில் அமர்ந்திருக்கிறீர்கள். உங்களுடைய உருவம் நீர்ப்பரப்பில் பிரதிபலிக்கிறது. தண்ணீர் சுத்தமாகவும், அலையற்றும் இருந்தால் உங்களுடைய பிரதிபிம்பத்தைத் தெளிவுடன் பார்க்கிறீர்கள். அதே தண்ணீர் கலங்கலாகவும், அலைந்து கொண்டும் இருந்தால் உங்களுடைய நிழலுருவை அந்த நீர்ப்பரப்பில் பார்க்க முடிவதில்லை. நிழலுருவம் என்னமோ முன்போலவே இருக்கிறது! நீங்கள் அசையாமல் அமர்ந்திருந்தாலும் அலையும் தண்ணீரில் படும் உங்கள் நிழலுருவம் அசைவது போல் தெரிகிறது. ஆன்மாவின் தன்மையும் இதே போன்றதுதான்.

தண்ணீரையும், நீர்ப்பரப்பையும் மனத்திற்கு ஒப்பிடலாம். அலைகளற்ற தூய தண்ணீர் தூய மனதாகும். அலைகள் மிக்க சகதியான தண்ணீர் மாசு படிந்த மனத்திற்கு ஒப்பாகும். நீயே ஆன்மா!

மேலும் ஓர் உதாரணம்!

ஒருவர் உறங்குவதற்கு முன் ஒரு மகிழ்ச்சியான செய்தியையோ அல்லது துக்ககரமான செய்தியையோ கேட்கிறார். அந்த மனிதர் மகிழ்ச்சியுடனோ அல்லது கவலையுடனோ உறக்கத்திலாழ்கிறார். ஆழ்ந்த உறக்கநிலை அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியாலோ, துன்பத்தாலோ பாதிக்கப்படுவதில்லை. அந்த ஆழ்ந்த உறக்க நிலையிலும் உடலில் உயிரியக்கம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. அச்சமயத்தில் மூச்சு இழைகிறது. இதயத் துடிப்பும் இருந்து கொண்டிருக்கும். உண்ட உணவும் சீரணித்துக் கொண்டிருக்கிறது. எல்லா வித இயக்கங்களும் நிற்காமல் நிகழ்கின்றன. இருப்பினும் தூங்குபவர் இதையெல்லாம் உணராமல் உறங்கிக் கொண்டிருக்கிறார். ஏன்? எப்படி? மனம் மூளை மையத்தில் இயங்காத காரணத்தால்!

ஆழ்ந்த உறக்கத்தின்போது மனம் ஆன்மாவில் (வலது புறத்திலுள்ள ஆன்ம இதய மையத்தில்) ஒன்றிய நிலையில் தங்கி இருக்கிறது! தூங்குவதற்கு முன் ஏற்பட்ட மகிழ்ச்சியோ அல்லது துக்கமோ அவரைப் பாதிப்பதில்லை.

இதன்மூலம் இரண்டு விஷயங்கள் நிரூபணமா கின்றன.

அதாவது ஆன்மா உடலில் ஒரு சாட்சியாகவே தங்கியுள்ளது. மனம் உடலில் ஏற்படும் இன்ப துன்பங்களால் பாதிப்படைவதே இல்லை! ஆழ்ந்த உறக்கத்தின்போது அது உடலிலேயே தங்கியிருந்த போதிலும் இன்ப துன்பங்களின் பாதிப்பு அதற்கு ஏற்படுவதில்லை.

ஆழ்ந்த நித்திரையின்போது ஒன்றுமறியா மலிருந்தாலும் விழித்தெழுந்தவுடன் அவர் துக்கத்தையோ மகிழ்ச்சியையோ உணருகிறார். இன்பம், துன்பம் — ஏன் இந்த அகிலமேகூட மனத் தைப் பொறுத்ததேயாகும்! எல்லாமே மனந்தான்.

உங்களுடைய தவறான எண்ணங்களும், பந்த பாசங்களும், வேதனைகளுமே மனத்தில் மாசுபடிவ தற்குக் காரணங்களாகின்றன.

தூயமனம் ஆழ்ந்த சிந்தனைக்கான சக்தியை அளிக்கிறது. சரியான முடிவெடுக்கும் திறமையைத் தருகிறது. அதனால் ஆன்ம விடுதலையும், பேரா னந்தமும் கிட்டுகிறது.

தூயமனம் உங்களது உண்மையான நண்ப னைப் போன்றது. மாசு படிந்த மனம் விரோதி போன்றது. எந்தக் கணமும் அது உங்களுக்குத்

துரோகம் இழைக்கலாம். உங்கள் மனமே உங்களுடைய நண்பனாகவும் இருக்கும். விரோதியாகவும் மாறக்கூடும். உங்கள் அறிவுத்திறனைக் கொண்டு அதைப் பயிற்றுவிக்கும் உங்கள் செயலைப் பொறுத்தே அது அமைகிறது.

சீவான்மாவிலிருந்தே மனம் ஒளியையும், உயிரையும் பெறுகிறது. சீவன் எனும் உயிர் இன்றேல் தனித்து இயங்க அதனால் இயலாது. உதாரணத்திற்கு ஒரு மின் இயக்கி சாதனத்தை (Dynamo) எடுத்துக் கொள்வோம். மின்னியக்கி சாதனம் அமைந்திருப்பது ஒரு முனை. அடுத்த முனையில் மின்விளக்கு (Bulb) ஒளிர்கிறது. இங்கே மின் இயக்கி சாதனந்தான் மின்சாரம் உற்பத்தியாகும் இடம். இந்த மின் இயக்கியை சீவான்மாவிற்கு ஒப்பிடலாம். மின்இயக்கியிலிருந்து உற்பத்தியாகும் மின்சார சக்தியானது கம்பிகள் மூலமாக பாய்ந்து சக்தி சேமிக்குமிடத்தில் (பவர் ஹவுஸ்) குவித்து வைக்கப்படுகிறது.

இந்த 'சக்தி சேமிப்பு' இடத்தை மனத்திற்கு ஒப்பிடலாம். சேமிப்புக் கிடங்கிலிருந்து மின்சக்தியானது கம்பிகள் மூலமாகப் பாய்ந்து விளக்கை எரியச் செய்கிறது. எரியும் 'பல்பை' தூல வடிவமுள்ள புலனுக்கு ஒப்பிடலாம். இப்போது ஒளிவீசச் செய்ய மின்சக்தி அவசியம். மின்சக்தியும் 'பல்பு' இல்லாமல் ஒளியைத் தோற்றுவிக்க முடியாது. இது மட்டுமன்று, சக்தி சேமிப்புக் கிடங்கிலிருந்து

மின்சக்தி கிடைக்க வேண்டும். முடிவில் இந்தச் சேமிப்புக் கிடங்கிற்கும்கூட மின் இயக்கியிலிருந்து மின்சக்தி உற்பத்தியாகி வினியோகிக்கப்பட வேண்டும். இதே போன்றுதான் சீவான்மா, மனம், தூல புலன்களிடையேயான தொடர்பும்,

மனம் பல்வேறு செயல்களைக் கொண்டது. இந்த ஒரே மனம் அறிவு, இச்சா சக்தி, அகந்தை போன்ற இயக்கங்களைக் கொண்டுள்ளன.

ஒரு கருத்தை ஏற்பினும், மறுப்பினும் அதைச் செய்வது மனமே. பகுத்துணர்ந்து, முடிவெடுத்து இடம் பொருள் ஏவலுக்கு ஏற்ற விளக்கத்தைத் தெரிந்தெடுப்பதே அறிவு.

தன்னை உடலென்றும், புலன்களென்றும் முனைந்து எண்ணும்போது அதற்கு 'அகந்தை' என்று பெயர்.

ஏற்படும் உணர்வுகள் நாடியோட்டங்கள் புலன்களை இயக்குவதும் நிறுத்துவதும் மனத்தின் 'இச்சாசக்தி'யாகும்.

மனம் தன்னை உடல், புலன்களென்று எண்ணும் நிலையில் 'அகந்தை' ஆகிறது. 'நான்' என உங்களைக் கூறிக் கொள்ளும்போது அழியும் உடலையே நீங்கள் குறிப்பிடுகிறீர்கள். இந்த உடலே நீங்கள் என எண்ணுகிறீர்களே ஒழிய

'ஆன்மா'வென நினைப்பதில்லை. இந்தத் தவறான நினைப்புதான் உங்களுக்கு ஏற்படும் பந்தத்திற்கும் துன்பத்திற்கும் காரணம்.

ஆசையே ஒரு எண்ணத்திற்குக் காரணம். எண்ணத்திலிருந்து செயல், ஆசைகள் கிளம்புகின்றன. இந்த ஆசைகள் மனத்தை மாசுபடுத்தி பலவீனமாக்கி, புத்தி மழுங்கச் செய்கிறது. அகந்தையே எல்லா ஆசைகளுக்கும் முதற் காரணம்.

மனத்தில் தோன்றும் எல்லா ஆசைகளுக்கும் 'தான்' என்னும் அகந்தையே காரணம்.

மனம் தனக்கென சுயமான ஒரு நிறத்தையோ உருவத்தையோ கொண்டதல்ல. எண்ணத்தின் பொருளுக்கேற்ற நிறம், உருவத்தைப் பெறுகிறது. மிக உயர்ந்த பண்புள்ள எண்ணங்களை இடைவிடாமல் நீங்கள் சிந்தித்து வந்தால் நீங்கள் எளிதில் உயரிய பண்பாளர் ஆகி விடுகிறீர்கள்.

கீழ்த்தரமுள்ள பாபமிக்க - முட்டாள்தன எண்ணங்களை எண்ணினால் அடிமுட்டாள்தனமான பாபாத்மாவாகி அதல பாதாளத்தில் அமிழ்த்தப் படுகிறீர்கள்.

உங்களுடைய ஆசைகள், எண்ணங்கள், செயல்களே உங்கள் வெற்றி-தோல்விக்கும், இன்ப-துன்பத் திற்கும் காரணமாகின்றன. உங்களுடைய நன்மை தீமைகளுக்கும் நீங்களேதான் காரணம்.

ஒரு ஏரியின் அமைதியான நீர்ப்பரப்பில் ஒரு கல்லைப் போடுகிறோம். அது பல பேரலைகளையும், சிற்றலைகளையும் தோற்றுவிக்கிறது. அதே போல ஆசை, எண்ணம், செயல் போன்றவை மனத்தை அலைக்கழிக்கும் போக்குடையன.

நீங்கள் சுகமாக இருக்க வேண்டுமா? வெற்றிகரமாக வாழ வேண்டுமா? எப்போதும் ஆசைகளையும், எண்ணங்களையும் கட்டுப்படுத்தப் பயிலுங்கள். உயர்ந்த மேன்மையான— எண்ணங்களுக்கு அந்த ஆசைகளை மாற்றுங்கள். இதற்கான வழி மந்திரத்தை இடையறாது ஜபியுங்கள். கடவுள் சக்தியின்-பேராற்றலின் நினைவிலேயே மூழ்குங்கள். இதுவே தக்க பரிகாரம். இது உங்களை விரைவில் உன்னதமாக்குகிறது. தினசரித் தியானமும் இதற்கு ஏராளமாக உதவுகிறது.

மற்றவர்களைப் போல் நடக்க விரும்புவது மனித இயல்பு. ஆதலின் பலவீனர்கள், சோம்பேறிகள், கயவாளிகள், முட்டாள்கள் போன்றவர்களோடு பழகாதீர்கள். எச்சரிக்கையுடன் இருங்கள்.

உயர்ந்த கண்ணியம் மிக்க பண்பாளர்களுடன் பழகுங்கள். இந்தப் பழக்கம் உங்களை உயர் நிலைக்குச் சந்தேகமின்றி உயர்த்தும்.

ஒரு காரியத்தை தட்டிக் கழிப்பதும், பொறுப்பை ஏற்க மறுப்பதும் மாசுபடிந்த மனத்தின் இயல்பு. மனத்தை உங்கள் பிடியில் வையுங்கள்.

கண்காணியுங்கள். நேர் பாதையில் செலுத்துங்கள். இன்றேல் அது உங்களுக்குத் துரோகமிழைக்கும்; அழித்தும் விடும்!

மனம் நான்கு பிரதான ஆற்றல்களை யுடையது. உள்ளுணர்வுடையது; உணர்ச்சி வயப்படுவது; சிந்திப்பது; ஒருமுகப்படுத்துவது ஆகும். இந்த எல்லா ஆற்றல்களுமே ஒரு மனத்தில் இருக்கும், ஆனால் ஒவ்வொரு உயிரிலும் இவை ஒரே சீராக வளர்ச்சி பெற்றிருப்பதில்லை.

பெரும்பாலானவர்களிடம் இதில் ஏதாவதொரு ஆற்றல் மட்டுமே மற்ற மூன்றைவிட அதிக அளவில் வளர்ச்சி பெறுகிறது. ஒருவர் விரும்பினால் எல்லா ஆற்றல்களையும் முழுமையாக ஒரு சேர வளர்த்துக் கொள்ள முடியும். மனத்தில் அதிக அளவில் ஆக்கிரமித்துள்ள ஆற்றலைப் பொறுத்தே அவரவர் வளர்ச்சி அமைகிறது. அவர்களுடைய போக்கு, ரசனை, தொழில் ஆகியவை இந்த ஆதிக்கம் செலுத்தும் ஆற்றலைப் பொறுத்தே இருக்கிறது.

1. உள்ளுணர்வின் ஆற்றல் :- வேலை செய்வதற்கான ஆர்வமே இதனால்தான்! மேற்கொள்ளும் வேலையின் பயனை எதிர்பாராமல் செய்ய வேண்டும்; வேலை வேலைக்காகவே. அதற்காக வேலையை அலட்சியப்படுத்தவும் கூடாது. அதே சமயம் எடுத்துக் கொண்ட வேலையைப் புறக்கணிக்கவும் கூடாது.

ஒவ்வொரு வேலையையும் இந்த மனோபாவத்திலேயே செய்யப்பட வேண்டும். செய்யும் தொழிலே தெய்வம். அது மனத்தையும், சித்தத்தையும் (மனக்கோப்பு) தூய்மையாக்குகிறது. சமாதி நிலைக்கு உயர்த்துகிறது. தொழில் மூலம் சமாதிப் பேற்றை எய்துவதே கர்ம யோகம்.

'கர்மம்' என்றால் வேலை. யோகம் என்பது பரமான்மாவும், சீவான்மாவும் இணைவதாகும். கர்மயோகம் விஞ்ஞான பூர்வமாக வளர்ச்சியடைந்து பயன்தரவல்லது. ஆன்மிகவாதி பின்பற்றக் கூடிய முறைகளில் இதுவும் ஒன்று.

2. உணர்ச்சி வயப்படும் ஆற்றல்: உணர்ச்சி பூர்வமான ஒருவரிடம் ஆக்கிரமித்துள்ள உணர்ச்சி வயப்படும் ஆற்றலினால் மனத்தைக் கட்டுப்படுத்த பக்தியோகத்தைக் கடைப்பிடிக்கிறார். அவர் அன்பு மேலீட்டால் ஈடுபாடுடையவராகிறார். தனக்கு விருப்பமானதொரு இஷ்ட தேவதையையும், இஷ்ட மந்திரத்தையும் உபாசிக்கிறார் (அவர் மிகமிக நேசிக்கும் தேவனையோ தேவியையோ ஏற்கிறார்.) குருவானவர்அதற்கான மந்திரத்தை உபதேசிக்கிறார். அவர் கடவுளைத் தனது தந்தையாகவோ, அல்லது காதலனாகவோ பாவிக்கிறார். தான்நேசிக்கும் தெய்வத்துக்காகவே ஒவ்வொரு

செயலையும் செய்கிறார். தன் மந்திரத்தை எப்போதும் நினைத்துக் கொண்டே இருக்கிறார். உண்பதும் கடவுளுக்காக; அருந்துவதும் கடவுளுக்காக; உறங்குவதும் கடவுளுக்காகவே! அது மட்டுமா, அவரது ஒவ்வொரு இதயத் துடிப்பையும்கூடக் கடவுளுக்கே காணிக்கையாக்குகிறார்!பக்தியின் மூலமும்வழிபாட்டின் மூலமும் மனத்தைத் தூய்மையாக்கிக் கொள்கிறார். தெய்வ தரிசனத்தைப் பெறுகிறார். சமாதி நிலை எய்துகிறார். இந்த இரண்டாவது வழி விஞ்ஞான தோரணையில் வளர்ச்சி அடைகிறது. இதுதான் பக்தி யோகம்!

3. சிந்தனை ஆற்றல்: அறிவு ஜீவிகளிடம் ஆக்கிரமித்துள்ள சிந்தனை ஆற்றலினால் ஒவ்வொன்றிலும் காரண காரியத்தை ஆராய்வார்கள். அவர்களையே தத்துவவாதிகள்என்பர்.அவர்கள் இருவகைப்படுவர். கற்பனாவாதிகள், அனுபவ வாதிகள் ஆவர்.

இந்தக் கற்பனைமிக்க தத்துவவாதிகளில் பெரும்பாலோர் குழப்பவாதிகள். நல்லதே தெரியாதவர்கள். தங்களிடமுள்ள அகந்தையை வளர்த்துக் கொள்கிறார்கள். துன்பத்தில் உழல்கிறார்கள்.

"ஒரு உண்மையான, அனுபவமிக்க தத்துவவாதி தன்னுடைய ஆன்மீக வாழ்வை

இம்முறையில் துவங்குகிறார். முதலில் 'நான் யார்?' என்ற வினாவைத் தொடுக்கிறார். பின்னர் பகுத்தறியத் தொடங்குகிறார். இந்த உடலே நானா!—இல்லை; இந்த உடல் 'நான்' அல்ல, இந்தப் புலன்களும் 'நான்' அல்ல; இந்த மனமும் 'நான்' அல்ல! இவை களனைத்துமே மாறக் கூடியவை; நிலை யற்றவை!

''இவற்றில் எதுவுமே 'நான்' அல்ல! 'நான்' சத்-சித்-ஆனந்தம் (உயிர்—அறிவு—பேரானந்தம்). ஒன்றே — இரண்டாவது இல்லை! 'நான்' பேரான்மா அல்லது 'பிரம்மம்' இது பிறப்பற்றது; வளர்ச்சியற்றது; அழிவற்றது; மரணமற்றது; ஆண்—பெண் பேதமற்றது. 'நான்' புனிதமானவன்; பந்த மற்றவன்.

இதே முறையில் தனது மனத்தைப் பேருண்மைப் பொருளில் இடையறாது ஈடுபடுத்துகிறான். பொய்த் தோற்றத்தை விலக்கி சமாதி எய்துகிறான். பிறவித் தளை யைத் தகர்க்கிறான். இந்த வழியே ஞான யோகம்.

பகுத்தறிவுப் பாதையில் 'ஞானயோகம்' வளர்ச்சியடைந்துள்ளது.

4. ஒருமுகப்படுத்தும் ஆற்றல் : விருப்பு, வெறுப்பு ஆகிய இரண்டு உணர்விலுமே மனம் ஆழ்ந்து நிலைத்து விடுகிறது. ஒன்றை விரும்பும்போது அதே நினைவுடன் இருக்கிறீர்கள்; ஒன்றை வெறுக்கும்போதும் அதைப் பற்றிய எண்ணமே நிலைத்து விடுகிறது.

இந்த ஆற்றலைச் செயல்படுத்தும்போது மனத்தின் விருப்பு, வெறுப்பு உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடிகிறது. இதுவே ராஜயோகம் என்னும் நான்காவது வழியாகும். மனத்தைக் கட்டுப்படுத்துவதில் இந்த வழி விஞ்ஞான ரீதியில் விரிவடைந்திருக்கிறது. இதனால் சமாதிப் பேற்றை எய்தவும் முடிகிறது.

ராஜ யோகமானது மனம், ஆசைகள், எண்ணத்தின் செய்கைகளை ஆராய்ந்து அலசி முடிவெடுக்கிறது. மேலும் அது மனக்கட்டுப் பாட்டிற்கான விதிமுறைகளையும் வழிமுறை களையும் வகுக்கிறது.

எந்த வழிமுறையை ஒருவர் பின்பற்றினா லும் மனக்கட்டுப்பாடே குறிக்கோள். அதன் மூலம் தனது மூலப்பொருளில் போய்ச் சேருவது இலட்சியமாகிறது.

மனக்கட்டுப்பாட்டினால் மட்டுமே உண்மையான அமைதியையும், மகிழ்ச்சியையும்

ஒருவர் பெற முடியும். உலகிலுள்ள எல்லா மதங்களுமே இந்த நான்குபாதைகளில் ஒன்றைப் பின்பற்றுகிறது. அவை தொழில் செய்தல், பக்திவழி, மனக்கட்டுப்பாடு, அல்லது தத்துவம் ஆகிய ஏதாவதொன்றிற்கு முக்கியத்துவமளிக்கிறது.

இந்த விளக்கத்திற்குப் பின்னர் உலகாயதத்தில் திளைத்திருக்கும் சிலர் கீழ்க்கண்டவாறு வினாக்களைத் தொடுக்கக் கூடும்.

"எதற்காக இந்தத்தொல்லைகள்? மனக்கட்டுப்பாடு தேவையா? ஆன்ம விடுதலை என்றால் என்ன? சமாதி நிலை எனில் எது?"

இதோ அதற்கு எளிமையான பதில் :

'பிறப்போடு வந்த போக்கு ஒன்றுள்ளது; விடுதலைக்கான போக்கே அது. ஒவ்வொரு உயிரினமும் உணர்ந்தோ உணராமலோ இந்த விடுதலையையே தேடுகின்றன. துன்பத்தை யாருமே விரும்புவதில்லை. நோயும், மரணமும் அனைவரையுமே அச்சுறுத்துகிறது. இருப்பினும் மனிதன் திசைமாறிப் போவதால் நரக வேதனையில் உழல்கிறான். ஒரு சாதாரண மனிதன் புலன் இன்பங்களிலும், பணம் பண்ணுவதிலும், பெயர் புகழிலும் மட்டுமே மகிழ்ச்சி இருப்பதாக எண்ணுகிறான். இவை உண்மையில்

ஒருவனுக்கு மகிழ்ச்சியைத் தருகிறதா? இல்லவே இல்லை. அவை துன்பங்களை அதிகரிக்கின்றன.

அவை கணநேர இன்பத்தையும், திருப்தியையும் மட்டுமே தருகின்றன. மனம் புதுமைகளுக்காக மாறி மாறிப் புதிய போகங்களை அனுபவிக்க அவா வுறுகிறது. அதன் ஆசைகளுக்கு முடிவே இல்லை. திருப்தியும் கிடையாது. நிம்மதியும் இல்லை. சாகும்போது குறைபாடுடனே சாகிறான்.

ஆயின் உண்மையான மகிழ்ச்சி எதில்? தனது உண்மையான சுபாவத்தை அறிந்து கொள்வதி லேயே அந்த மகிழ்ச்சி ஏற்படுகிறது.

ஒருவன் தனது உண்மை சொரூபத்தையும், தனது மூலப் பொருளையும் அறிந்து அடைவதற்கு மனத்தையும், புலன்களையும் கட்டுப்படுத்த வேண்டும். மனம், புலன்களைக் கட்டுப்படுத்த எளிய தூய-புனித நெறிமிக்க வாழ்வைக் கடைப்பிடித்துச் சாதனையைப் பழக வேண்டும். (மனக்கட்டுப்பாட் டைப் பழகுதல்) இன்றேல் மனம் கட்டுக்கு அடங் காது.

பொதுவில் ஒருவன் 'என்னுடைய உடல்', 'என்னுடைய புலன்கள்', 'என்னுடைய மனம்' என்கிறான். எவரும் அவனே உடல்; அவனே மனம் என்று சொல்வதில்லை. ஆகவே உண்மையை அறியாமலேயே ஒருவன் பின்வருமாறு கூறுகிறான்.

''அவன் உடல் அல்ல; அவன் புலன்களுமல்ல; அவன் புத்தியும் அல்ல — எனில் அவன் யார்?''

ஒருவனுடைய பேருண்மையாக உள்ள இயல்பை அறிவதற்காக வகுக்கப்பட்டுள்ள முறைகளும், பாதைகளும் அவன் புறப்பட்டு வந்த மூலப் பொருளையே சென்று அடைதல் ஆகும். இதையே மதம், தத்துவம் என்றழைக்கிறோம். ஒவ்வொரு உயிரும் மூலப் பொருளைப் போய்ச் சேர்ந்தேயாக வேண்டும். அதற்கான கால அளவு எவ்வளவு? இன்றே நடக்கலாம். அல்லது நாளைக்குள் முடியலாம். இந்தப் பிறவியிலேயே நிகழலாம். பல பிறவிகள் எடுத்த பிறகும் முடிவுறலாம். எப்படியும் ஒருவன் அந்த பேருண்மையைக் கண்டேயாக வேண்டும். மூலப் பொருளில் போய்ச் சேர்ந்தே தீர வேண்டும். இவ்வளவு அறிந்தபிறகும் உங்களுடைய பொன்னான நேரத்தைத் தோன்றி மறையும் சுக போகங்களில் வீணடித்துத் துன்பத்தில் உழலாதீர்கள்!

இதே கணத்தில் உண்மையான வாழ்வைத் தொடங்குங்கள். இக்கணமே நல்வாழ்வைத் தொடங்கி விடுங்கள். எழுமின்! விழிமின்!! வெற்றி முனையைச் சேரும் வரை நிற்காதீர்கள்!!

# 4. பிரம்மச்சரியம் - பிரம்ம ஞானம்

## (கற்பு நெறி - ஆன்ம அறிவு பெறுதல்)

நிர்விகல்ப சமாதி நிலையும், ஆன்ம அறிவைப் பெறுதல் எனும் பிரம்ம ஞானமும் ஒன்றோடொன்று இணைந்தவை. நிர்விகல்ப சமாதிப் பேற்றை எய்தாமல் யாருமே வாலறிவைப் பெற முடியாது என்பதுவே உண்மை. குண்டலினி சக்தி முழுமை யாக சகஸ்ராரத்தை (சிரசின் உச்சியை) அடைகின்ற போதுதான் நிர்விகல்ப சமாதி நிலை கிட்டுகிறது.

மூவகைத் தூய்மைப் பேறுகளான உடல் தூய்மை, நாடிகளின் தூய்மை, மனத் தூய்மை களைப் பெற்றாலன்றிக் குண்டலினி சக்தி முழு அளவில் மேலுக்கு எழாது.

தூய்மையற்ற உணவாலும், கெட்ட ஆசைகளா லும், தீமை விளைவிக்கும் பாபச் செயல்களாலும் மனம், நாடிகள், உடல் மூன்றும் மாசடைகின்றன! உடல், மனத்தின் மிகப்பெரும் பிழையாகக் கருதப் படுவது காமம். ஒவ்வொரு உடலுறவின்போதும் உடல், மனம் முழுவதிலும் பெருந்தீங்கு விளைகிறது. விந்து சக்தியின் இழப்பு மட்டுமின்றி ஒவ்வொரு முறை விந்து வெளியேற்றத்தின்போதும் பெருமளவு

ஓஜஸ் சக்தி (மாபெரும் மனோசக்தி) இழக்கப் படுகிறது.

சூக்கும நிலையிலுள்ள நீராவியை குளிர்ச்சி யூட்டும்போது அது தூல நிலைக்கு வரத் துவங்கு கிறது. முதலில் மேகம், அடுத்து நீர், அதன் பின்னர் பனி - முடிவில் பனிக்கட்டியாகிறது. அதே போலப் பிரம்ம சக்தி (பிரகிருதி சக்தி) பரிணாம வளர்ச்சி பெறும் நிலையில் முதலில் 'ஆவி'யாகவும், பிறகு மனம், தொடர்ந்து ஜடம், முடிவில் பெயர் களும் உருவங்களும் பெற்ற அகிலமாகக் காட்சி யளிக்கிறது. பிரகிருதி சக்திக்கு இருவேறு ஆற்றல் கள் உண்டு. நேரானவை (Positive); மாறானவை (Negative). முதன் முதலில் அது மாறான உருவ மும், நேரான உருவமும் பெற்ற பிராண சக்தியா கிறது. இப்படியே நேர்மாறான இருவேறு நிலை களை உடையதாகிறது. முடிவில் ஆண், பெண் இனங்களாக வடிவெடுக்கிறது. இந்த இருவேறு சக்திகளின் இணைப்பினால் விளைவுகள் உண்டா கின்றன.

சீவ அணு முதலில் உற்பவிப்பது சிரசின் மையம். இந்த உடலைத் தோற்றுவிப்பதற்கு முன்னர் 'சிவமும் சக்தியும்' (குண்டலினி சக்தி) காரண ரூபத்தில் ஒன்றாகவே இருக்கிறது. குண்டலினி சக்தி பின்னர் கீழிறங்குகிறது. (அது) மேலும் மேலும் தூல வடிவம் பெற்று உருவாகிக் கொண்டே வருகிறது. முதலில் ஆகாயம்,

பின்னர் காற்று, தொடர்ந்து அக்கினி- அடுத்து நீர்- முடிவில் மண். இந்த முடிவிலுள்ள மையமே மூலாதாரச் சக்கரம்! சக்தி இந்தச் சக்கரத்தில் தங்கி மின் உற்பத்திச் சாதனமாக உருப்பெறுகிறது. சராசரி மனிதனின் உடலில் சரீரத்தையும் மனத்தையும் இயக்குகிறது.

ஓர் உயிருள்ள உடலில் ஓடும் நாடிக்கதிர் ஓட்டங்களையும் அதன் முக்கியத்துவத்தையும் மருத்துவ விஞ்ஞானம் கண்டுபிடித்து விட்டது. ஆயினும் இதற்கான மின் இயக்கி சாதனமுள்ள இடத்தை அவர்கள் புரிந்து கொண்டபாடில்லை. நாடி சக்திக்கு மூலகாரணம் குண்டலினி சக்தி.

இந்தச் சக்தியின் மின் இயக்கி சாதனம் (Dynamo) மூலாதாரச் சக்கரம். சக்தி இந்தச் சக்கரத்தில் — மூலாதாரத்தில் தங்கியுள்ளவரை ஒருவன் தமோ குணம் மிக்கவனாக இருக்கிறான். அவன் மிருகத்தைவிடக் கடைப்பட்டவன். அவன் மந்த புத்திக்காரன்; முட்டாள்! தர்மத்திற்கும் உண்மைக்கும் அவனுக்கும் வெகு தூரம். இவர்கள் புலன் போகங்களிலேயே நாட்டமுடையவர்கள். அவர்களால் பிரம்மஞானத்தை அடையவே முடியாது.

குண்டலினி சக்தி இருவேறு எதிர்மாறான திசைகளில் செல்வன - கீழ்நோக்கியும் மேல்நோக்கியும்! உடலுறவு இன்பத்தில் ஈடுபடுவதால் அது எளிதாகக் கீழ் நோக்கி இறங்குகிறது. கற்பு

நெறியை மேற்கொண்டு மந்திர ஜபம், தியானம் பிராணாயாமம் போன்றவற்றைப் பயில வேண்டும். அதன் மூலம் மூவகைத் தூய்மை நிலைகளை (உடல் நாடிகள், மனம் ஆகியவற்றின் தூய்மை)ப் பெற்றால் சக்தி மேல் நோக்கி ஏறுகிறது. குண்டலினி சக்தி முதல் நான்கு மையங்களில் இயங்கும்போது மட்டுமே காமக் களியாட்டங்களை அனுபவிக்க இயலும். குண்டலினி சக்தி முழுமையாக ஐந்தாவது சக்கரத்திற்கு ஏறி விடுமானால் காம உணர்வு மடிந்து விடுகிறது. விந்து வற்றி விடுகிறது.

குண்டலினி சக்தி சிரசின் மையத்தை - சகஸ்ராரத்தை முழுமையாகப் போய்ச் சேர்ந்ததும் அது தன்னிலை (Static centre) பெறுகிறது. அதுவே அது புறப்பட்ட இடம். இந்த இடத்தில் சிவத்துடன் மீண்டும் சேர்ந்து காரண உருவத்தைப் பெறுகிறது. மறுபடியும் கூடிய இந்த ஐக்கியமே நிர்விகல்ப சமாதி அல்லது பிரம்மஞானம். எண்ணம், சொல், செயலில் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்காதவன் பிரம்மஞானத்தைப் பெற முடியாது. இந்த சீரிய உண்மைகளை மறுப்பவர்கள் மோசடிக்காரர்கள்; பிரம்மச்சரிய நெறியைக் கடைப்பிடிக்காமலேயே குருவாக பாவனை செய்பவர்கள்; இவர்கள் அப்பாவி மக்களின் வாழ்வைப் பாழடிக்கிறார்கள். உலகில் எந்தப் பகுதியில் வாழும் மனிதனோ, மதமோ எதுவாயினும் சரி, அவர்களுக்கு இந்த உண்மையை நிரூபிக்க நான் எத்தகைய சவாலையும் ஏற்றுக் கொள்ளத் தயார்!

# 5. குரு

குரு என்பவர் யார்? சற்குரு என்றழைக்கத் தகுதியானவர் யார்? இந்நாளில் ஒன்றுமறியாத மடையர்கள் குரு பாவனையில் நடிக்கிறார்கள். இது ஒரு குருடன் மற்ற குருடர்களை வழி நடத்திச் செல்வது போலாகும். இரு சாராரின் வாழ்க்கையுமே அபாயத்தில் கொண்டு சேர்க்கும். இது போன்ற குரு - சீடர்களின் நிலை அர்த்தமற்றது. அவர்களால் ஆன்மிக முன்னேற்றம் அடைய முடியாது. பகல் வேடதாரிகளான இந்த யோகிகளும், குருமார்களும் தவறான முறையில் பொருள் திரட்டுகிறார்கள். சீடர்களை நரக வேதனையில் விட்டு விட்டு ஓடிப் போகிறார்கள். பல உண்மையான சாதகர்கள் (ஆன்மிகவாதிகள்) இந்த யோகிகள் குருமார்களின் பொய்ப் பிரச்சாரத்திற்குப் பலியாகிறார்கள்.

சித்து விளையாடல்கள் என்றால் உயிரோடு விளையாடுவதற்கு ஒப்பாகும். ஆன்மிகத்தில் சிறு அளவு முன்னேற்றத்தின் போதே ஒருவருக்கு சித்துக்கள் சித்திக்கிறது. அவற்றைக் காட்டிப் பிரபலப்படுத்துவதால் ஆன்மிகத்தில் வீழ்ச்சியுறுகிறார்கள். ஒருவர் சமாதிப் பேற்றை எய்த விரும்பினால் இந்தச் சித்தாடல்களைக் குப்பைக் கூளமென ஒதுக்க

வேண்டும். உண்மையான ஆன்மிக ஆசான் இது போன்ற சித்துக்களை (ஆன்மிக சக்தி வெளிப்பாடு களை)ச் செய்யவே மாட்டார். பெயர், புகழ், பணத்தைத் தேடி அலைய மாட்டார். பொய்ப் பிரசாரத்திற்கு இடங் கொடுக்க மாட்டார்.

சவிகல்ப அல்லது நிர்விகல்ப சமாதி (உருவ அல்லது அருவ நிலை பெற்ற சமாதி) எய்தியவரே உண்மையான குருவாக இருக்கத் தகுதியானவர். அவர் கடவுளை அறிந்தவர். கடவுள் உருவத்தைக் கண்டவர். தன்னிடமுள்ள பேருண்மையை — அதாவது ஆன்மாவை அல்லது பிரம்மத்தை அறிந் தவர். பிரம்மத்தை அறிந்த அவர் பிரம்மமாகவே ஆகிறார். ஏனெனில் அவர் மனம் தனக்கென ஒரு நிறத்தையோ உருவத்தையோ பெறாத நிலையை அடைகிறது. ஆனால் தனது எண்ண வடிவத்தையும் நிறத்தையுமே பெறுகிறார். ஒருவன் இடையறாது கடவுளை நினைத்தே வாழ்ந்து அவருடைய மகா சக்தியையும், பேராற்றலையும் எண்ணிய வண்ணம் இருப்பதால் அதுவாகவே அவன் ஆகிறான். ஆதலின் தெய்வ தரிசனம் பெற்றவரும், சமாதிப் பேற்றை எய்தியவருமே குரு அல்லது சற்குரு என்று சொல்லத் தகுதி வாய்ந்தவர். அவரே மாறாத நெறி மிக்கவர். அவருடைய போதனை களே எப்போதும் பாதுகாப்பானவை. பயன் தருபவை. ஆதலின் விழிப்புடன் இருந்து. பகல் வேடக் குருமார்களை ஒதுக்குங்கள்!

# 6. சாதகனுக்கு குருவின் அவசியம்

பரந்த நோக்கில் பார்த்தோமானால் சாதகர்களை மூன்று பிரதானப் பிரிவுகளாக வகைப்படுத்தலாம். ஒரே பிறவிக் கொள்கையில் பற்றுள்ளவர்களுக்கு இதன் விளக்கத்தைப் புரிந்து கொள்ள முடியாது. பிறவி என்பது சாதாரண விஷயமல்ல. அதற்கு ஆழ்ந்த அர்த்தமுண்டு. ஒருவர் ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் வடிவில் எதை ஊன்றுகிறாரோ அதன் பலனையும் அவரேதான் அனுபவித்தாக வேண்டும். யாராலும் இதைத் தவிர்க்க முடியாது. செய்கையும் அதன் பலனும் ஒன்றை ஒன்று சார்ந்திருப்பது. நம்முடைய இன்ப - துன்பங்கள் கடந்த கால நடவடிக்கைகளின் பலனேயாகும். ‘மரணம்’ என்பது தூல உடல் மட்டும் அழிவதாகும்.

சூக்கும உடல், மனம், அகந்தை, புத்தி, குண்டலினி சக்தி, சித்தம் (மனக்கோப்பு) ஆன்மா ஆகியவை அழிவதேயில்லை. மரணமடையும்போது சூக்கும உடல், மனம், அகந்தை, புத்தி, குண்டலினி சக்தி, சித்தம் ஆகிய அனைத்தும் காரண உடலில் போய் அடங்கி ஜீவ ஆன்மாவுடன் இணைந்து விடுகிறது. ஜீவ ஆன்மா புதிய பிறவி

எடுக்கும்போது இவை அனைத்துமே புதிய உடலில் மறுபிறவியாக உருப்பெறுகிறது.

காரணமில்லாமல் காரியமில்லை. முற்பிறப்பின் செய்கைகளே இப்பிறப்பின் காரணமாகிறது. நற்குணங்களும் தீய குணங்களும் ஒரே மாதிரி உள்ளவர்கள் குறிப்பிட்ட ஒரே சூழ்நிலை அமைந்த தேசத்தில் போய்ப் பிறக்கிறார்கள். அதிக அளவில் ஒற்றுமையுள்ள குணங்களுடையவர்கள் ஒரே சாதியில் போய்ப் பிறக்கிறார்கள். மிக அதிக ஒற்றுமையுள்ள குணங்களுடையவர்கள் குடும்பத்தில் ஒரே தாய் வயிற்றில் பிறக்கிறார்கள். மந்திர ஜபம், தியானம் தினசரி பயின்று தூய-எளிய தெய்வீகக்கற்பு நெறி மிக்க வாழ்வைக் கடைப் பிடிப்பவர்கள், இப்பிறவியில் இறையுணர்வைப் பெறத் தவறி விடுகிறார்கள். அவர்கள் மரணத்திற்குப் பின்னர் கண்ணியமிக்க, புனிதமுள்ள, தெய்வீகம் நிறைந்த குடும்பத்தில் பிறக்கிறார்கள். அவர்களுக்கு நல்ல சாதகமான சூழ்நிலை அமைகிறது. அடுத்த பிறவியிலேயே அவர்கள் சமாதிப் பேற்றை அடைய முடியும்.

உயர் தகுதிகள் படைத்தவர் பலர் உள்ளனர். அவர்கள் மந்திர ஜபத்தையும் தியானத்தையும் மேற்கொண்டு கடுமையாக சாதனை புரிகிறார்கள். சமாதி நிலை கிடைக்கும் தறுவாயில் மரணமடைகிறார்கள். அது போன்றோர் இப்பிறவியில் பிறக்கும்போதே ஞானத் தெளிவுடன் பிறக்கிறார்கள்

உயர் தகுதிகள் சற்றே குறைந்த நிலையில் இறந்த சிலர் இப்பிறவியில் மிகவும் கவனத்துடன் உலக நடவடிக்கைகள் எதிலும் மாட்டிக் கொள்ளாமல் வாழ்கிறார்கள். அது போன்றோர் அவர்களுக்கேற்ற பாதையை வகுத்துக் கொள்கிறார்கள். குருவின் துணையின்றியே சமாதிப் பேற்றை எய்துகிறார்கள். இந்த அகிலத்தில் இது போன்றோரின் எண்ணிக்கை மிக மிகக் குறைவு. இந்த இருபிரிவினரைத் தவிர பெரும்பாலான ஆன்மிகவாதிகளுக்கு (சாதகர்களுக்கு) அவர்களை வழிநடத்த குரு ஒருவர் தேவை.

நீங்கள் வெகுதூரத்திலுள்ள ஓர் இடத்திற்குப் பயணிக்கிறீர்கள். பயணத்தைத் துவக்குவதற்கு முன்னர் நீங்கள் பார்க்கப் போகும் இடத்தைப் பற்றிய புத்தகங்களைப் படிக்கிறீர்கள். வரைபடங்களைப் பார்க்கிறீர்கள். ஏற்கனவே சென்று வந்தவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்கிறீர்கள். இதுவே இயற்கை நியதி.

உயர்நிலைப் பேற்றினை எய்திய ஒரு குருவினால் மட்டுமே ஒரு சீடனுக்கு அவன் குறிக்கோளை அடைய மிகச்சரியான வழியைக் காட்ட முடியும். ஆன்மிக வழி நெடியது. தளர்ச்சியைத் தருவது. வழி நெடுகப் பள்ளங்களும், அபாயங்களும் நிறைந்தது. ஒரு சாதாரண ஆன்மிக சாதகன் அடிக்கடி குழப்பத்திற்குள்ளாக நேரிடும், சந்தேகங்கள் எழும். அப்போது சாதனையை கைவிட நேரிடும் அல்லது தவறான வழிமுறைகளைப்பின்பற்றி தீர்க்க முடியாத நோய்களுக்கு உள்ளாகலாம். பெரும் சாதகர்கள் சாதகத்தின்போது தங்களைவழிநடத்தும் குருவின் அவசியத் தேவையை உணர வேண்டும்.

# வாழ்க்கையின் குறிக்கோள்

*ஓம் பூர்ணமதப் பூர்ணமிதம்*
*பூர்ணத் பூர்ணமுதச்யதே*
*பூர்ணஸ்ய பூர்ணமதாய*
*பூர்ணமேவ வசிஷ்யதே*
*ஓம் சாந்தி ! சாந்தி !! சாந்தி !!!*

பொருளுரை: பிரம்மம் அல்லது மேலான பரம் பொருள் முழுமையானது (எங்கும் நிறைந்தது.) அந்தப் பூர்ண பிரம்மத்திலிருந்து இந்த அகிலத்தின் பெயர்களும், உருவங்களும் தோன்றின. விரிந்த இந்தப் பரந்த அகிலாண்டம் (பிரம்மானந்தம்) பிரம்மத்திலிருந்தே தோன்றியது. ஆயினும் பிரம்மம் எங்கும் நிறைந்துள்ளது.

ஓம் சாந்தி! சாந்தி !! சாந்தி !!!

இது ஒரு வேத வாக்கியம். புதிரானது, பெயர் களும், உருவங்களும் பெற்று இந்த அகிலம் பிரம்மத்திலிருந்து வெளி வந்த பிறகுகூட பிரம்மம் மட்டும் குறையாமல் முழுமையாக இருப்பது எவ்வாறு? ஒரு உதாரணம் பார்ப்போம்.

ஒரு காட்டிலிருக்கும் மரத்தின் இலைகளில் படிந்துள்ள பனித்துளிகளில் உதயசூரியனின் கதிர்

கள் விழுகின்றன. பார்ப்பதற்கு எண்ண முடியாத சின்னஞ்சிறு சூரியன்கள் பிரதிபலிக்கின்றன. இதைப் பார்த்த ஒரு குழந்தை இந்த சின்னஞ்சிறு உருவங்கள் அனைத்துமே பல சூரியன்கள் என எண்ணிக் கொள்கிறது. ஆனால் ஒரு மனிதனானவன், ''ஒரே சூரியனுடைய எண்ணற்ற பிரதி பிம்பங்கள் தான் அவை. உண்மையான சூரியன்கள் அல்ல'' என்று புரிந்து கொள்கிறான். உண்மையில் இருப்பது என்னவோ ஒரே ஒரு சூரியன்தான்.

இதேபோல் பெயர்களும் உருவங்களும் தாங்கிய இந்த அகிலம் பரம்பொருளுக்கு கடவுள் அல்லது பிரம்மத்துக்கு — அப்பாற்பட்டு தனித்து இயங்கவில்லை.

நிர்விகல்ப சமாதிநிலை எய்தியவருக்குப் பெயர்களும் உருவங்களும் கொண்ட அகிலம் முழுமையாக மறைந்து போகிறது. அதன்பிறகு மீதமிருப்பது உயிர்ச்சார மகாசமுத்திரமான பிரம்மம் மட்டுமே! இந்த விளக்கத்தின் அடிப்படையில் பார்த்தால் அகிலம் என்பது ஒருதோற்றமே! புரிந்து கொள்ளாத நிலையில் ஏற்படும் மனம் உமிழ்த் தோற்றமே அது! நிர்விகல்ப சமாதி நிலையில் இந்த அறியாமை அழிந்து விடுகிறது. மனம் பளிங்குபோல் தூய்மை பெறுகிறது.

பெயர்களும் உருவங்களும் உள்ள அகிலம் மறைந்தவுடன் அவர், வேற்றுமையில் ஒற்றுமையை

காண்கிறார். ஒரே பிரம்மம் பலவாகத் தோன்றுவ தென்பது இல்லவே இல்லை! அது முன்பே இருந்தது; இப்போதும் இருப்பது; இனியும் இருக்கப் போவது. எப்போதும் அது ஒன்றே ஒன்றுதான்!

மனித வாழ்வின் நால் வகைக் குறிக்கோளாக இருப்பது தர்மம், (அறம்), அர்த்தம் (செல்வம் அல்லது பொருள்), காமம் (ஆசை, காமம், யோகம்) மோட்சம் (ஆன்ம விடுதலை அல்லது முக்தி) ஆகும்.

தர்மத்தை அடித்தளமாகக் கொண்டு அர்த்தம், காமம் இரண்டும் மோட்சத்தை எய்துவதற்கான வழியை வகுக்கிறது.

தர்மம்' என்னும் சொல் வடமொழிச் சொல், 'வழுவாமல் தாங்கி நிற்பது' தர்மம். பல்வேறு வகுப்பினர் மோட்சத்தை எய்துவதற்காக வகுக்கப் பட்ட வழிமுறைகளே தர்மம் ஆகும். காலை முதல் மாலைவரை மட்டுமின்றி பிறப்பு முதல் இறப்பு வரை மனிதன் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறை களே தர்மம். மனச்சாட்சியினால் நல்லது இது, கெட்டது இது என்று தேர்ந்தெடுக்கும் முறையே தர்மம்.

வாழ்க்கையின் கெடுதல்கள், துன்பங்கள், பந்த பாசங்கள் ஆசைகளைக் களைந் தெறிவதற்கான வழிவகைகளை வகுப்பதே தர்மம்.

ஒருவருடைய பண்பை வளர்ப்பதற்காக வகுக் கப்பட்டுள்ள விதிகளும், முறைகளும், மனத்தையும்,

புலன்களையும் அடக்கி ஆள்வதற்கான வழிமுறைகள், மதத்துறைத் தலைவர்கள் அனுசரிக்க வேண்டிய தினசரிக் கடமைகள் போன்றவையும் தர்மத்தின் பாற்பட்டதே?

எல்லாத் தர்மங்களுக்கும் மையமாக இருப்பவர் கடவுள். தர்மத்தின் கட்டுக்கோப்புக்குள் அர்த்தமும் காமமும் செயல்பட வேண்டும்.

தர்மம் மூன்று பிரதான பிரிவுகளைக் கொண்டது. 1. சித்ததர்மம் (சுயம்புவாய் உள்ள தர்மம்) 2. சத்தியதர்மம் (தர்மத்தில் முடியும் தர்மம்) 3. சாதன தர்மம் (குறிக்கோளை எய்துவதற்கான வழிமுறையை வகுக்கும் தர்மம்.

## 1. சித்த தர்மம்

அனாதி காலந்தொட்டு அகிலத்தைத் தாங்கிக் காத்துவரும் அழியாக் கொள்கையாக இருப்பதே சித்த தர்மம். சித்த தர்மத்திற்குப் புதுமையாகச் சேர்க்க வேண்டியது ஒன்றுமில்லை. அது ஆதியிலிருந்தே தோன்றியிருப்பது; நிரந்தரமானது; அகண்டமானது.

சித்த தர்மத்தைக் கடவுளின் அவதாரமாகவுள்ள ஆச்சாரிய நாயகர்களால் மட்டுமே நடத்திக் காட்டமுடியும்!

## 2. சாத்திய தர்மம்

சாத்திரங்களில் வகுக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகளுக்குட்பட்டுக் கடமையாற்றும் மனிதர்களுக்குக் கிடைக்கும் பேறுதான் சாத்திய தர்மம்.

## 3. சாதன தர்மம்

சாதனதர்மம் சாத்திய தர்மத்தில் சொல்லியுள்ளபடி கடைப்பிடித்தொழுகுவதே சாதன தர்மம். சாதன தர்மத்தை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

அகில முழுமைக்குமான சாதன தர்மம்; குறிப்பிட்ட ஒன்றுக்கான சாதன தர்மம்.

அகில முழுமைக்கான தர்மத்தை மூன்று தலைப்புகளில் பிரிக்கலாம். உடல்; சொல்; மனம்.

உடலால் செய்யப்படும் தர்மமாவது: தான தருமங்கள் செய்வது; தன்னலத் தியாகம்; கொல்லாமை; சுத்தம்; கள்ளாமை; பலவீனர்களைக் காப்பது; குரு சேவை; தேவைக்கு உதவுதல்; அனாதைகளுக்கு அடைக்கலம் போன்றவை ஆகும்.

வாக்கினாலான தர்மம்: உண்மை பேசுதல், சாத்திரங்களை வாய் திறந்து படித்தல், கடவுள் நாமாவைப் பாடுதல் போன்றவை.

மனோ தர்மம்: போதுமென்ற மனம், கடவுள் நம்பிக்கை; உண்மை; தூய்மை; மனக்கட்டுப் பாடு; கடவுளிடம் இடையறாத ஈடுபாடு; தன்னல மின்மை; அடக்கம்; எல்லா உயிரினங்களிடத்தும் பரிவு போன்றவை.

அகில முழுமைக்குமான இந்தத் தர்மம் எல்லா வருணத்தாருக்கும் அனைத்து ஆசிரமநெறிகளுக்கும் மதவாதிகளுக்கும், நாடுகளுக்கும் பொதுவானது. காலதேச வர்த்தமான மாற்றங்களால் இதுபாதிக்கப் படுவதில்லை.

## குறிப்பிட்ட ஒன்றிற்கான தர்மம்

குறிப்பிட்ட தர்மம் என்பது காலம், தேசம், சூழ்நிலை, குடும்பம், இனப் பாகுபாடு, வயது, நல்லதும் கெட்டதும், வருணங்கள், வருண ஆசிரமங் களைப் பொறுத்து அமைகின்றன. இந்தத் தர்மம் மேற்கூறியவற்றுள் ஏதாவதொன்றுக்கு மட்டுமே பொருந்தும். ஒன்றுக்கு நல்லதாக அமைவது மற்ற தற்குப் பாபமாக இருக்கலாம்.

## வருண தர்மம்

இந்து மதம் சமூகத்தை நான்கு வருணங்கள் அல்லது சாதிகளாக வகுத்துள்ளது. அதாவது:

பிராம்மணன். க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்பன. இந்த தர்மம் தற்காலத்திற்குப் பொருந்தி வராது. அதனால் இதை நாம் விட்டு விடுவோம்.

## வருணாசிரம தர்மம்

பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன் போன்றவர்களின் வாழ்க்கை நான்கு ஆசிரமப் பிரிவுகள் அல்லது நிலைகளாகப் பகுத்திருந்தனர். பிரம்மச்சாரி (மாணவன்), கிருகஸ்தன் (இல்லறத்தான்), வானப்பிரஸ்தன் (ஓய்வு பெற்ற வனவாசம்), சந்நியாசி (துறவி) ஆகும்.

## பிரம்மச்சாரி ஆசிரம தர்மம்

பிரம்மச்சாரி ஆசிரமத்தை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். ஒருவருடைய எதிர்கால வாழ்வு முழுமைக்கும் அடிப்படையாக அமைவது பிரம்மச்சரியமே. பிரம்மச்சரிய வாழ்க்கையை உதாசீனப் படுத்துபவன் வாழ்வில் நிச்சயமாக தோல்வியுற்று நரக வேதனைக்குள்ளாகிறான்.

மன அமைதி, செல்வவளம், மகிழ்ச்சிகரமான வாழ்க்கை அமைந்து வாழ வேண்டுமென்று விரும்புபவர்கள் பிரம்மச்சரிய வாழ்க்கையில் கருத்தூன்றி பண்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். இதில்

பரிதாபத்திற்குரியது என்னவெனில் பெரும்பான்மையினர் பிரம்மச்சரியத்தை ஏன் கடைப்பிடிக்க வேண்டுமென்ற அர்த்தத்தை உணராமல் இருக்கிறார்கள். நவீன கல்வி முறையும் மாணவர்களைத் தவறான பாதையில் திருப்புகிறது.

உயிரியல் வல்லுனர்களும், உடலுறவு இயல் வல்லுனர்களும் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்கும் ஒருவனுக்கு நரம்புத் தளர்ச்சி வியாதியும், மூளைக் கோளாறும் ஏற்படுகிறது என்கின்றனர். இது ஒருதலைப் பட்சமானது. அர்த்தமற்றது. முட்டாள் தனமானது. இந்த விஷயத்தை நான் ஐரோப்பாவிலிருந்தபோது மறுத்து ஆன்மீக உலகத்துக்கே விடுத்த சவாலாக ஏற்று அதை நிரூபித்தேன். உயரிய ஆன்மீகப் பேற்றை எய்த பிரம்மச்சரியத்தின் இன்றியமையாமையை விளக்கிக் காட்டினேன். இதன் பொருட்டே நான் எண்ணம், சொல், செயலில் நிலையான பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்காதவர்கள் பிரம்ம ஞானத்தைப் (ஆன்ம ஞானத்தை) பெற முடியாது என்பதை இது நாள் வரை வற்புறுத்திக் கொண்டு வருகிறேன்.

ஒரு உறுதியான பிரம்மச்சாரி உச்சிகால சூரியனைப் போல் பிரகாசிக்கிறான். உண்மையான பிரம்மச்சாரி எதையும் எளிதில் சாதிக்க முடியும்.

மனித இனத்தை மூன்று பிரதான பிரிவுகளாகப் பிரிக்கலாம். மிருக மனிதன், மனிதன், தெய்வீக மனிதன்.

மிருக மனிதனைப் பார்த்து, 'நீ நன்றாகச் சாப்பிடு; நிறையச் குடி: குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொள்; உன் விருப்பம் போல் ஆடு!' என்று நான் சொல்வேன்!

'உன்னோடு வாதாடி எனது பொன்னான நேரத்தை வீணடிக்கப் போவதில்லை! குறைந்த பட்சம் நீ ஒரு மனிதனாக வாழ விரும்புவாயாகில், தூய, தெய்வீக வாழ்க்கையை கடைப்பிடி. உனது உடலுறவையும் ஒழுங்கு படுத்திக் கொள்.

'நீ ஒரு ஞானவானாக இருக்க விரும்பினால் பிரம்மச்சரியத்தை நிச்சயமாகக் கடைப்பிடிக்க வேண்டும். மனத்தைக் கட்டுப்படுத்தி நிர்விகல்ப சமாதி நிலையை எய்தலாம். அன்புள்ள குழந்தைகளே! இதில் நீங்கள் எந்தப் பிரிவில் சேரப் போகிறீர்கள். அந்தப் பிரிவுக்கேற்ற வாழ்க்கையை எப்படி உருவாக்கிக் கொள்ளப் போகிறீர்கள்! உங்கள் விதியை நிர்ணயிப்பவர்கள் நீங்களே தான்! ஆசைகள், எண்ணங்கள், செயல்கள் 'உருவில் நீங்கள் எதை விதைக்கிறீர்களோ அதையே எதிர் காலத்தில் அனுபவிப்பீர்கள். வாழ்வில் தற்போது உங்களுக்குள்ள உயர்வும் தாழ்வும் கடந்த காலத்தில் நீங்கள் செய்த நன்மை - தீமைகளின் விளைவுகளே! இப்போதைய வாழ்க்கை கடந்த காலச் செய்கைகளின் விளைவுகள் என்னும்போது எதிர்காலத்தை அமைத்துக் கொள்வது என்பதுமுழுக்க முழுக்க உங்கள் கையில்தான் இருக்கிறது.

யார் ஒருவர் வாழ்க்கையில் வெற்றிகரமாக மேன்மையடைய விரும்பினாலும் கற்பு நெறியைக் கடைப் பிடித்து தூய, எளிய, புனித வாழ்வை மேற் கொள்ளுங்கள். அவப்பெயரும், தோல்விகளும் துன்பங்களும் வரட்டுமே என்று கருதுபவர்கள் தத்தாரியாக வாழலாம்.

## பிரம்மச்சரிய ஆசிரமத்திற்கான விதிமுறைகள்

ஒரு மாணவன் நற்பழக்கங்களைப் பழக வேண்டும். புலன்கள், மனத்தைக் கட்டியாள முயல வேண்டும். ஒவ்வொரு இளைஞனும் ஒவ்வொரு யுவதியையும், பெண்ணையும் சகோதரி யாகவும், தாயாராகவும் நடத்த வேண்டும். ஒரு யுவதி ஒவ்வொரு இளைஞனையும், ஆணையும் தன்னுடைய சொந்தச் சகோதரனாகவும், தந்தை யாகவும் பாவிக்க வேண்டும். அவனோ அவளோ முறை தவறி நடக்கக் கூடாது.

பிரம்மச்சாரி விடியற் காலையில் விழித்தெழ வேண்டும். மந்திரஜபம், தியானம் பழக வேண்டும். பின்னர் தினசரி பள்ளிப் பாடங்களைக் கற்க வேண்டும். ஒரு பிரம்மச்சாரி வாசனைத் திரவியங் களைத் தவிர்க்க வேண்டும். போதைப் பானங் களையும், புகை பிடிப்பதையும் ஒதுக்க வேண்டும். ஒருவன் ஒருத்தியுடன் நெருங்கிப் பழகுவதைத் தவிர்க்க வேண்டும்.

ஒரு பிரம்மசசாரி எப்பொழுதும் உண்மையுள்ள ாாகவும், கடவுள் ஈடுபாடுடையவனாகவும், ய்வத்திற்குப் பயந்தவனாகவும் இருக்க ண்டும். அவனோ அவளோ பெற்றோர்களிட ) ஆசிரியர்களிடமும் மூத்தவர்களிடமும் அன்பாக பணிவுடனும் நடந்து கொள்ள வேண்டும். பிரம்மச்சாரி பெருந் தீனியைத் தவிர்க்க ண்டும். அவன் ஒழுங்காக உடற்பயிற்சிகளி லும், ஒழுக்க மிக்க கட்டுப்பாட்டினாலும் -லை வலிமைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஒருவனுடைய ஆபத்தான வயதுக் கட்டம் ாபது பத்திலிருந்து முப்பத்துக்குள் ஆகும். இந்த ிது இடைவெளியில் ஒருவன் எந்த மாதிரியான க்க வழக்கங்களைப் பழகுகிறானோ அவையே ன் வாழ்நாள் முழுதும் வலுப் பெற்று கிறது. பிற்பட்ட வயதில் அவற்றை அடியோடு ப்பதென்பது மிகவும் கடினமானதாகும்.

இதுபோன்ற படுகுழிகளிலும், அபாயங்களிலும் கிக் கொள்ளாமல் தவிர்க்க வேண்டும். வாழ்க்கை ழவதையும் வளமும், மகிழ்ச்சியும் உடைய க்க வேண்டும். அதற்குப் பிரம்மச்சாரி ஆசிரம மத்தை நிச்சயமாகக் கடைப்பிடிக்க வேண்டும்.

## ஸ்த ஆசிரம தர்மம்

திருமணமானவர் கிருகஸ்த ஆசிரமத்தவர். ரம்பரியத்தை வளர்க்கத் திருமணம் அவசியம்.

வாரிசுக்காக ஒன்று அல்லது இரண்டு குழந்தைகளைப் பெற்ற பின்னர் கணவன், மனைவியைத் தன் தாயாகக் கருத வேண்டும். தெய்வத் தாயாக எண்ண வேண்டும். மனைவி. கணவனைப் பெற்ற தந்தையாக, தெய்வத் தந்தையாகக் கருத வேண்டும். இம்முறையில் பிரம்மச்சரியத்தை மேற்கொள்ள முயல வேண்டும்.

கணவனும் மனைவியும் முழுமூச்சுடன் தர்மத்துக்காகப் பாடுபட வேண்டும். அடிப்படைக்கே அவர்கள் பொருள் திரட்ட வேண்டும். இந்த தர்மத்தின் அடிப்படையில் தொடர்ந்து இன்பமாக வாழ்ந்து முக்தி பெற வேண்டும்.

## கணவன் மனைவியிடம் நடந்துகொள்ளும் முறைகள்

கணவனின் நன்மையையே எப்பொழுதும் கருதும் மனைவியை போற்றிப் புகழ வேண்டும். எங்கே பெண்மை போற்றப்படுகிறதோ அந்தக் குடும்பம் சிறப்புற்று விளங்கும். மாறாக பெண் எங்கே அவமதிக்கப்படுகிறாளோ, அந்த வீடு நாசமடைகிறது!

கணவனால் மதிக்கப்படும் மனைவியுள்ள குடும்பமும், மனைவியால் போற்றப்படும் கணவனுள்ள குடும்பமும் மாறாத மகிழ்ச்சியில் திளைக்கிறது. கணவன் மனைவிக்கிடையே பரஸ்பர அன்பு என்பது மிக முக்கியமானது.

## மனைவியின் தர்மம்

நன்னடத்தை என்ற அடித்தளத்தைப் பொறுத்தே மனித குல வளர்ச்சியும், நன்னலமும் அமைகிறது. பெண்ணே நன்னடத்தையைக் கட்டிக் காப்பவள். குழந்தையை மனிதனாக்கும் தந்தை - தாயின் உள்ளமே குழந்தையின் கல்விக் கூடம்.

தாயின் ஒவ்வொரு சொல்லும் செயலும் குழந்தையின் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதிந்து விடுகிறது. இந்த நினைவுகள் நீண்ட நாட்களுக்குப் பிறகு அழியாப் பதியங்களாகி வாலிபனின் பண்பை உருவாக்குகிறது! ஒரு குழந்தையின் எதிர்காலம் தாயின் வளர்ப்பைப் பொறுத்தே முழுமையாகின்றன. ஒரு லட்சியத் தாய் மாபெரும் சக்தி படைத்த சமுதாயச் சீர்திருத்த வாதி!

மனைவியின் தலையாய தர்மம் கற்பு. தன் கணவனிடம் அவள் மிகுந்த பக்தியுடையவளாக இருக்க வேண்டும். எப்போதும் அவரிடம் அன்பு பூண்டொழுக வேண்டும். மாறு பேசாமல் அவருடைய வசதிகளைக் கவனிக்க வேண்டும். ஒரு பெண்—இல்லத்தரசி என்ற முறையில் வீட்டி

லுள்ள மூத்தவர்களிடம் அன்பும் மரியாதையும் காட்டி ஒழுக வேண்டும்.

தன்னிடமுள்ள வேலைக்காரர்களை சொந்தக் குழந்தைகளாகப் பாவிக்க வேண்டும். புறச்சுத்தத்தில் கவனம் செலுத்த வேண்டும். விருந்தினர்களை உபசரிக்க வேண்டும். ஏழைகளுக்கு பிச்சையிட வேண்டும். உதவி நாடி வரும் ஆதரவற்றவருக்கு ஆதரவு காட்ட வேண்டும். தன்னலமற்றவளாக இருக்க வேண்டும். ஒரு உண்மையான மனைவி, கணவனின் தொல்லைகளைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். எப்போதும் அவனுக்கு நல்ல யோசனை சொல்ல வேண்டும். கணவனுடைய இன்ப-துன்பங்களைப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

## வானப்பிரஸ்த ஆசிரமம்

தர்ம, அர்த்த, காமமெனும் மனித வாழ்க்கைக்கான மூவகைக் குறிக்கோள்களையும், இல்லறக் கடமைகளையும் முடிக்க வேண்டும். பிறகு உரிய வயதுக்கு வந்த பிள்ளைகளிடம் குடும்பப் பொறுப்புகளை ஒப்படைக்க வேண்டும். வயதான தம்பதிகள் கானகத்தில் சென்று வாசம் செய்ய வேண்டும். அவர்களுடைய காலத்தை, மோட்சத்தை அடைவதற்கான இறை வழிபாட்டில்

செலுத்த வேண்டும். இதுவரை வாழ்ந்த வாழ்க்கை வாழ்ந்து மடிந்து விட்டது.

## சந்நியாச ஆசிரமம்

ஆதிகாலத்தில் ரிஷிகளால் வகுக்கப்பட்ட இந்த சந்நியாச ஆசிரமம் இன்றைய நிலையில் பெரும் பிரச்னையாகவே இருக்கிறது. இவர்கள் இந்தியாவின் பெரிய நகரங்களில் பிச்சைக்குச் சென்றால் சிறை வைக்கப்படுகிறார்கள்.

தர்மத்தின் உண்மையைப் புரிந்து கொள்ளாத பல மண்டைக்கனம் பிடித்த தலைவர்கள் சந்நியாசிகளைச் சோம்பேறிகள் எனக் கருதுகின்றனர். அவர்கள் தாங்கள் மட்டுமே தேசத்திற்குச் சேவை செய்வதாக நினைக்கிறார்கள். அவர்கள் சொல்லும் அந்த சேவை என்பது என்ன தெரியுமா? பொய்பேசுதல், மக்களுக்குப்பொய் வாக்குறுதிகளை அளித்தல், அவர்களை ஏமாற்றிக் கடைசியில் ஊழல்கள் மலிந்த வழிகளில் செல்வத்தைக் குவித்துக் கொள்ளுதல் போன்றவையே. தங்களை யோக்கியர்கள் என்று கூறிக் கொள்ளும் இவர்கள் சொல்வதும் செய்வதும் இதைத்தான்!

மாறிவரும் உலக நடைமுறைக்கு இசைய நான் ஒரு புதிய சந்நியாச முறையை உருவாக்கியுள்ளேன். இந்தப் புதிய சந்நியாச முறையின்படி

ஒரு சந்நியாசி தனது விருப்பத்திற்கும் திறமைக்கும் ஏற்ற தொழிலில் ஈடுபட்டு தன் வாழ்க்கைக்குத் தேவையானதைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும். அதே சமயம் கண்டிப்பான பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். காலை மாலை தியானம் பழக வேண்டும். தூய, எளிய, புனித வாழ்க்கையை வாழ வேண்டும். இந்த நவீன அமைப்பின் கீழ் முன்னூறுக்கும் மேற்பட்ட சந்நியாசிகள் (ஆண், பெண் இருபாலர்) உள்ளனர். இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் ஆயிரக்கணக்கான சாதகச் சீடர்கள் உள்ளனர். இதன்றி நான் ஒரு புதிய சமயத்தை நிறுவியுள்ளேன். அதுவே 'அகண்டைக மதம்' இந்த மதம் அறிவுபூர்வமானது. பேருண்மையை அடித்தளமாகக் கொண்டு நிறுவப் பட்டது.

அறிவு பூர்வமானது எனின் எல்லா சாதி, சமய இனங்களையும் தழுவியது. விஞ்ஞானப் பரிசோதனைக்கு இயைந்து வருவது.

இப்போது 'மோட்சம்' என்பதை எடுத்துக் கொள்வோம். மோட்சம் என்றால் விடுதலை. விடுதலை என்றால் என்ன? இது பயனுள்ளது தானா? விடை மிக எளிதானது. உலகத்தின் எல்லா நடவடிக்கைகளையும் கூர்ந்து கவனிப்போம். அவர்கள் எதை விரும்புகிறார்கள்? நாம் அதை ஒரே வார்த்தையில் சொல்லலாம்—விடுதலை, சாந்தி அல்லது மகிழ்ச்சி! யாரும் அடிமைத்

தனத்தை விரும்புவதில்லை. துன்பத்தையும் விரும்புவதில்லை. நோய், சாவு என்ற எண்ணமே எல்லோருக்கும் பயப்பிராந்தியை உண்டாக்கு கிறது. 'விடுதலை'க்கான இந்த உணர்வு புல்லிதழின் முனையிலும்கூடப் படிந்துள்ளது.

ஒவ்வொருவரும் உண்மையான விடுதலையை யும், அமைதியையும், ஆனந்தத்தையும் தேடிக் கொண்டிருக்கின்றனர். அவர்களுடைய நடவடிக் கைகள் தவறான பாதையில் திசை மாறுவதால் பந்தத்தில் சிக்கிக் கொள்கிறார்கள். விடுதலை, ஆனந்தத்திற்குப் பதிலாகத் துன்பத்தில் உழல்கிறார் கள். ஏதுமறியாத ஒருவனோ ஒருத்தியோ ஐம்புலன் இன்பங்களால் மட்டுமே மகிழ்ச்சியைப் பெறுவதாக நினைக்கிறார்கள். உண்மையில் இவற்றில் இன்பம் உள்ளதா? இல்லவேயில்லை! எவ்வளவு சுகபோகங் களை அனுபவித்தாலும் அது ஒருவனுக்கு, ஒருத்திக்கு மகிழ்ச்சியைத் தராது! அவையெல்லாம் கண நேர இன்பந்தான்! அடுத்தபடி துன்பந்தான்.

இரண்டாவது பணம்! புலன் போகங்களுக்கு பணமே காரணம்! இந்தச் செல்வம்கூட மனிதனை ஆனந்தப்படுத்துவதில்லை.

ஒரு சாதாரண மனிதன் அவசரத்திற்கு நூறு ரூபாய் மட்டும் சேர்ந்து விட்டதும் தான் மகிழ்ச்சியுறு கிறான். அந்த நூறு ரூபாய் கைக்கு வந்த பிறகு அது மிகச்சிறிய துகை என்றும் ஆயிரம் ரூபாயாவது இருக்க வேண்டுமெனவும் எண்ணுகிறான்.

ஆயிரம் ரூபாய் சேர்ந்த பிறகு அவன் லட்ச ரூபாய்க்கு ஆசைப்படுகிறான். ஆசை இதே முறையில் வளர்ந்து கொண்டே போகிறது. அங்கே மன அமைதியும் இல்லை; மகிழ்ச்சியுமில்லை! அவன் எப்பொழுதும் மனக்குறையுடனேயே இருக்கிறான்!

முன்னொரு காலத்தில் ரோம் சாம்ராஜ்யத்தில் மிகப் பெரிய பணக்காரன் ஒருவன் இருந்தான். அவன் வியாபாரி. ஒரு நாள் மாலை, அதிர்ச்சியைத் தரும் செய்தியொன்று அவனுக்குக் கிடைத்தது. அது கப்பல் மூழ்கிவிட்ட செய்தி. மூழ்கிய கப்பலில் அந்த வியாபாரிக்கு வந்த அத்தனை பொருட்களும் போய்விட்டன. மீதமிருந்தது அவனிடமிருந்த இருபதே கோடிதான். இந்த இருபது கோடி அவனுக்கு மிகச் சொற்பத் தொகையாகப் பட்டது! அவனுக்கு இது பெருத்த சோகத்தை உண்டாக்கியது. மனக் குமுறல் ஏற்பட்டது! நாளைய ஞாபகம், எதிர்காலத்தில் அவனது கௌரவத்தின் பாதிப்பு எல்லாம் அவன் மனத்தை வாட்டி வதக்கியது. இரவு பூராவும் இதே வேதனையில் உழன்று துவண்டு கொண்டிருந்தான். விடிவதற்கு முன்னால் அவன் ஒரு முடிவுக்கு வந்தான். எவ்வகையிலும் இனி உயிருடன் இருக்கக் கூடாது என்ற நினைப்பே அது. தற்கொலை செய்து கொண்டான். இதுவே செல்வத்தின் தலைவிதி!

தற்போது ஒரு கோடீசுவரனின் கதையைப் பார்ப்போம். அவனுடைய வருமானம் ஒரு கணத்

திற்கு இரண்டாயிரம் ரூபாய். தன் தலையெழுத்து ஒரு கூலிக்காரனை விட மோசமானது என்று அவர் சொல்கிறார். காரணம் என்ன தெரியுமா? அவருக்குக் கடுமையான சர்க்கரை வியாதி— ஒவ்வொரு நாளும் அவர் ஊசி குத்திக் கொள்ள வேண்டும்.

மூன்றாவது அவர் கஞ்சி ஆகாரத்தையே அருந்த வேண்டும். நான்காவதாக அவருக்கு தூக்கமே வருவதில்லை. தூங்க வேண்டுமானால் தூக்க மாத்திரைகளை விழுங்க வேண்டும். இவர் சொல்கிறார்: ''ஒரு சாதாரண கூலிக்காரன் ஆரோக்கியமாக இருக்கிறான். அவன் எதைச் சாப்பிட்டாலும் சீரணமாகிறது. அவன் நிம்மதி யாகத் தூங்குகிறான். எவ்வளவு கோடிப் பணமிருந் தாலும் இதெல்லாம் எனக்குக் கிட்டாதனவாக இருக்கின்றன. இவ்வளவு பணமிருந்து என்ன பயன்?'' — எனவே பணம்கூட ஒரு மனிதனுக்கு மகிழ்ச்சியைத் தருவதில்லை. அதற்காக உங்களுக்கு பணமே வேண்டாமென்று சொல்லவில்லை. பணம் அத்தியாவசியமானது, ஆனால் அதற்கு ஒரு எல்லையுண்டு. மனக்கட்டுப்பாடில்லாமல் பணம் மட்டுமிருந்தால் அது மகிழ்ச்சியைத் தராது! அதனால் முடியவே முடியாது!

மூன்றாவதாக ஒரு சாதாரண மனிதன் பெயருக் கும் புகழுக்கும் ஆசைப்படுகிறான்! அவனோ அல்லது அவளோ பெயரும் புகழும் மகிழ்ச்சி தர

வல்லது என நினைக்கின்றனர்! பெயரும் புகழும் மகிழ்ச்சியைக் கொடுத்து விடுமா? கொடுக்காது. அதுவும்கூட ஒரு மனிதனுக்கு மகிழ்ச்சியளிப்ப தில்லை. உண்மையான மகிழ்ச்சி எங்கிருக்கிறது? அது உனது உண்மையான இயல்பைத் தெரிந்து கொள்வதில்தான் இருக்கிறது. பெரும்பாலான வர்கள் அவர்களுடைய உண்மை இயல்பை உணர்ந்து கொள்வதில்லை! இது ஒரு அதிசயமே!

நீங்கள் உங்களைப் பற்றிப் பொதுவாக 'என்னுடைய உடம்பு; என்னுடைய புலன்கள்; என்னுடைய அகந்தை; என்னுடைய மனம்;என்னுடைய அறிவு' என்கிறீர்கள். இவ்வாறு சொல்லும்போது நீங்கள், உங்கள் உடம்புமல்ல! உங்கள் புலன்களு மல்ல! உங்கள் அகந்தையுமல்ல! உங்கள் மனமு மல்ல! உங்கள் புத்தியுமல்ல! என்பதைத் தாமாகவே ஒப்புக் கொள்கிறீர்கள். அப்படியாயின் நீங்கள் யார்? உங்கள் உண்மை நிலையை அறிவதற்காக மேற்கொள்ளும் பரிசோதனையும் முயற்சியுமே, மதம் அல்லது தத்துவம் ஆகும்!

உங்கள் உண்மை சொரூபத்தை அறிந்து கொள்ள உங்கள் மனத்தைத்தூய்மையாக்கிக் கொள்ளுங்கள். சூக்கும நிலைக்குப் போக முயலுங்கள். மனத்தை ஒருமுகப்படுத்துங்கள். சமாதி நிலையை எய்துங்கள். மனத்தைக் கட்டுப்படுத்தி சமாதி நிலையை எய்த ஐம்புலன்களையும் பயிலுங்கள்.

தூய, எளிய, புனித வாழ்க்கையை மேற்கொள்ள மந்திர ஜபத்தையும் தியானத்தையும் பழகுங்கள். மனக் கட்டுப்பாடு இன்றி யாருமே அமைதியையும், பேரானந்தத்தையும் பெற முடியாது. மனக் கட்டுப்பாடு இன்றி ஒருவர் தமது உண்மை சொரூபத்தை உணர முடியாது. முக்தியை எய்த முடியாது. ஒவ்வொரு உயிரும் தான் புறப்பட்ட இடத்திற்குத் திரும்பப் போய்ச் சேர்ந்தேயாக வேண்டும். இன்றோ அல்லது நாளையோ, இதே பிறவியிலேயோ அல்லது பல கோடிப் பிறவிகளுக்கு அப்புறமோ அது நேரலாம்!

சிரஞ்சீவியான குழந்தை ஆனந்தங்களே! எழுமின்! விழிமின்!! வெற்றிமுனை சேரும்வரை அயர்வு கொள்ளாதீர்!!! ஆண்டவன் அருள்பாலிப் பாராக!! ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

# விஞ்ஞானமும் மெய்ஞானமும்

முடிவற்றது என்பது ஒன்றே ஒன்றுதான். அது ஆரம்பம் — இடை — முடிவு இல்லாதது. பரிபூரண உயிர்ச்சாரமுள்ளதே எல்லையற்றது. அந்த உயிர்ச் சாரத்தையே பிரம்மம் அல்லது கடவுள் என்கிறோம். அது உருவமற்றது. அனைத்துச் சக்திகளும், ஆற்றல்களும், வல்ல

மையும் அதில் அடக்கம். இந்த உயிர்ச்சாரத்தைத் தவிர்த்து தனிப்பட்ட உயிர்ப்பு ஏதுமில்லை.

கண்ணுக்குப் புலனாவாதது, இலேசில் காண முடியாதது. நுட்பத்தினும் அதிநுட்பமானது. மிக மிகச் சூக்குமமானது. மனிதன் கண்டுபிடித்த நுட்ப மான கருவிகளினாலும் இதைக் காண இயலாது. சமாதிநிலையில் மட்டுமே இதை உணரமுடியும்.

நிர்விகல்ப சமாதி என்பது ஒரு அபூர்வ நிலை. அதற்கு உயிர்ப்பு உண்டு. மனத்தின் உதவியில்லாம லேயே அனுபவிக்கும் ஓர் அரிய நிலை. இந்த நிர்வி கல்ப சமாதி நிலையில் உள்ளுணர்வு, புறஉணர்வு, அறிவு எல்லாமே ஒன்றி விடுகின்றது. அதற்கப்பால் நிலைத்து நிற்பது உயிர்ச்சார மகாசமுத்திர மென்னும் உணர்வு மட்டுமே.

கீழ்நிலையில் அனுபவ உணர்வுக்கான ஒரு பொருள், அதன் வடிவம், அதைப் பற்றிய அறிவு எல்லாமே உண்டு.

அகிலமென்பது மனம் உமிழ்த் தோற்றமே அன்றி வேறொன்றுமில்லை! ஒருவருடைய ஐம் புலன்களின் மூலம் மனம் கற்பிக்கும் தோற்றமே அகிலம். அறியாமையினால் மனிதன் ஐம்புலன் களின் இன்பத்திற்காக அலைகிறான். உண்மையை மறந்து விடுகிறான். புறப்பட்ட இடமான பேருண்மைப் பரம்பொருளைப் போய்ச் சேருவதற்கு மனக்கட்டுப்பாடு, நிர்வி கல்ப சமாதி நிலை ஆகிய இரண்டுமே இன்றியமையாதன.

எல்லாமே ஒன்றாக இணைந்த வல்லமை அல்லது சக்தியும், எல்லையற்ற மகாசக்தியும் ஒன்றேதான். எல்லையற்ற பரம்பொருளில் எந்த ஒரு மாற்றமும் ஏலாதது. அதைக் கூட்டவோ குறைக்கவோ முடியாது. இந்த எல்லையில்லாத ஒன்றே ஒன்றான பரம்பொருளே, உயிராகவும், மனமாகவும், சக்தியாகவும், ஜடமாகவும், உருவங்களாகவும் காட்சி அளிக்கிறது. இதை அலசி ஆராய்ந்தால் முடிவில் இவை அனைத்துமே ஒன்றே ஒன்றுதான் — இரண்டல்ல என்பது தெளிவாகும்.

ஆகாயம் நிறமற்றது. ஆனால் நீல நிறத்தைக் காண்கிறோம். சில பறவைகளுக்கும், வௌவால்களுக்கும், மிருகங்களுக்கும் இரவு, பகலாகத் தெரிகிறது. இந்தப் பறவைகள், வௌவால்கள், மிருகங்களுக்குப் பகலாக இருப்பது மனிதர்களுக்கு இரவாக இருக்கிறது. ஏன்? சில பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் கூடத்தான்? இது ஏன்? இது அறியாமையினால் ஏற்படும் மனம், புலன்களின் குறைபாடுகளே! அது போலவே அறியாமையினால் ஒரே பொருள் பல பொருட்களாகத் தெரிகிறது. இந்தப் பல பொருட்களும் மறைந்து முடிவில் ஒன்றாகவே காட்சி தருகிறது. 'இந்த 'ஒன்று' தான் தன்னில் தானாகவே உள்ள உயிர்ச்சார மகாசமுத்திரமாகும். இதை நிர்விகல்ப சமாதி நிலையில் மட்டுமே உணர முடியும்.

விஞ்ஞானம் புலன் உணர்வுகளோடு நின்று விடுகிறது. விஞ்ஞானிகள் அவர்களுடைய

விஞ்ஞானக் கருவிகள் மூலம் காண்பதை மட்டுமே நம்புகிறார்கள். உயிர்ச்சார மகாசமுத்திரம் அல்லது பெருங்காரணமாகவுள்ள ஒன்று எந்தப் பார்வைக்கும் எட்டாதது. அது நுட்பத்திலும் அதிநுட்பமானது. இதன் காரணமாகவே விஞ்ஞானம் இன்னும் இருட்டறையிலேயே தடுமாறிக் கொண்டிருக்கிறது. மனிதனால் கண்டுபிடிக்கப்பட்ட எத்தகைய விஞ்ஞானக் கருவியானாலும்—அது எவ்வளவு நுட்பமானதாயிருப்பினும் — காணமுடியாத ஒன்றுண்டு. அதுவே பெருங்காரணமானது அல்லது தன்னில் தானாகவே இருப்பது. அதுவே உயிர்ச்சார மகா சமுத்திரமானது. விஞ்ஞானம் பிரதானமான ஒன்றை அறவே ஒதுக்குகிறது! இது மிகவும் பரிதாபத்திற்குரியது! இது எப்படி இருக்கிறது தெரியுமா? ஒருவன் உயிருள்ள மனிதனை ஒதுக்கிவிட்டு பிணத்தைக் கட்டிக் கொண்டு அழுவதைப்போல் தான்!

விஞ்ஞானம் மனம், உயிர்ச்சாரம் பற்றிய தெளிவை இன்னும் கண்டு கொள்ளவில்லை. ஜடப்பொருட்களில் மட்டுமே அது மும்முரமாக இயங்குகிறது. ஜடப்பொருட்களைப் பற்றிய அறிவுத் தெளிவையும் நாம் வரவேற்கிறோம். ஏன் அவர்கள் ஆன்மிகத்தை அலட்சியப்படுத்த வேண்டும்? வாழ்க்கையை ஒரு முழு உருவமாகக் காண்போமாயின் அதற்கு இருபுறங்கள்இருக்கின்றன. அதுவே ஆன்மிகம்— உலகாயதம். உலகத்தின் உண்மையான

செழிப்புக்கும், முன்னேற்றத்துக்கும், விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் இரண்டுமே ஏற்றமுற வேண்டும்.

மனக்கட்டுப்பாடு, நிர்விகல்ப சமாதிநிலை எய்துதல் இரண்டுமே பகுத்தறிவுக்கு ஒவ்வாததல்ல. அவை மிக உன்னத விஞ்ஞானம். விஞ்ஞானத்திற்கும் அசாதாரணமானது மனக்கட்டுப்பாடு. மனிதன் புரிந்து கொண்டுள்ளது பௌதிகம் அல்லது இயந்திர விஞ்ஞானமாகும். மற்றது ஆன்மிகம் அல்லது நுண்ணறிவு ஞானம்.

இயந்திர விஞ்ஞானத்தில் பல கருவிகள் நமக்கு உதவுகின்றன. ஆன்மிக விஞ்ஞானத்தில் ஒருவருடைய சொந்த மனமே அதற்கான ஆய்வுக் கருவியாகிறது. மூளையே ஆய்வுக் கூடமாக அமைகிறது. இதில் வெற்றி பெறுவதற்கு மனத்தைத் தூய்மையாக்க வேண்டும். நுட்பமான திறனைப் பெற வேண்டும். ஒருமுனைப்பட வேண்டும்.

மனமும், மூளையும் தனித்தனித் தன்மையுடையவை. அவை, சிலர் அறியாமையினால் சொல்வது போல் ஒன்றேயல்ல! ‘மூளை’ ஒரு தூலப் பொருள். மனம் உயிரியக்கத்தைப் பின்னணியாகக் கொண்ட ஒரு சூக்கும சக்தி. மனத்திற்குத் தான் செய்வது புரியும்; இயந்திர சக்திக்கு புரிந்து கொள்ளும் ஆற்றல் இல்லை.

இயந்திர விஞ்ஞானம் தூலப்பொருளில் துவங்குகிறது. ஆன்மிக ஞானம் மனத்தில் தோன்றுகிறது.

பல நூற்றாண்டுகளாக சடப்பொருளை ஆராய்ந்து பார்த்த பிறகு விஞ்ஞானம் ஒவ்வொரு பொருளும், ஒவ்வொரு உருவமும்அணுக்களின் கலவையே என்ற உண்மையைக் கண்டுபிடித்துள்ளது. ஒவ்வொரு அணுவும்ஒரு கதிரியக்க மையத்தைக்கொண்டுள்ளது. இந்த மையத்தைச் சுற்றி எதிர்மாறான இரண்டு சக்திகள் சுழல்கின்றன. இந்த இருவேறு சக்திகளை மின்னணு (Electrons) கூட்டு அணு (Protons) என கூறுகின்றனர். ஆயினும் விஞ்ஞானிகளுக்கு இந்தக் கதிரியக்கத்தின் உட்பொருள் என்ன என்பது தெரியாது.

தற்போது அணுவைப் பிளந்து பார்த்தபிறகு 'சடப்பொருள்' என்பதே இல்லை என்ற முடிவுக்கு வந்துள்ளனர். அனைத்திலும் இயக்கசக்தி இயங்கு கிறது என்பதைப் புரிந்து கொண்டு விட்டனர். இருப்பினும் அந்தச்சக்தி உயிரியக்க சக்தியா என்பதைத் தெரிந்து கொள்ளவில்லை.

ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்றும் தோன்றுவ தில்லை. சட சக்தியிலிருந்து உயிரியக்கச் சக்தி தோன்றுவதில்லை. உயிரிலிருந்துதான் உயிர்ச்சக்தி வருகிறது. எனவேதான் நான் கடவுளை தன்னில் தானாகவே நிரம்பியுள்ள உயிர்ச்சார மகாசமுத்திரம் என்கிறேன். இந்தப் பேருண்மையை நிர்விகல்ப சமாதி நிலையில் இருந்துதான் அனுபவிக்க முடியும். பரவெளி முழுவதும் அல்லது முடிவற்ற பரவெளியிலும் உயிர்ச்சாரம் நிரம்பியுள்ளது. இந்த

உயிர்ச் சாரத்துக்கு அப்பால் தனித்து இயங்கக் கூடியது எதுவுமே கிடையாது. தன்னில் தானாக இயங்கும் சடசக்தி என்பது கிடையவே கிடையாது. இந்த உயிர்ச்சார இயக்கமே நாம் காணும் எல்லா உயிர்களுக்குமான பெருங்காரணகர்த்தாவாக உள்ளது.

ஒரு உயிரினுள் உள்ள உயிர்ச்சாரம் மிக மிக நுட்பமானது. அதை திறந்த கண்களால் பார்க்க முடியாது. அதி நுட்பமான கருவிகளாலும் காண இயலாது.

நீ உயிருடன் இருக்கிறாய் என்பதற்கு எதை அத்தாட்சியாகக் காட்டுவாய்? நீ கேட்கிறாய், பார்க்கிறாய், முகருகிறாய், ருசிக்கிறாய், தொட்டு உணர்கிறாய்! இவை எவ்வாறு நிகழ்கின்றன? உன்னுடைய ஐந்து தூல, சூக்குமப் புலன்களின் மூலமாக —உயிரியக்கத்தின் காரணமாக! நீ உயிரியக்கத்தை அடியோடு இல்லையென்று மறுப்பாயாகில் உனக்கு உயிரே இல்லை என்று மறுப்பது போலாகும்! இந்த நிலையில் உனக்கும், பிணத்திற்கும், உயிருக்கும் மரணத்துக்கும் என்ன வித்தியாசம்?

மனம் மிக சூக்கும சக்தியுள்ளது. அது மூளை மையத்தில் செயல்படுகிறது. ஒரு ஆய்வுக்கூடத்திற்கான மிக நுட்பமான கருவிகளைக் கண்டுபிடிப்பது ஒரு விஞ்ஞானியின் ஒருமுகப்படுத்தப்பட்ட மனமே! அத்தகைய நுட்பமான கருவிகள் சூக்குமமானதும்,

கருவிகளைக் கண்டுபிடிப்பதற்குக் காரணமானது மான மனத்தை எப்படி ஆராய முடியும்? ஒரு விஞ்ஞானி மனம் என்ற ஒன்று இருப்பதை எப்படி மறுக்க முடியும்? இல்லையென எப்படிக் கூற முடியும்?

மனம் மிக சூக்குமமானது. மனத்தைவிட குண்டலினி சக்தி மிகமிக நுட்பமானது. குண்டலினி சக்தியைவிட அதிநுட்பமானது உயிர்ச்சார சக்தி. மனம் எனும் உணரும் கருவியினாலேயே தனி உயிர்ச்சக்தியை அறிய முடிகிறது. மனமானதுஇந்த அகிலத்தை தனது ஐந்து தூல சூக்குமப் புலன்கள் மூலமாக அறிந்து கொள்கிறது. உயிர்ச்சாரம் உடலை விட்டுப் பிரிந்த பிறகு இறப்பு நேரிடுகிறது. உயிர்ச்சாரம், குண்டலினிசக்தி, மனம் ஆகிய மூன்றும் ஒரு உயிருள்ள உடலில் இருக்கிறது என்பதை எவ்வாறு மறுக்க முடியும்?

தன்னில் தானாகவே உள்ள உயிர்ச்சார உணர் வெனும் மகாசமுத்திரம் பரவெளியெங்கும் பரவி நிரம்பியுள்ளது என்பதே நாம் சொல்வது. அது ஒன்றே ஒன்றுதான்; அனைத்து ஆற்றல்களும் அதற்கு உண்டு: நடப்பது அனைத்துமே அதனால் தான். அது தோன்றி மறைந்து, மீண்டும் தோன்று கிறது. இந்த ஒன்றாக இருப்பதுவே பலவாகத் தோன்றுகிறது. இது கனவே அன்றி வேறொன்று மில்லை!

நிர்விகல்ப சமாதி நிலையில் மட்டுமே ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது என்பதுவும், அந்த ஒன்றும் பலவாக ஆகவே முடியாது என்பதுவும் தெளிவாகிறது. தன்னில் தானாக உள்ள இந்த உயிர்ச்சார உணர்வுக்கடல் பல்வேறு தோற்றங்களாகப் பரிணமிப்பதுபோல் தோன்றுகிறது. அது தாதுப் பொருள்களில் உறங்குகிறது; காய்கறிகளில் கனவு காணும் நிலையில் உள்ளது. மிருகங்களில் அது விழித்து, நடந்து, குரல் கொடுக்கிறது. மனிதனில் அது விழித்தெழுந்து நடந்து பேசிச் சிந்திக்கிறது, அது மகான்களிடம் விழித்து, நடந்து, சிந்தித்து, தான் யார் என்பதை அறிந்து கொள்கிறது.

மனித சமுதாயத்திற்கு விஞ்ஞானம் உன்னத சேவை செய்துள்ளது. ஆனால் பரிதாபத்திற்குரியது என்னவென்றால் விஞ்ஞானிகள் ஆன்மிகம் எனும் மெய்ஞ்ஞானத்தை அடியோடு புறக்கணித்து விட்டனர். வாழ்க்கை இருபுறங்களுடையது. இயந்திரமயமானது, மெய்ஞ்ஞான மயமானது. இதில் ஒன்றைவிட்டு மற்றொன்றை மட்டும் ஒப்புக் கொள்வது ஏலாது. நாம் விஞ்ஞான முன்னேற்றத்தை வரவேற்கிறோம். அதே சமயம் மெய்ஞ்ஞானத்தை ஏன் ஒதுக்க வேண்டும்? ஒரு தேசத்தின் உண்மையான சமாதானத்திற்கும், செழிப்புக்கும் இந்த இரண்டுமே தேவை. விஞ்ஞானமும், மெய்ஞ்

ஞானமும் இணைந்து பெருகவேண்டும். இன்றேல் சீர்குலைந்துவிடும்.

மனக்கட்டுப்பாடும், நல்லாரோக்கியமும் இன்றேல் ஏராள செல்வமிருந்தும் பயனில்லை. மனக்கட்டுப்பாடு இல்லையேல் மன அமைதி கிடைக்காது. மனக்கட்டுப்பாட்டைப் பெற்றவன் மகிழ்ச்சியுடன் இருக்கலாம். ஆகவே விஞ்ஞானம் அப்புறத்திலுள்ள மெய்ஞ்ஞானத்தையும் ஏன் பயன் படுத்தலாகாது? இதை மட்டும் செய்தால் மனித சமுதாயத்திற்கே இது பெருந்துணையாக இருக்கும். அரிய சேவையாகவும் வாய்க்கும்.



# மெய்ஞ்ஞானம்

## [WISDOM]

*By:* **SWAMI NARAYANANANDA**




From:

The Complete Works Swami Narayanananda, Vol. 18

# 1. அகண்டைக மதம்

## அகண்டைக மதமும்--அதன் அத்தியாவசியமும்

ஒரு வட்டம், எத்துணைப் பெரியதாகவே அல்லது சிறியதாகவோ இருந்தாலும் அதற்கு ஒரே ஒரு மையம்தான் உண்டு. ஆனால் அதற்கு எண்ணற்ற ஆரங்களை (Vadil) வரையலாம்.

கடவுளை வட்டத்தின் மையத்திற்கு ஒப்பிடலாம். பல்வேறு மதங்களையும் பல ஆரங்களுக்கு ஒப்பிடலாம். ஆதலின் இந்த அகிலம் முழுமைக்கும் ஒரே ஒரு கடவுள்தான் இருக்க முடியும். எண்ணற்ற மதங்கள் இருக்கவே செய்யும். எல்லா மதங்களுடைய குறிக்கோளும் மனிதனிடம் தூய்மை, தெய்வீகம், வளமை, அமைதி, மகிழ்ச்சி போன்றவற்றை உண்டாக்கி, கடைசியாக அவன் தோன்றிய இடத்துக்கே — கடவுளிடம் கொண்டு போய்ச் சேர்ப்பதேயாகும். இந்தக் குறிக்கோளை மறந்தே போனோம்.

உலகிலுள்ள பல மதத்தினரும் குழந்தைக்கான ஆரம்ப வகுப்பின் நிலையிலேயே இருந்து கொண்டு தங்களைப் பின்பற்றுபவர்களிடம் காக்கை, குருவி

கதைகளைச் சொல்லித் தவறான பாதையில் அழைத்துச் செல்கின்றனர்.

இது மிகவும் வருந்தத் தக்க, விபரீத நிலையே யாகும். அவர்கள் அனைவருமே தங்களைப் பின்பற்றுபவர்களின் எண்ணிக்கையைப் பெருக்க விரும்புகிறார்களேயொழிய, அவர்களுடைய ஆன்மீக முன்னேற்றத்தைப் பெருக்க விழைவ தில்லை.

சீடர்களில் பெரும்பாலோரும் அவர்களுடைய குருமார்களும் கண்மூடித்தனமான மத வெறியர் களாக மாறி விடுகின்றனர். காரண காரியமற்ற செயலாகும் இது.

அவர்கள் காக்கைகளைப் போலவும், பயங்கரப் புலிகளைப் போலவும் நடந்து கொள்கின்றனர். ஒரு காக்கை அல்லது புலி தனது குஞ்சு, குட்டி களிடம் மிகவும் அன்புடன் இருக்கும். அதே நேரத்தில் மற்ற ஜாதிப் பறவைக் குஞ்சுகளையோ, வேறு மிருக இனக் குட்டிகளையோ கண்டால் தயை தாட்சண்யமின்றி துண்டு துண்டாகக் குதறிக் கிழித் தெறியும்.

கடவுள் ஒருவரேயானாலும், கடவுளின் பெயரால் இந்த உலகில் எவ்வளவோ இரத்தம் சிந்தப்படுகிறது. சுயநலம், வெறுப்பு, இரக்கமற்ற சுபாவம், அறிவீனம் போன்றவைகளே இதன் முக்கிய காரணமாகும்.

தற்போது உலக சமாதானத்தைக் குறித்துப் பேசுவது ஒரு நாகரீகமாக ஆகிவிட்டது. ஒவ்வொரு பெரிய அல்லது சிறிய நாட்டின் தலைவரும் உலக சமாதானத்தைக் குறித்துத்தான் பேசுகிறார். அவர்கள் அதை ஒரு பொருட்டாக மதித்துப் பேசுவதில்லை. அவர்களுடைய மனத்தில் சுயநல நோக்கங்களே மிகுந்திருக்கும். யுத்தங்கள் மூளக் கூடும் என்று நினைக்கும் அவர்கள் துப்பாக்கிகள் குண்டுகள், விமானங்கள் போன்ற தளவாடங்களை, போரில் ஈடுபடும் தேசங்களுக்கு விற்பதற்காகவே இரகசியமாக உற்பத்தியைத் துவக்குகிறார்கள்.

அதன் மூலம் அவர்களுடைய தேசத்தின் தொழில் வளத்தைப் பெருக்கவும், தங்களுடைய தேசீய வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளவும் விழைகின்றனர். எங்கு பார்த்தாலும் நயவஞ்சகம் மேலோங்கி இருக்கிறது.

ஒரு தேர்ந்த அறிவாளி தன் அறிவை கீழ்த்தரமான ஆபாசங்களுக்காக விலை கூறுவானானால் அவன் கொடிய மிருகத்தை விடக் கேவலமானவனாகிறான். விஞ்ஞானத்திலும், நாகரீகத்திலும் முன்னேறி விட்டதாக மார்தட்டிப் பெருமை அடித்துக் கொள்ளும் அதே நேரத்தில், மனிதன் இன்னும் மிருகமாகவே நடந்து கொள்கிறான். இதற்குக் காரணம் என்னவெனில் அவன் தான் எங்கிருந்து வந்து உலகில் தோன்றினோம் என்ற மூலத்தை—வாழ்க்கையின் குறிக்கோளை அடியோடு மறந்து போவதேயாகும்.

பெரும்பாலான மத நிறுவனங்களும் அதன் குருமார்களும், சீடர்களும் ஆன்மீக வளர்ச்சி என்பதையே பெறாத நிலையில் செல்வம் சேர்ப்ப தில் மட்டுமே சுறுசுறுப்பாக இருக்கின்றனர்! உலகமே பெரிய ஆபத்தில் சிக்கியுள்ளது!

கடவுளே முடிவான உண்மை. அதற்கு உருவம் கிடையாது. ஒரு பெயர், ஓர் உருவம் போன்றவற் றின் உதவியின்றி ஓர் குறிப்பிட்ட எல்லைக்குள் இயங்கும் மனிதமனத்தினால் கடவுளை நினைத்துப் பார்ப்பதென்பது முடியாத ஒன்று. அதனால்தான் கடவுளை வணங்கவும், அவரை மனத்தினால் நினைக்கவும், மனிதன் எண்ணிலடங்காத பெயர் களையும், உருவங்களையும் அமைத்துக் கொண் டான்.

தன் முயற்சியில் கருத்தூன்றியுள்ள ஒருவனும் தூய்மையும் தெய்வீகமும் நிறைந்த வாழ்வை மேற் கொள்ளும், கடினமாக உழைக்கும் ஒருவனும் அந்த பேருண்மையைப் பெறுகின்றனர். தான்பிறந்துவந்த மூலப் பொருளிடத்துக்கே போய்ச் சேருகின்றனர்.

கடவுள் எல்லா உயிர்களுக்கும் பொதுவான சொத்து. நிலைமை அவ்வாறிருக்க எந்த ஒரு தனிப்பட்ட தேசமோ மதகுருவோ, அல்லது எந்த ஒரு சாத்திர நூலோ கடவுளை தனக்குத்தான் சொந்தமென்று உரிமை கொண்டாட முடியாது.

உதாரணமாக ஒரு மனிதன் உலகில் இருந்து புறப்பட்டு 'ராக்கெட்' மூலமாகச் சந்திரனை

நோக்கிப் பயணமாகிறான் என்று கொள்வோம். அந்த விண்வெளிப் பயணி உலகின் மேற்பரப்பி லிருந்து புறப்பட்டதிலிருந்து சந்திரனைப் போய்ச் சேரும்வரை சந்திரனை பல புகைப்படங்களாகப் படம் பிடித்துக் கொண்டே போகிறான்.

ஒரே சந்திரனைக் காட்டும் எண்ணிலடங்காத புகைப்படங்கள் நம்மிடமுள்ளன. எல்லாப் புகைப் படங்களுமே ஒன்று போலிருக்கவில்லை. ஒன்றி லிருந்து மற்றொன்று வேறாக இருக்கிறது. புகைப் படங்களில் மாற்றமிருந்தாலும், எல்லாப் புகைப் படங்களுமேஒரேசந்திரனையேதான் காட்டுகின்றன. அது போலவேதான் மனிதனின் பரிணாம வளர்ச்சி யில் ஏகப்பட்ட வித்தியாசமிருக்கிறது.

ஞானிக்கும் (நிர்விகல்ப சமாதி நிலை எய்திய மகான்) முட்டாளுக்கும் இடையே பெரிய இடை வெளியிருப்பதும் இதன் காரணமாகத்தான் அதனாலேயே மனித இனத்தவர் தங்களுடைய விருப்பம், மனப்போக்கு, ஆன்மீக வளர்ச்சி போன்றவைகளுக்கேற்ப தாங்கள் கடவுளை வணங்கு வதற்கான பல்வேறு பெயர்களையும், உருவங்களை யும் அமைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. பல்வேறு மத நிறுவனங்களும் இந்த தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன.

ஆயினும் பல்வேறு மதநிறுவனங்களின் வெறி கொண்ட தன்மை இந்த உண்மையை அடியோடு மறந்து போய் அவரவர் மதமே உயர்வானது

உண்மையானது என்றும், அவரவர் மதநூல் (சாத்திர நூல்) ஒன்றே கற்றுக் கொள்ளச் சிறந்தது எனவும், அவரவர் மதகுருவே கடவுளால் அனுப் பட்ட ஒரே தூதுவர் என்றும், அவரவர் மதகுருவை யன்றி வேறு யாரைப் பின்பற்றிச் சென்றாலும் மோட்சமென்பது கிட்டாது என்றும் எண்ணிக் கொள் கின்றனர். இது போன்ற குறுகிய மனப்பான்மை யும், அர்த்தமற்றவிளக்கங்களும் கொண்டபிரச்சாரமே மனித இன்பத்தின் துன்பங்களுக்கும், வீழ்ச்சிக்கும் காரணங்களாக உள்ளன.

பல்வேறு மதநிறுவனர்களும் உண்மையிலேயே சிறப்புமிக்க சில ஆற்றல்களைக் கை வரப் பெற்றவர் களேயாவர். சாதாரண மனிதர்களைவிட அவர்கள் எவ்வளவோ உயர்ந்தவர்கள்; மேலானவர்கள். அவர் களில் சிலர் சாத்திரம் மட்டும் கற்றறிந்த மேதைகள். சிலர் அருள் நிலை எய்திய அருளாளர்கள். மற்றும் சிலர் சவிகல்ப சமாதிநிலையை (கடவுளின் உருவ தரிசனம் பெற்றவர்கள்) எய்தியவர்கள். அதில் ஒரு சிலர் மட்டுமே நிர்விகல்ப சமாதி நிலையை (ஆழ்நிலைப்பேறு) எய்திய மகான்கள்.

பல நிறுவனங்களும் பாதிவழியிலேயே நின்று போனவை. அவைகளின் முடிவுகள் பலரையும் தவறான பாதையில் செலுத்தி விட்டன.

பல்வேறு, மதங்களும் நேர்மையாளர்களுக்குப் பரிசாக சொர்க்கமும், கொடியவர்களுக்குத்தண்டனை

யாக நரகமும் கிடைக்கிறது என்ற முடிவோடு நின்று விடுகின்றனர். நரகம் சொர்க்கம் என்னும் இதுபோன்ற வற்றை, கற்பனை முட்டாளாக உள்ள ஒரு மனித னுக்குப் பயிற்சி அளிப்பது மிகவும் அத்தியாவசியத் தேவையாக இருக்கிறது. இது போன்ற விளக்கத் தினால் ஒருவன் கொடிய செய்கைகளைச் செய்வதி லிருந்து ஒதுங்கி நல்லதையே செய்ய நினைக்கவும் கூடும்.

ஆனால் இதில் மறைந்திருக்கும் உண்மையைப் புரிந்து கொள்ளாததாலேயே மூடமதி படைத்த மதவெறியர்களிடையே சண்டை மூள்கிறது. இது மிகவும் பயங்கரமானது. ஆகவே ஒரு கொள்கை யினர் மற்ற கொள்கையினரை சரிவரப் புரிந்து கொள்ளுதல், ஒரு மதத்தினர் மற்றமதத்தினரிடம் அன்பையும் சகிப்புத் தன்மையையும், பரிவையும் காட்டுதலே மிகவும் அவசியமாகிறது.

ஒருவன் எந்த நிலையில் இருக்கிறானோ அதே நிலையில் அவனுக்குத் தேவையான உதவியைச் செய்.

''ஆதரவு கொடுப்போம்-அகற்ற மாட்டோம்'' என்பதே அகண்டைக மதத்தின் மூலமந்திரமாகும். இந்த மதம் ''அகண்ட ஏகம்'' ஆனது.

எந்த ஒரு இனத்துக்கும் சாதிக்கும் மதக் கொள் கைக்கும் சித்தாந்தத்துக்கும் எதிரானதல்ல! நடை முறைக்குக் கொண்டு வரக்கூடிய, சந்தேகத்துக்கு

இடமளிக்காத மிக உயர்ந்த சித்தாந்தத்தை இந்த மதம் எடுத்து விளக்குகிறது. விஞ்ஞானத்தின் இரசாயனப் பரிசோதனைகளுக்கும் ஈடுகொடுத்து நிமிர்ந்து நிற்கக் கூடியது இந்தச் சித்தாந்தம்.

சாதி, சமய, நிற, ஆண், பெண் பேதங்களைக் கடந்து எல்லோரிடமும் ஒரே மாதிரியான அன்பை யும் பரிவையும் காட்டுவதே இதன் குறிக்கோளாகும்.

விரிவாகக் கூறப் போனால் மனித மனம் நால் வகை முக்கிய ஆற்றல்களைக் கொண்டுள்ளது. அதாவது, உறுதி கொள்ளுதல், ஈடுபாடு கொள்ளு தல், சிந்தனை செய்தல், ஒன்று திரட்டுதல் ஆகிய வைகளே அவை. இந்த எல்லா ஆற்றல்களுமே மனித மனத்தில் இருப்பினும், ஒரு சாதாரண நபரிடம் எல்லாமும் ஒரே அளவில் வளர்ச்சி பெற்றி ருப்பதில்லை.

பெரும்பாலோரிடம் இதில் ஏதாவதொருஆற்றல் மற்ற மூன்றைவிட அதிக வளர்ச்சியைப் பெறுகிறது. இறையுணர்வு பெறவோ அல்லது நிர்விகல்ப சமாதி நிலையை எய்தவோ மனித மனத்தின் இந்த முக்கிய ஆற்றல்களின் அடிப்படையில் பின்பற்ற வேண்டிய பிரதான வழிகள் நான்கு ஆகும்.

அவை தொழில் செய்தல், வழிபடுதல், தத்துவ ஆராய்ச்சி, மனக்கட்டுப்பாடு ஆகியவற்றின் மூலமே சித்திக்கிறது. உலகிலுள்ள எல்லா மதங் களையுமே இந்த நால்வகைத் தலைப்புகளில்

ஏதாவதொன்றின் கீழ் சந்தேகமறப் பொருத்திக் காட்ட முடியும்.

சில மதங்கள் தொழில் செய்தலுக்கு முக்கியத் துவம் அளிக்கின்றன. சில கடவுள் வழிபாட்டிற்கும் வேறுசில மதங்கள் தத்துவ ஆராய்ச்சிக்கும், மற்றும் சில மனக்கட்டுப் பாட்டிற்கும் முக்கியத்துவ மளிக் கின்றன.

ஆனால் இந்த 'அகண்டைக மதம்' நால் வகைப் பாதைகளுக்குமே முக்கியத்துவமளிக்கிறது. முயலும் சாதகர்களை அவரவர் விருப்பம், நோக்கம் ஆன்மீக வளர்ச்சி போன்றவற்றிற்கும் ஏற்ற பாதை களில் அழைத்துச் செல்கிறது.

# 2. நிறுவனர்

## அகண்டைக மதத்தின் நிறுவனர்

சுவாமி நாராயணானந்தா அகண்டைக மதத்தை உலகுக்கு முதன் முதலில் அளித்தவர் ஆவார். அவர் தென்னிந்தியாவில் உள்ள கூர்க் நாட்டில் மதிப்பு மிக்க கூர்க் குடும்பத்தில் பிறந்தார்.

சிறுவனாக இருந்தபோதே தினந்தோறும் காலை, மாலை வேளைகளில் அவன் தியானத்தில் அமருவது வழக்கம். அவனுக்கு குருவோ, அல்லது

வழிகாட்ட வேறெவருமே இல்லாத நிலையிலேயே இந்த வழக்கம் இருந்தது. இந்தத் தியானத்தின் விளைவாக அவன் மாணவனாக இருந்த போதே ஆழ்ந்த ஒருமைப் பாட்டு நிலையை எய்தினான்.

1929 ஆம் ஆண்டில் தனது இருபத்தேழாவது வயதில் சுவாமி நாராயணானந்தா ஊரையும் வீட்டையும் விட்டு இறையுணர்வைப் பெறுவதற்காக இமாலய மலைச்சாரலை அடைந்தார். கடும் (தன்னிலை மறந்த தவம்) தவத்திற்குப் பின்னர் 1933 ஆம் ஆண்டு அவர் நிர்விகல்ப சமாதி நிலையை (ஆழ்நிலைப் பேறு) எய்தினார். மிகவும் உயர்ந்த மேலான சமாதிப் பேற்றை எய்திய பிறகும் சுவாமி நாராயணானந்தா 1947 ஆம் ஆண்டு வரை தனிமையிலேயே இருந்து இறையனுபவத்தை உணர்ந்து கொண்டிருந்தார். பிரிட்டிஷ் ஆளுகையின் கீழ் இருந்த இந்திய நாடு 1947 ஆம் ஆண்டில் சுதந்திரமடைந்தது.

1880 ஆம் ஆண்டிலேயே இந்தியர்கள் சுதந்திரத்திற்கான கோரிக்கையை எழுப்பினார்கள். இந்தக் கோரிக்கை நாளாவட்டத்தில் சூடுபிடித்து வலிமை யடைந்தது. அதன் பிறகு முதல் உலக மகாயுத்தம் மூண்டது. யுத்தம் முடிந்த பிறகு சுதந்திரத்தைக் கொடுப்பதாக ஆங்கிலேயேர்கள் வாக்குறுதியளித்து நமது நாடு பூராவிலிருந்தும் படைவீரர்களையும் அதற்கான உதவிகளையும் யுத்தத்திற்குத் திரட்டிச் சென்றனர். இந்தியப்

போர் வீரர்கள் இரத்தத்தைச் சிந்தி உயிரையும் கொடுத்து ஐரோப்பிய யுத்தத்தில் போரிட்டனர். யுத்தத்தில் வெற்றி கிடைத்தது.

'வர்செய்ல்ஸ்' சமாதானத்திற்குப் பின்னர் சுதந்திரத்துக்குப் பதிலாக இந்தியாவிற்குக் கிடைத்தது ரௌலட் சட்டம் (இந்த சட்டத்தின் பிரகாரம் ஒரு சந்தேகத்திற்குரிய நபரைக் காலவரையின்றி விசாரணை இல்லாமலே சிறைப் படுத்தி வைக்கலாம்).

இது தேசத்தையே ஆர்ப்பரிக்கச் செய்தது. இதற்கு எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில் தேசத் தலைவர்களும், மற்ற மக்களும் ஒரு பொதுக் கூட்டத்தைக் கூட்டினார்கள். கூட்டத்தின் இடையில் அப்பாவி மக்களை ஆண்கள், பெண்கள், குழந்தைகளைக் கொன்று குவிக்கும்படி போர் வீரர்களுக்கு ஆணை பிறப்பிக்கப் பட்டது. இந்தப் படுகொலையின் விளைவாக ஒத்துழையாமை இயக்கம் துவக்கப்பட்டது.

இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றாகச் சேர்ந்து ஒரு போராட்டமாக சுதந்திரக் கோரிக்கையை எழுப்பினர் ஆங்கிலேயர்களால் இதைப் பொறுக்க முடியவில்லை. அவர்கள் தீவிர சிந்தனையில் ஈடுபட்டனர். அப்போது இந்திய வைஸ்ராயாக (இந்தியாவின் பிரதான ஆளுநரை வைஸ்ராய் என்று அழைப்பது வழக்கம்) இருந்தவர், தொடர்ந்தாற் போல் மூன்று நாட்கள் உறங்கவே

இல்லை. என்ன செய்வது? இதை எப்படிச் சமாளிப்பது என்ற குழப்பத்தில் இருந்தார்.

அதுவரை ஒரே பெற்றோருக்குப் பிறந்த குழந்தைகளைப் போல சௌஜன்யத்துடன் வாழ்ந்து வந்த இந்துக்களும் முஸ்லீம்களும் சீக்கியர்களும் ஒருவர் மீது ஒருவர் மிகவும் பயங்கரமாக வெறுப்புற்றனர்.

கொள்ளை, கன்னியரையும், இளம்பெண் களையும் கற்பழித்தல், கொலை, வெட்டி வீழ்த்துதல் போன்ற நாச வேலைகள் கட்டுமீறித் தலைவிரித்தாடின.

இதே நேரத்தில் தனி நாட்டிற்கான (முஸ்லீம் நாடு) கோரிக்கையை முஸ்லீம்களைக் கொண்டு எழுப்பச் செய்தனர். இதன் விளைவாக இந்துஸ்தான், பாகிஸ்தான் என்ற இருவேறு நாடுகளாக இந்தியா துண்டாடப்பட்டது.

இந்தியாவை இரு நாடுகளாகப் பிரித்து அவர்களுக்குச் சுதந்திரம் கொடுப்பதற்கு முன்னரே அந்தந்த நாட்டினரை தக்க பாதுகாப்புகளுடன் வெளியேற்றி இருந்தால் அது நன்றாக இருந்திருக்கும். ஆனால் அதை இங்கே செய்யவில்லை. பாகிஸ்தானிலிருந்த இந்துக்கள் கொடிய நரக வேதனைக்கு ஆளானார்கள்.

முஸ்லீம்கள் மனித சுபாவத்திற்கு அப்பாற்பட்ட எல்லாவகைக் கொடுஞ் செயல்களையும் புரிந்தார்கள்.

முன் கூட்டியே திட்டமிட்டபடி எல்லாமே நடந்தது. இந்தியாவிலிருந்த இந்துக்களுக்கு தங்கள் சகோதரர்களுக்கும், சகோதரிகளுக்கும் இழைக்கப்பட்ட கொடுமையையும், பாகிஸ்தானில் தங்கள் உற்றார் உறவினர் நிராதரவாக விடப்பட்ட செய்தியையும் கேள்விப்பட்டவுடன் வெகுண்டு எழுந்த இவர்களும் அதே செயலைத் திருப்பிச் செய்தனர். விளைவுகள் மிகவும் பயங்கரமாயின. இருசாராருமே மனித இரத்தத்தில் விளையாடினார்கள்!

இருபுறத்திலும் ஒன்றுமறியா கன்னிப் பெண்களுக்கும் மற்ற பெண்களுக்கும் கண்ணிய மிக்க ஒழுக்க சீலர்களுக்கும் இழைக்கப்பட்ட கொடுமைகயை விளக்கிச் சொல்லவே நா கூசுகிறது!

இரு சாராரினாலும் செய்யப்பட்ட கொடிய ஆபாசச் செயல்களை விளக்குவதென்றால் அது ஒரு பெரிய புத்தகமாக உருவாகும்.

இரத்தினச் சுருக்கமாகச் சொல்வோமானால் இவர்கள் எல்லாருமே மிருகங்களைவிட மிகக் கேவலமாக நடந்து கொண்டார்கள்.

கடவுளையும் மதத்தையும் சரிவரப் புரிந்து கொள்ளாத தன்மையினால் கடவுள், மதம்; ஜாதி, நிறம் ஆகியவற்றின் பெயரால் இவை அனைத்துமே நிகழ்ந்து விட்டன.

இது போன்ற கொடிய துன்பங்களையும் மனித குலத்தின் அறியாமையையும் கண்டு சுவாமி நாராயணானந்தாவின் இதயம் உருகிற்று. இந்தக் கோர சம்பவம் தனிமையிலிருந்து அவரை வெளியேறச் செய்து புத்தகங்களை எழுத வைத்தது.

இந்த நிகழ்ச்சியே அகண்டைக மதத்திற்கு அடித்தளம் அமைப்பதற்கான முக்கிய காரணமாக இருந்தது.

## 3. கடவுள்

காரணமில்லாமல் காரியமில்லை. ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்று பிறப்பதில்லை. உயிரற்ற பொருளோ அல்லது உயிர்ப்பில்லாத சக்தியோ உயிர் உணர்வையோ உயிர்ப்புள்ள உயிர்களையோ தோற்றுவிக்க முடியாது. ஏதோ ஒன்று உயிர் வாழ்கிறது அல்லது ஒன்றுகூட உயிருடன் இல்லை என்று சொல்வோமானால் உயிர்ப்பு என்ற ஒன்றும் அல்லது உயிர்ப்புள்ள பொருள்களும் இருந்தேயாக வேண்டும்.

கடவுள் இருக்கிறார், அல்லது கடவுளே இல்லை என்று சொல்லக் கூடிய அதே மனிதன் தன்னையே இல்லை என்று சொல்ல முடியுமா? நீ உயிருடன் இருக்கிறாய் என்பதற்கு எந்த அத்தாட்சியை நீ காட்டப் போகிறாய்?

பொதுவாக நீ கூறுவது ''என் உடம்பு, என் புலன்கள், என் அகங்காரம், என்னுடைய மனம், என்னுடைய புத்தி, என் நினைவு என்பது போன்ற முறையிலேயே இருக்கிறது. அவ்வாறு நீ சொன்ன வுடன் நீயே உன் உடம்பு நீ அல்ல; உன் புலன்களு மல்ல, உன் அகங்காரமும் நீ அல்ல, உன் மனமும் அல்ல, உன் புத்தியும் நீ அல்ல, உன் நினைவும் நீ அல்லஎன்ற தோரணையில் நீ ஒத்துக்கொள்கிறாய். அப்போது அந்த நீ யார்? அதைக் கண்டுபிடி.

உன் உள்ளே இருக்கும் உயிரே கடவுள். உயிர் உணர்வுக் கடலாகவே கடவுள் இருக்கிறார். அது மகா காரணமாக உள்ளது. காரணங்களுக்கெல்லாம் மூல காரணமாக இருக்கிறது. அதுவே முடிவான பேருண்மை! இரண்டாவது அற்ற ஒன்றே ஒன்று அது. அந்த ஒரே கடவுளைத்தான் பிரம்மன், முடிவற்றவன். மாபெரும் காரணகர்த்தாவாக இருப்பவன். முடிந்த பேருண்மையாக நிலவுபவன், பேராற்றல், மகாசக்தி, இயற்கை போன்ற பல பெயர்களால் அவனை அழைக்கிறோம்.

உண்மை இது மட்டுமல்ல. இந்த உலகில் எவ்வளவு மொழிகள் இருக்கிறதோ அவ்வளவு மொழிகளையும் பேசும் உலக மக்கள் அந்த மகாகாரணமான ஒரே பொருளைக் குறித்துப் பல பெயர்களால் அழைக்கிறார்கள். பெயர்கள்

மாறுபடலாம். பொருள் என்னமோ ஒன்றே ஒன்
தான்.

கடவுளுக்கென்று ஒரு தனிப்பட்ட பெயரே குறிப்பிட்ட வடிவமோ கிடையாது. அதே சயமத்தி அவருக்கு எண்ணிலடங்காத பெயர்களும் வடிங் களுமிருக்கின்றன.

கடவுள் தனக்கே உரித்தான நிலையில் உரு மற்றவர். ஓர் எல்லைக்குள் இயங்கும் மனித மன தினால் கடவுளை அருவ நிலையில் நினைவுக்கு கொண்டு வர முடிவதில்லை. அவன் நினைத்து பார்க்க அவனுக்கு எப்போதுமே ஒரு உருவ வேண்டும். அதனாலேயே அவன் கடவு 'அவன்' என்றும் லோகமாதா என்றும் அழை கின்றான்.

ஒரு வட்டத்தின் மையத்தைப் போன்றவ கடவுள். பல்வேறு மத நிறுவனங்களாலும் கொ கைகளாலும் நம்பிக்கைகளாலும் பின்பற்றப்படு வெவ்வேறு பாதைகளும், பொதுவாக அமைந்துள் ஒரே மையத்தில் வந்து சேரும் பல்வேறு ஆர களைப் போன்றவை.

கடவுள் எல்லாப்பொருள்களின் உயிர்ப்பொரு களாகவும் அனைத்து உயிர் உணர்வுக்கும் உயிர் சாரமாகவும், எல்லா சக்திகளின் ஆதி சக்தியாகவு அனைத்து அறிவு நிலைகளுக்கும் ஆதார ஞா மாகவும் இருக்கிறார்.

கடவுள் எல்லையற்றவர். முடிவு அற்றவர். சர்வ வியாபி. அசைவற்றவர். மாற்ற மற்றவர். பிறப்பற்றவர்; வளர்ச்சிஇல்லாதவர்;இறப்பற்றவர். இனபேதமற்றவர். அவர் எங்கும் முழுமையுடன் (பூரணம்) விளங்குபவர். இது போன்ற எல்லாக் குணங்களையும் உடையவர் ஒருவரே ஒருவராகத் தான் இருக்க இயலும்.

எல்லையற்றவர் என்றால் அவருக்கு முதலும் நடுவும் முடிவும் கிடையாது. ஆதலின் அவர் முடிவே இல்லாத ஒன்று ஆவார். அவற்றை இரண்டு என்று சொன்னால் ஒன்று மற்றொன்றுக்கு எல்லை வகுக்கும். எல்லை விதிக்கப்பட்ட பொருள் முடிவுள்ளதாகி விடுகிறது. எல்லை யற்றதற்கு மாறுதல் இல்லை. எல்லையற்ற பொருளில் இயங்கும் ஆற்றல் அல்லது சக்தியின் கூட்டுத் தொகை மாறுதலில்லாமல் ஒரே மாதிரி யாகத்தான் இருக்கும். ஆதலின் எல்லையற்ற பொருளில் ஓர் அணு அளவுகூட கூட்டவோ குறைக்கவே முடியாது. அவ்வாறு முடியுமாயின், எல்லையற்ற பொருளுக்கு எல்லை ஏற்பட்டு விடுகிறது. அதனால் எல்லையற்ற ஒன்றில் எந்த ஒரு மாற்றத்தையும் காண முடியாது.

கடவுளை நாம் எங்கும் வியாபித்துள்ள உயிரு ணர்வின் மகாசமுத்திரம் என்று கூறும் போது கடவுளோ அல்லது உயிருணர்வோ இல்லாத ஒரே ஒரு பொருள்கூட உலகில் இருக்க முடியாது என்பது தெளிவாகிறது. கடவுளோ அல்லது உயிர்

உணர்வோ இல்லாமல் ஒரு பொருளும் உயிர் வாழ முடியாது. இந்த அகிலத்துக்கான மூலகாரணமாயும் அதைத் தோற்றுவிப்பதற்கான மகாசக்தியாயும் இருப்பது கடவுள்.

எல்லா உயிர்களுமே கடவுளிடமிருந்து வந்து கடவுளிடத்திலேயே வாழ்ந்து, முடிவில் கடவுளிடமே போய்ச் சேருகிறது.

பல பெயர்களையும் உருவங்களையும் பெற்றுள்ள இந்த அகிலம் கடவுள் இல்லாமல் ஒரு கணம் கூட நிலைத்து நிற்காது.

''இந்த அகிலம் பொய்யானது!'' கடவுள் ஒன்றே உண்மையானது என்று கூறுவதின் பொருள் என்ன? பல பெயர்களையும் உருவங்களையும் உடைய இந்த அகிலம் தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கின்றன. மாறிக் கொண்டே உள்ள அதே பொருள் நிலையற்றதாகவும் பொய்யானதாகவும் ஆகிறது. ஆனால் இந்த மாறிவரும் பொருளுக்குப் பின்னணியில் மாறாத, மாற்ற முடியாத ஒன்றுதான் கடவுள்!

நாம் அகிலத்திலுள்ள எல்லாப் பெயர்களையும் உருவங்களையும் நீக்கிவிட்டுப் பார்த்தால் எஞ்சி நிற்கக் கூடியது கடவுளே, கடவுள் ஒருவர் மட்டுமே யாகும்.

முன்பே கூறியுள்ளது போலக் கடவுள் உயிருணர்வின் பெருங்கடல். அதற்கு எல்லா சக்தி

களும், எல்லா ஆற்றல்களும் உண்டு. உயிருணர்வு ஒளியோ அல்லது இருளோ அல்ல. அது சூடோ அல்லது குளிர்ச்சியோ அல்ல.

இவ்வாறான எதிரும் புதிருமான விஷயங்கள் புலன்களின் பேத உணர்வினால் அறியப்படுவனவே யாகும். அந்தப் பேதங்கள் மனத்தினால்தான் எழுகின்றன. உயிருணர்வு ஆணுமில்லை பெண்ணுமில்லை அது இனபேத மற்றது. இந்த இனபேத உணர்வு உடலையும் மனத்தையும் பொறுத்ததேயாகும். ஒரு வகையில் கடவுளைக் காண முடியாது. காண்பது என்பது ஒரு பொருளுக்கான உருவத்தைப் பார்ப்பது.

கடவுள் எல்லாப் பொருளுக்கும் மூலப் பொருளாக இருக்கும்போது அதை எப்படிக் காணும் பொருளாகப் பார்க்க முடியும்?

இது நடக்க முடியாத ஒன்று! வேறொரு வகையில் கடவுள் உன் புலனுக்கு எட்டாதவர். கடவுள்உனக்குள்ளேயே உறைவதால், உன்னுடைய சொந்த உயிர் உணர்வாகவே இருப்பதினால், அது உன் புலனுக்கு எட்டாத நிலையில் உள்ளது.

நீ உயிருடன் இருக்கிறாய் என்பதற்கு எந்தக் காரணத்தைச் சொல்ல விரும்புகிறாய்?

போலி உருவ அமைப்பினால், நீ உன்னுடைய இயற்கையான சுபாவத்தையே மறந்து விட்டாய். இப்போது அதைக் கண்டுபிடி.

கடவுள் சிறு துரும்பைவிட மிகச் சிறியவர்: மிகப் பெரியதைவிட மகத்தானவர். இந்த இரண்டு நிலைகளும் ஓர் எல்லைக்குள் இயங்கும் மனித மனத்திற்கு எப்படி எட்டும்?

ஓர் எல்லைக் குட்பட்ட மனித மனத்தின் கடவுளைப் பற்றிய உயர்வான கற்பனையே நிரந்தரமான பரம்பொருள், பரம ஞானமானவர். பரம ஆனந்தமானவர் (சத்து-சித்து-ஆனந்தம்) என்பதேயாகும்.

கடவுளைப் பற்றிய இந்த உயர்வான கருத்து கூட எல்லையற்ற பரம்பொருளுக்கு எல்லை வகுப்பது போலவேயாகும்.

நிர்விகல்ப சமாதி நிலையில் (ஆழ்நிலைத் தன்மை) மட்டுமே அவருடைய உண்மையான சுபாவத்தையும் உயிருணர்வின் இயல்பான சாரத்தையும் உணர முடியும். புலன்கள், மனம் ஆகியவற்றின் உதவியின்றியே கிடைத்த அனுபவ மாகும் இது.

மனம் ஆன்மாவில் ஒடுங்கியதும், தனித்தியங் கும் உயிருணர்வு மென்மையும், சூக்கும நிலையை யும் பெற்று உயிர்ச்சார மகாசமுத்திரத்தில் ஒன்றி விடும்போது இந்த அனுபவம் ஏற்படுகிறது.

# 4. அகிலம்

படைத்தல் என்னும் சொல்லே தவறானது. ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்று உருவாகிறது என்ற கருத்தை அது நிலை நாட்டுகிறது. மேலும் அது எல்லையற்ற ஒன்றுக்கு எல்லை வகுக்கிறது.

கடவுள் எங்கும் வியாபித்து இருக்கிறார் என்று நாம் கூறிவிட்டு, அவரேதான் அனைத்தையும் படைக்கிறார் என்று சொன்னால் அதற்குப் பொருளே இல்லை. 'படைப்பாளி' என்பது உண்மையாயின் கடவுளுக்கு 'சர்வ வியாபி' என்ற பட்டத்தைக் கொடுப்பதும் பொருளற்றதாகிவிடும். பிறகு எங்கும் வியாபித்துள்ள கடவுள் ஒரு புறமிருக்க, அவருக்கு அருகில் அவர் வியாபித்து நிற்காத வேறொன்று இருப்பதாக நினைத்துக் கொள்ள வேண்டிய நிலைமைக்கு ஆளாகிறோம். மேலும் அது கடவுளுக்கு ஒரு எல்லையை வகுத்து விடுகிறது. முடிவற்றிருக்கும் ஒன்றில் ஒரு அணுவளவேனுங் கூட்டவோ குறைக்கவோ முடியாது என்பதை இதற்கு முன்பே சொல்லியிருக்கிறோம். அவ்வாறு செய்ய இயலுமாயின் எல்லையற்ற பரம்பொருளுக்கும் எல்லை வகுக்கப்படுவதாக ஆகி விடுகிறது. ஒரு எல்லைக்குள் அமைந்த ஒன்று எல்லையற்றதாகாது. எல்லையுடையதாகவே

கருதப்படுமல்லவா? ஆதலின் 'படைத்தல்' என்ற வார்த்தையே பொருளற்றது.

மனத்தினால் உருவாக்கப்பட்ட ஒன்றே இந்த அகிலம். மனத்திற்குக் கொடுத்துள்ள தவறான பயிற்சியினாலும், பல்வேறு ஆசைகள், பாபச் செயல்கள் போன்றவற்றின் விளைவாகவும் ஒன்றே ஒன்றைக் காண வேண்டிய இடத்தில் பலவாகத் தோன்றுவதைக் காண்கிறோம்.

உதாரணத்திற்கு சூரியனை எடுத்துக் கொள்வோம். சூரியனும் அதன் ஒளியும் இணைந்தே இருப்பவை. அவற்றைப் பிரிக்க முடியாது. ஒரு நாணயத்தின் பூவும் தலையையும் போன்ற நிலையை உடையது அது. ஒன்றை விட்டு மற்றொன்று மட்டும் வாழ்வது என்பது இயலாதது.

ஒளியில்லாத சூரியன் என்றால் பொருளற்றது. ஒளியும் ஒளிக்கதிர்களும் சூரியனில்லாமல் ஒரு கண மேனும் தனித்து வாழ முடியாது. அதே போல்தான் கடவுளும், அகிலமும் இணைந்திருப்பவை. இந்த அகிலம் இல்லாமலிருந்த காலமே கிடையாது. இந்த அகிலம் இல்லாமலிருக்கும் காலம் வரும் என்பதும் கிடையாது.

படைத்தல் எப்பொழுது ஆரம்பமாயிற்று என்று கேட்பது, கடவுள் எப்போது படைக்கப்பட்டார் என்று கேட்பது போலாகும். இது ஒரு அர்த்தமற்ற கேள்வி. இந்த அகிலத்தின் ஆரம்பத்தையும் நம்மால் உணர முடியுமானால் கடவுளின் ஆரம்ப நாளையும்

நம்மால் தெரிந்து கொள்ள முடியும். அதைத் தொடர்ந்துஎழும் கேள்வி 'அதற்கும் முன்னால் என்ன இருந்தது?' என்பதேயாகும்.

அதனால் அகிலம் எப்போதும் கடவுளுடன் சேர்ந்தே இருந்தது என்பதுதான் மெய். இந்தத் தோற்றமே நித்தியமானது. அது முன்பே இருந்தது, இப்போதுமிருப்பது; எப்போதும் இருக்கப் போவது.

ஐந்து புலன்களும், மனமும் புலப்படுத்துகின்ற அளவுக்கே நாம் அகிலத்தைப்பற்றி அறிகின்றோம். புலன்கள் பழுதடைந்து அறிவுக்குத் தவறான பயிற்சி கொடுக்கப்பட்டிருந்தால் நாம் பாதை மாறிப் போய் விடுவோம். அதன் பிறகு அகிலத்தைப்பற்றிய ஞானமும் தெளிவும் பழுதடைந்து விடும். விழித்த நிலையில் நாம் கேட்பதும், பார்ப்பதும், தொடு வதும், சுவைப்பதும், முகர்வதும் ஆகிய அனைத்துமே அப்பட்டமான உண்மையென்றே கருதிக் கொள்கிறோம்.

நாம் தூங்கும் நிலையில் கனவு காணும்போது விழித்த நிலையிலேற்பட்ட அனுபவங்களையும், விழித்த நிலையிலிருந்த உலகத்தையும்கூட மறந்து விடுகிறோம். பிறகு கனவு உலகத்தையே உண்மை யானதாகக் கருதுகிறோம். கனவின் தன்மைக்கேற்ப நாம் சிரிக்கிறோம், அழுகிறோம்.

அதற்குப் பிறகு நாம்ஆழ்ந்த உறக்க நிலையில் இருக்கும்போது கனவு உலகையும், அதே போல் விழித்த நிலை உலகையும் மறந்து விடுகிறோம்.

ஒரு மனிதன் நிர்விகல்ப சமாதி நிலையை எய்திய போது முழுக்க முழுக்கப் புதுமையானதொரு அனுபவத்தை எய்துகிறார். இது ஈடு இணையற்ற நிரந்தரமான அனுபவ சித்தியாகும். இந்த நிலையை ஒரு முறை எய்திய பிறகு அறியாமை என்பது அடியோடு அழிக்கப்படுகிறது. பேதங் களிலும் ஒற்றுமையையே காண்கிறார்.

அது போன்றவருக்கு பல பெயர்களும், உருவங்களும் கொண்ட அகிலமே அடியோடு மறைந்து விடுகிறது. அந்த நிலையில் ஒருவர் தன் சொந்தப் பிரகாசத்திலேயே பிரகாசிக்கிறார். உயிர்ச் சார மகாசமுத்திரத்திலேயே கலந்து விடுகிறார். அவ்வாறு ஆழ்நிலைத் தன்மையை எய்திய ஒருவர் உலகத் தொடர்பு நிலைக்கு இறங்கி வந்தவுடன் இந்த அகிலத்தின் பெயர்களையும், உருவங் களையும் கண்டு மயங்க மாட்டார். எல்லாப் பெயர் களுக்கும் உருவங்களுக்கும் பின்னணியில் அவர் கடவுள் ஒருவரையே காண்கிறார்.

உதாரணமாகப் பொன்னால் செய்யப்பட்ட பல்வேறு பெயர்களையும், அமைப்புகளையும் கொண்ட ஆபரணங்களை எடுத்துக் கொள். ஒரு குழந்தை தனக்குள்ள அறியாமையினால் பல்வேறு ஆபரணங்களின் பெயர்களையும், அமைப்புகளை

யுமே உண்மை என நினைத்துக் கொள்கிறது. அதற்கெல்லாம் பொதுக் காரணமாக உள்ள பொன்னையே அது பார்ப்பதில்லை. மறந்தே போகிறது.

ஆனால் வயதான ஒருவருக்கு இந்த நிலை ஏற்படுவதில்லை. அவருக்கு உண்மை விளங்கி விடுகிறது.

இதே போன்றதுதான் அறியாமையிலுள்ள மனிதனுக்கும், நிர்விகல்ப சமாதி நிலையை எய்திய மகானுக்குமிடையிலான மாறுபட்ட நிலையும்.

ஒரு சாதாரண மனிதனுக்கு இந்த உலகம் உண்மையானதாகவே தோன்றுகிறது. ஏனெனில் அவனுடைய புலன்கள் தொடர்ந்து அது கண்டறியும் விவரங்களைப் புலப்படுத்திக் கொண்டேயிருக்கிறது. அவன் அவைகளைப் பார்க்கிறான், தொடுகிறான், அவைகளை முகர்கிறான், அவைகளைக் கேட்கிறான். அவைகளைச் சுவைக்கிறான். இந்த நிலைமையில் அவன் எவ்வாறு அவைகளை மறுக்க முடியும்; எப்படி அவன் அவைகளைப் பொய்யென்று சொல்ல முடியும்?

கடவுள் நுண்மையிலும் அதிநுட்பமானதாக இருப்பதால் புலன் தொடர்புகளுக்கு அது எட்டாது போகிறது. அதனாலேயே அவன் கடவுள் இருக்கிறார் என்பதை நம்புவதில்லை.

மனித வாழ்வின் மாறுபட்ட நிலைகளையும், பல்வேறு பருவங்களையும், பலதரப்பட்ட அனுபவங்களையும் ஆராய்ந்து பார்த்தால் ஒரு சாதாரண மனிதனுக்கு ஏற்படும் குழப்பத்திற்கும், அனாதரவான நிலைமைக்குமான காரணங்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

விழித்த நிலையில் அவனுக்கு உலகம் உண்மையாகப்படுகிறது. அவன் கனவு காணும்போது விழித்த நிலை உலகத்தை அவன் மறந்து போகிறான். இந்த நேரத்தில் அவனுக்குக் கனவு நிலை உலகமே உண்மையெனத் தோன்றுகிறது. மறுபடியும் அவன் ஆழ்ந்த உறக்க நிலைக்குப் போகும்போது விழித்த நிலை உலகம், கனவு நிலை உலகம் ஆகிய இரண்டையுமே முழுக்க முழுக்க மறந்த நிலைக்குஆளாகிறான்.

ஆதலின் எந்த நிலை வாழ்வை நாம் உண்மையானது என எடுத்துக் கொள்வது? இதற்கு ஏதாவது நிவாரண முண்டா?

உண்டு! அதை அறிய விரும்புபவர்களுக்கு நிச்சயமாக நிவாரணம் உண்டு!

அதைத் தேடிப் போகிறவர்களுக்கு நம்பிக்கை ஒளி பிறக்கும்.

இப்போதே அங்கு செல்ல விரும்புபவர்களுக்கு இதோ பாதை போகிறது.

இதற்கான இரகசியமே மனக்கட்டுப்பாடு தான்! ஒருவன் எப்போது மனத்தைப் பூரணமாகக் கட்டுப்படுத்துகிறானோ அப்போதே அவன் சமாதி நிலையை எய்துகிறான். நிர்விகல்ப சமாதிநிலையில் ஒருவர் தனக்குள்ளேயே உள்ள பேருண்மையைக் காண்கிறார். அதுவரை அவர் நரக வேதனையையே அனுபவிக்கிறார்.

உயிருணர்வின் சாரமானது அகிலம் முழுவதிலும், அதாவது எல்லையற்ற பரம்பொருளாக வியாபித்து நிற்கிறது. அது எப்போதும நிரம்பித் ததும்புகிறது. அதைக் கூறு போடவே முடியாது. ஆனால் அது பார்வைக்கு பல்வேறு பகுதிகளாகத் தோற்றமளிக்கிறது. ஏனெனில் ஒருவருடைய மனத்திற்கு அளிக்கப்படும் தவறான பயிற்சியினால் பதிந்துபோன கருத்தும் பேதத்தினாலாகும்.

உதாரணத்திற்கு உதய சூரியனை எடுத்துக் கொள்வோம். பரந்து கிடக்கும் காட்டில் பனித்துளிகளால் நிறைந்திருக்கும் இலைகளின் மீது கதிர்கள் போய் விழுகின்றன. கணக்கற்ற பனித்துளிகளின் மீது விழும் ஒளிக் கதிர்களின் பிரதிபலிப்பில் ஒரு சூரியன் பல சின்னஞ்சிறு சூரியன்களாகப் புலப்படுகின்றன.

ஏதுமறியாத ஒரு சின்னஞ்சிறு குழந்தை இந்தப் பிரதிபலிப்புகளை பல சின்னஞ்சிறு சூரியன்களாகவே நினைத்துக் கொள்கிறது. ஆனால் வயதான ஒருவர் அந்த பிரதிபலிப்புகள் பொய்யானவை என்பதையும் சூரிய ஒளி இல்லாவிடில் அது ஒரு கணநேரம்கூட

நிலைத்திருக்காது என்பதையும் அறிவார். சூரியன் ஒன்றுதான் உண்மையாது.

இங்கே சூரியனை உயிருணர்வின் சாரத்திற்கு ஒப்பிடலாம். கணக்கற்ற பிரதிபலிப்புக்களை அகிலத்தில் தனித்தனியே வாழும் தனித்தனியான உயிர்களுக்கு ஒப்பிடலாம்.

சூரியனின் ஒவ்வொரு கதிரும் ஒரு சின்னஞ்சிறு சூரிய பிம்பத்தைப் படைக்கிறது. இந்த பிம்பத்தில் உயிர், மனம், புத்தி, அகங்காரம் சித்தம் (மனக் கோப்பு) ஆகியவைகள் அடங்கியுள்ளன. இந்த நிலையில் மனமும் அகங்காரமும் புலன்களின் மூலமாக வெளி வியாபகம் செய்யத் தொடங்கியதும் தன்னுடைய ஆன்மா அல்லது உயிரின் பேருண்மை இயல்பை அறவே மறந்து விடுகின்றன. ஒவ்வொரு சூரிய உருவமும் தன்னை மற்ற உருவங்களிலிருந்து மாறுபட்ட தனித் தன்மையுடையது என்றே நினைத்துக் கொள்கிறது. இந்த தான் என்ற தனித் தன்மை நினைப்பினாலேயே சுயநலம், வெறுப்பு. பொறாமை, பேராசை, காமம், கோபம் போன்ற எல்லாவகைக் கெடுதிகளும் வந்தடைகின்றன. மனத்தின் இது போன்ற கெட்ட சுபாவங்களினால் அதற்கிருந்த தூய்மை நிலை பாழாகி விடுகிறது. அதன் சக்திகளும் சிதறுண்டு போகின்றன. அதனிடம் சஞ்சல புத்தியும், முட்டாள் தனமும் உண்டாகி விடுகின்றன. துன்பத்துக்கும் தவறான-போக்குகளுக்கும் இதுவே காரணமாகிறது. ஆதலின்

இந்த அகிலமே ஒருவனுடைய மனத்துக்குள்தான் அடங்கி இருக்கிறது.

சாதனையின் மூலம் (தூய, எளிய, தெய்வீக வாழ்வை மந்திர ஜபத்தின் மூலம் மேற்கொள்ளும் முறை) மனத்தைத் தூய்மையாக்கி ஒருவர் நிர்விகல்ப சமாதி நிலையை எய்திய பிறகு தானென்ற தனித்தன்மையை அவர் இழந்து விடுகிறார். அவ்வாறான ஆன்மாதான் புறப்பட்டு வந்த மூலத்தையே அடைகிறது.

சூரியனின் ஒளிக்கதிர் அதன் பிம்பத்திலிருந்து பின்னோக்கிச் சென்று சூரியனை அடைவது போன்றதுதான் நிர்விகல்ப சமாதி நிலை. இந்த ஒளிக்கதிர் சூரியனை அடைந்ததும் அதன் பிம்பம் மறைந்து போகிறது. அதனுடைய தான் என்ற தனித்தன்மையை இழந்து விடுகிறது. அகிலத்தின் பல்வேறு பெயர்களும் உருவங்களும் மறைந்து போகின்றன. அதன்பிறகு எஞ்சி நிற்பது உயிர்ச் சார மகாசமுத்திரம் மட்டுமே.

இந்த அனுபவத்தை எடுத்துக் கொண்டு, இந்தக் கருத்தை மனத்திலிருத்தி ஆராய்ந்து பார்த் தால் பல்வேறு பெயர்களையும், உருவங்களையும் உடையஇந்த அகிலமும் உண்மையான தோற் றத்தை உடையது அல்ல! அது வெறும் தோற்றமே அன்றி உயிர்ச்சார மகாசமுத்திரம் என்பது மட்டுமே

உண்மையானது ஆகிறது. இரண்டாவது அற்ற அது ஒன்றே ஒன்றுதான்.

# 5. மனம்

தனிப்பட்ட உயிருணர்வைப் பின்னணியாகக் கொண்டு சூக்கும சக்தியாக இயங்குவதே மனம். ஆதலின் அதன் செய்கை அதற்குத் தெரியும். மனத்திற்கும் உயிர்ப்பற்ற சக்திக்கும் உள்ள வித்தியாசம் இதுவேயாகும். ஆன்மா என்கிற உயிராற்றலுக்கு அறிவுக் கருவியாக இருப்பதே மனம்.

ஆன்மா, மனம், மூளை இந்த மூன்றுமே வெவ்வேறானவை. அறியாமையினால் சிலர் கூறுவது போல அவை ஒன்றையே குறிப்பது அல்ல.

சிக்கலான இயந்திர நுட்பங்களை உடைய ஒரு உறுப்பாக இருப்பது மூளை. விழித்த நிலையில் மூளை மையத்தில் இயங்குவது மனம். மனமானது தனக்கான உயிரையும் ஒளியையும் ஆன்மா என்னும் தனிப்பட்ட உயிருணர்விலிருந்தே பெறுகிறது.

உயிருணர்வு இல்லாமற் போனால் மனம் ஒரு கணம் கூட உயிரோடு இருக்காது. கனவு நிலையில் மனமானது மூளையின் அடிப்பாகத்தில் வேலை

செய்கிறது. ஆழ்ந்த உறக்க நிலையில் அது ஆன்மாவில் ஒன்றி இருக்கிறது.

மனம் பல்வேறு வேலைகளை உடையது. அது ஒரு கருத்தை வாங்கும் போதோ அல்லது ஒதுக்கும் போதோ அதை மனம் என்று சொல்கிறோம். அது ஒரு கருத்தையோ அல்லது கருத்தைப் பெற்ற பொருளையோ அல்லது நிகழ்ச்சியையோ பாகு படுத்திப் பார்த்து முடிவெடுத்துத் தெரிந்து கொள்ளும்போது அதை புத்தி என்கிறோம். அது தன் உடலோடு தன்னையும் சேர்த்து தான் என நினைக்கும்போது அதை அகங்காரம் என்கிறோம். அது புலன்களை இயங்கச் செய்யும்போது அதை உள்ளுணர்வின் ஆற்றல் என்கிறோம். அது எல்லாக் கடந்த கால சம்பவங்கள், நிகழ்ச்சிகள் போன்ற வற்றைப் பத்திரப்படுத்தி வைத்திருக்கும்போது அதைச் சித்தம் (மனக்கோப்பு) என்கிறோம்.

மனம் நிறமற்றது. தனக்கென ஒரு வடிவமும் இல்லாதது. ஆனால் அது நினைக்கும் பொருளின் நிறத்தையும் வடிவத்தையும் எடுத்துக் கொள்கிறது.

ஒரு பொருளைக் கண்ணாடியைப் போல் பள பளக்கும் தளத்துக்கு அருகிலே வைத்தால் அந்தக் கண்ணாடி போன்ற தளம் வைத்த பொருளினுடைய உருவத்தையும் நிறத்தையுமே பிரதிபலிக்கும். அது போலவே மனம் எண்ணிய பொருளின் உருவத்தை யும் நிறத்தையும் மூளை மையத்தில் பிரதிபலிக் கிறது.

பெயரும் அதன் சூக்கும வடிவமும் ஒன்றுக்கொன்று இணைந்து இருப்பவை. அந்த வடிவத்தைத் தொடர்ந்து அதன் நிறமும் அமைகிறது.

பெயர் அல்லது எண்ணிய பொருளின் வடிவத்தையும் நிறத்தையும் பிரதிபலிக்கா விட்டால் அதன் விவரமோ அதைப் பற்றிய தெளிவோ விளங்குவதில்லை. புலன்கள் அவைகளுக்கான பொருள்களின் தொடர்பைப் பெற்று எண்ணங்களை விளைவிக்கும் போது மனம் அந்தப் புலன் பொருளின் வடிவத்தையும் நிறத்தையும் சூக்கும உருவில் மூளை மையத்தில் உருவாக்குகிறது.

ஒருவர் மனத்தால் ஒரு திட்டத்தை வகுக்கும் போதோ அல்லது ஏதேனும் ஒன்றைக் கற்பனை செய்யும் போதோ அந்தக் கற்பனையின் இயல்புக்கு ஏற்பத் தனக்கே உரித்தான மனோ வடிவத்தையும் நிறத்தையும் பிரதிபலிக்கிறது. இந்த இரகசியத்தின் அடிப்படையில் ஒருவன் தன் மனத்தை மிகவும் சீரிய கண்ணியமான உயர்வைக் கொடுக்கும் பொருள்களைப் பற்றியே இடைவிடாது எண்ணும் படிச் செய்தானானால் தனக்கே தான் செய்து கொள்ளும்உயர்ந்த நன்மையாக அது அமைகிறது.

மாறாக ஒருவன் கீழ்த்தரமான தாழ்ந்த ஆபாச விஷயங்களில் உழன்று கொண்டிருந்தால் அவன் கீழ் மட்டத்திற்கு இறங்கி நீசத்தனமும் ஆபாசமும் நிறைந்த மடையனாகிறான்.

எனவே தியானமும் மந்திர ஜெபமும் மிகவும் அத்தியாவசியமாகிறது. அவைகள் மனிதனை மேலுக்கு உயர்த்தி இழந்த சாம்ராஜ்யத்தை மீண்டும் பெறச் செய்கிறது.

மந்திர ஜபம் என்றால் கடவுளை சதா நினைத்த வண்ணம் அவருடைய நாமத்தை இடைவிடாது உச்சரிப்பதேயாகும். தியானம் என்றால் கடவுளுடைய ஆற்றலிலும் பெருமையிலும் சதா சர்வ காலமும் திளைத்தபடி இருப்பதேயாகும். இதே போல ஒருவர் தன் வாழ்வில் பின்பற்றி நடந்தால் சந்தேகமின்றி அவர் உன்னத நிலைக்கு உயர்த்தப் படுவார்.

அதன் காரணமாகவே கடவுளை அறிந்தவன் கடவுளாகவே ஆகிறான் என்று சொல்லப்படுகிறது.

இறையுணர்வைப் பெற்ற மனிதனுடைய மனம் எப்போதும் இறையுணர்விலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறது. மனத்தின் ஒரு சிறு பகுதி மட்டுமே உடலையும், புலன்களையும் இயக்குகிறது. இதை வேறு விதமாகக் கூறுவோமாயின் அவனுடைய வாழ்வின் பெரும் பகுதி கடவுள் நினைவிலேயே கழிகிறது. மிகவும் சிறிதளவிலான நேரமே உடல், புலன்களைப் பற்றிய நினைவுடன் கழிகிறது.

இந்தக் கருத்தில் இதை நோக்கினால் உன்னுடைய நல்ல காலம் அல்லது கெட்ட காலத்தை நிர்ணயித்துக் கொள்வது நீயேதான்

என்பது தெளிவாகிறது. உன் எண்ணத்தைப் போலவே நீ வாழ்கிறாய்.

உனது பூர்வ நல்லதும் தீயதுமான ஆசைகள், எண்ணங்கள், செய்கைகளின் விளைவே உனக்குத் தற்போது நிகழும் வாழ்வும் தாழ்வுமாகும்.

உனது தற்போதைய நல்ல காலமும், கெட்ட காலமும் பூர்வத்தில் நீ செய்த நல்லதும், தீயது மான செய்கைகளின் விளைவினால் உனது எதிர் கால வாழ்வும், தாழ்வும் முழுக்க முழுக்க உன் கையில்தானிருக்கிறது.

இப்போதாயினும் தூய, தெய்வீக, கண்ணிய மான வாழ்வைக் கடைப்பிடித்து உன் மனத்தையும் கட்டி ஆள்வாயாக. நீ இவைகளைப் பின்பற்றா விடில் உன் வாழ்வில் அமைதியும், ஆனந்தமும் கிடைக்கும் என்ற நம்பிக்கையைக் கைவிடவே நேரிடும்.

மனம் நான்கு முக்கிய ஆற்றல்களைக் கொண்டது. அவைகள் உறுதி கொள்ளுதல், உணர்ச்சி வயப்படுதல், சிந்தனை செய்தல், ஒன்று திரட்டுதல் ஆகியவைகளேயாகும்

மற்றெல்லா ஆற்றல்களும் இந்தப் பிரதான பிரிவுகளின் கீழ் வருபவையேயாகும். எல்லா ஆற்றல்களுமே மனத்துக்கு உட்பட்டதேயானாலும் ஒவ்வொரு மனித உயிரிலும் எல்லாமும் சரி சமமாக வளர்ச்சியுற்றிருப்பது கிடையாது. பெரும்பாலான

உயிர்களில் ஏதாவதொரு ஆற்றலே மற்ற மூன்றைக் காட்டிலும் அதிக அளவில் வளர்ச்சி பெற்றிருக்கிறது.

மனத்தில் நிலவும் ஆற்றல்களின் இது போன்ற தன்மையினால் மேல் நிலையின் முடிவைச் சேர்ந்து அடைவதற்கு நமக்கு நால்வகை முக்கிய வழிகள் இருக்கின்றன. அவைகள்:

தொழில் செய்தல், பக்தி செய்தல், தத்துவம் அறிதல், மனத்தைக் கட்டுப்படுத்துதல் ஆகும் உலகிலுள்ள பல்வேறு மதங்களுமே இந்த நால் வகைத் தலைப்புகளில் ஏதாவதொன்றின் கீழ்வரும்.

சில மதங்கள் தொழில் செய்தலுக்கு முக்கியத்துவமளிக்கின்றன. சில பக்தி செய்த லுக்கும், வேறுசில தத்துவம் அறிதலுக்கும், மற்றும் சில மனக் கட்டுப்பாட்டுப் பயிற்சிக்கும் முதன்மை தருகின்றன. ஆனால் அகண்டைக மதம் மட்டும் நான்கு பாதைகளுக்குமே முக்கியத்துவமளிக்கிறது. ஒரு சாதகனை அவனுடைய விருப்பம், மனப் போக்கு, ஆற்றல், ஆன்மீக வளர்ச்சி ஆகியவை களுக்கு ஏற்ற வகையில் இட்டுச் செல்கிறது.

ஒன்றைத் திருப்பித் திருப்பிச் சொல்வதே மனத்தின் குணமாக இருக்கிறது. ஒரு ஏரியின் சலனமற்ற நீர்ப்பரப்பில் நீ ஒரு கல்லை விட்டெறிந் தால் அந்த நீர்ப்பரப்பைத் தாக்கும் கல் அந்தத் தடாகத்தில் தொடர்ந்து எழும் சின்னஞ்சிறு அலை களையும், சலனத்தையும் உண்டாக்கும். அதே

போல் ஒரு எண்ணம் சக்தி வாய்ந்ததும் சக்தி குறைந்ததுமான எண்ணற்ற எண்ணங்களை உண் டாக்கும்.

தூய்மையும் நல்ல கட்டுப்பாடும் உடைய மனம் ஆற்றல் மிகுந்து காணப்படுகிறது. அது ஒரு நல்ல நண்பனைப் போல் செயலாற்றுகிறது. மாறாக தூய்மையற்ற மனம் ஒருவனுக்குத் துரோக மிழைத்து விரோதியைப் போல் நடந்து கொள் கிறது.

தூய்மையோடு கூடிய நல்ல கட்டுப்பாடுடைய மனம் இருப்பின் அதுவே உனக்கு சொர்க்கமாகிறது. தூய்மையற்ற மனத்தால் நரக வேதனைக்கு ஆளா கிறாய்.

உண்மையிலேயே நரகம், சொர்க்கம் என்பத தெல்லாம் ஒருவர் மனத்தைப் பொறுத்ததேயாகும்.

பாப ஆசைகள், எண்ணங்கள், செய்கைகளால் மனம் அழுக்கடைகிறது. மனத்தில் படிந்துள்ள அழுக்கை அகற்றுவதற்கான சுலப வழி மந்திர ஜபமும் தியானமுமேயாகும்!

# 6. நீதி சாத்திரமும் அதன் அத்தியாவசியமும்

## கர்மம், அதன் விளைவுகள்

ஆசைகள், எண்ணங்கள் போன்றவற்றின் உருவில் நீ விதைத்ததை யெல்லாம் அதற்குரிய பருவம் வந்ததும் அறுவடை செய்தேயாக வேண்டும. இதிலிருந்து தப்ப முடியாது.

இரகசியமாக நல்ல அல்லது தீய பொருளுக்கு ஆசைப்படலாம். இரகசியமாக நீ கொடிய செய்கை யையோ அல்லது கண்ணியமிக்க ஒன்றையோ செய்திருக்கலாம். இந்த இரண்டிற்குமான விளைவு களைத் தவிர்க்கவே முடியாது.

ஏனெனில் நீ எதை விரும்பி ஆசைப்படு கிறாயோ, நீ எதை எண்ணுகிறாயோ, நீ எதைச் செய்கிறாயோ அவைகளைப் பற்றிய குறிப்புகளை உனது சித்தம் (மனக்கோப்பு) பதிந்து வைத்துக் கொள்கிறது. போகப் போக இந்தப் பதிவுகள் (விதைகள்) செயலுக்கு வருகின்றன.

ஆகவே தூய, தெய்வீக, எளிய வாழ்வை மேற் கொள்வதன் மூலம் நீ பல்வேறு உயிர்களுக்கும்

உதவி செய்வதன்றி உனக்கே உதவிக் கொள்கிறாய்.

ஆனால் நெறி தவறிய வழியிலும், மோசடியிலும் வெட்கங்கெட்ட தன்மையிலும் வாழ்வாயானால் பலருக்கும் ஊறு விளைவிப்பது அல்லாமல் உன் தரத்தையும் பாரம்பரியத்தையும் சீரழித்துக் கொள்கிறாய். அதனாலேயே பலர் மூளைக் கோளாறுடன் பிறப்பதையும், உடல் ஊனத்துடன் பிறப்பதையும், வேதனை மிகுந்து வாழ்வதையும் காண்கிறோம். மற்றும் சிலர் நல்ல நிலைமையில், நல்ல குடும்பங்களில், அனுசரணையான சூழ்நிலைகளுடன் பிறப்பதையும் பார்க்கிறோம்.

முற்பிறவியில் கெடுதிகள் செய்தவர்கள் இந்தப் பிறவியில் அதை அனுபவித்தேயாக வேண்டும். தூய்மையும், தெய்வீகமும் நிறைந்த வாழ்வை மேற்கொண்டவர்கள் வளம் மிக்க குடும்பத்தில் நல்ல பிறவியை எடுக்கிறார்கள்.

'ஒரு முறைப் பிறவித் தத்துவத்தை' வைத்துக் கொண்டு இந்த உலகில் பிறந்து விட்டதற்காக இந்த உலகில் இருக்கக்கூடிய மனித குல ஏற்றத் தாழ்வுகளை ஆதரித்துப் பேச முடியாது. நாம் இந்த 'ஒரு முறைப் பிறவித் தத்துவத்தை' ஒப்புக் கொள்வதானால் கடவுளே எல்லா நன்மைகளுக்கும் பொறுப்பாளியாகி விடுகிறார்.

சிலரிடம் அன்பையும் பரிவையும் காட்டும் கடவுள் வேறு சிலரிடம் குரூரமும், ஈவு இரக்கமின்றி

யும் இருக்கிறார் என்று சொன்னால் அது பொருளற்றது. அது போன்ற ஒருவரைக் கடவுள் என்று சொல்லாமல் பூதம் என்றுதான் கூற வேண்டும்.

உண்மையானது என்னவெனில் வாழ்க்கையில் வரும் நம்முடைய ஏற்றத் தாழ்வுகளுக்கு நாமேதான் காரணம். நாம் விதைத்ததையே நாம் அறுவடை செய்கிறோம். நம்முடைய விதியை நிர்ணயிப்பது நாமேதான். உயிர்களின் நல்ல காலத்துக்கும், கெட்ட காலத்துக்கும் பொறுப்பாளி கடவுள் அல்லவே அல்ல!

# 7. பிரம்மச்சரியம் அல்லது கற்பு நெறி

விந்து சக்தியே உடலின் மாபெரும் சக்தியாக விளங்குகிறது. மனதுக்கும் மகாசக்தியைக் கொடுப்பதும் அதுவே.

விந்து சக்தி, மனம், உள்ளுணர்வின் ஆற்றல், புத்தி, குண்டலினி சக்தி (உடலின் மைய சக்தி) ஆகியவை ஒன்றோடொன்று தொடர்புடையவை.

மனதைக் கட்டுப்படுத்த விரும்பும் ஒருவர் விந்துச் சக்தியையும் கட்டியாள வேண்டும்.

முழுமையான பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்தாலன்றி ஒருவர் நிர்விகல்ப சமாதி நிலையை

யும் அதன் மூலம் மேலான ஞானத்தையும் (பிரம்ம ஞானம்) அடையவே முடியாது.

குண்டலினி சக்தி கீழ் மையங்களில் தங்கி இருப்பதின் காரணத்தினால் ஆண்கள் - பெண்கள் இருபாலாரிடத்தும் உள்ள பலதரப்பட்ட காமக் கோளங்களிலிருந்து விந்துக் கசிவுகளை உண்டாக்கு கிறது. மீண்டும் அந்தக் குண்டலினியின் சக்தி யானது விந்துவுடன் சேர்ந்து வெளியேறியும் விடுகிறது.

நாடி ஓட்டங்களுக்கு மூல காரணமாக இருப்பது குண்டலினி சக்தி. மருத்துவ விஞ்ஞானம் நாடி ஓட்டங்களின் துடிப்பையும் முக்கியத்துவத்தையும் இயக்கத்தையும் கண்டுபிடித்து விட்டது. ஆனால் அது இந்த ஓட்டங்களுக்கான மின் இயக்கியை (டைனமோ) கண்டு பிடிக்கவில்லை. அதற்குப் பதிலாக மூளைக்கு அடியில் இருக்கும் முதுகுத் தண்டையும் மூளை மையத்தையுமே அவை களுக்கான மின் இயக்கி (டைனமோ) என்று கூறுகிறது. இது சுத்த அபத்தம்.

உடலுறவு உடலுக்கும் மனதுக்கும் மாசு விளைவிப்பதாகும். விந்துச் சக்தி இரண்டு திக்குக ளில் செல்லக் கூடியது. அதாவது கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் செல்வதேயாகும்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலும் ஆணுக்கும் ஆணுக்கும் இடையிலும் பெண்ணுக்கும்

பெண்ணுக்கும் இடையிலும் மனித இனத்தவர்க்கும் அவர்களால் வளர்க்கப்படும் ஆசை மிருகங்களுக்கும் இடையிலும் சுயமாகச் செய்து கொள்ளும் மைதுனத்தினாலும் ஏற்படும் சிற்றின்ப அனுபவங்களின் போது அது கீழ் நோக்கிய பாதையில் இறங்கி விடுகிறது.

இதுபோன்ற சிற்றின்பக் களியாட்டங்கள் கண்காணிக்கப்பட்டு, கட்டிக் காப்பாற்றப்பட்டால் அது மேல் நோக்கிய திசையில் ஏறுகிறது. கட்டுப் படுத்துதல் என்பதற்கு ஒருபொருள். அழுத்தி வைத்தல் என்பதற்கு வேறொரு பொருள். பெரும்பாலோர் இந்த இரண்டிற்குமுள்ள மாறுபாடுகளைப் புரிந்து கொள்வதில்லை.

ஒருவர் இந்தச் சக்தியை அடிக்கடி பகுத்துப் பார்த்து உறுதி மேற்கொண்டு கட்டுப்படுத்த வேண்டும். முதலாவதாக ஒருவர் செய்கை அல்லது செயலில் பிரம்மச்சரியத்தை (கற்பு நெறியை) கடைப் பிடிக்க வேண்டும்.

அதன் பிறகு சொல்லிலும், அதற்குப் பின்னர் எண்ணத்திலும் அதைப் பழகிக் கொள்ள வேண்டும்.

குண்டலினி சக்தி அடி மையத்தில் தங்கி யிருக்கும்போது ஒரு மனிதனுடைய சுபாவத்தில் மூன்று விஷயங்கள் ஆதிக்கம் பெற்றுள்ளன.

அவைகள் உணவு, தூக்கம், காமம் ஆகும். அந்த நிலையிலுள்ள மனிதன் இந்த மூன்று

விஷயங்களையும் திருப்தி செய்வதில் பெருத்த ஆனந்தத்தை அடைகிறான். சாப்பிடுவதிலும் தூங்குவதிலும் சிற்றின்பப் போகத்திலும் அவன் மிகுந்த ஈடுபாடுடையவனாக இருக்கிறான். உலகிலுள்ள பெரும்பாலான மக்கள் இதனாலேயே இந்த மூன்று விஷயங்களிலும் மூழ்கி இருக்கின்றனர்.

விந்துச் சக்தியானது திரவப்பொருள் வடிவைப் பெற்ற பிறகு அதைக் கட்டுப்படுத்த முடியாது. யோகியானவர் திரவ ரூபத்தை அடைவதற்கு முன்னரே ஓஜஸ் சக்தி எனும் மாபெரும் மனோ சக்தியாக மாற்றி விடுகிறார்.

குண்டலினி சக்தி இதய மையத்திற்கு மேல் போன பிறகே ஒருவர் இதைச் செய்ய முடியும். குண்டலினி சக்தி இதய மையத்தைக் கடந்த பிறகு எந்தவிதமான சிற்றின்பச் செய்கைகளையும் ஒருவரால் செய்யவே இயலாது. அதன் பிறகு இந்த விந்துச் சக்தியானது தானாகவே ஓஜஸ் சக்தியாக (மாபெரும் மனோசக்தி) மாற்றம் அடைந்து விடுகிறது.

குண்டலினி சக்தி இதய மையத்தைக் கடந்து செல்லும் வரை மேலெழுவதும் கீழிறங்குவதுமாக இருக்கும்.

பிரம்மச்சரியத்தை அனுசரிப்பவருக்கு எப்போதாவது இன்பக் கனவுகள் வரும். அவைகள்

இயற்கையானவை. பொறுமையையும் விடா முயற்சியையும் மேற்கொண்டால் ஒருவர் இதை வென்று விடலாம்.

ஒரு ஆணோ அல்லது பெண்ணோ விந்துக் கசிவின்போது சிற்றின்ப ஆனந்தத்தைப் பெறுகிறார். விந்துக் கசிவுடன் கூடவே உடல் பூராவிலிருந்தும் மூளை மையத்திலிருந்தும் நாடிச் சக்திகள் பிழிந்து விடப்படுகிறது.

அப்போது ஓஜஸ் சக்தியும் பெருமளவில் வீணடிக்கப்படுகிறது. அளவுக்கு மீறிப் போகும் போது மண்டை இடி, நரம்புத் தளர்ச்சி, தலையும் கைகளும் நடுங்குதல், அஜீரணம் போன்ற வியாதிகளுக்கும் இளமை அழிவுக்கும் இறப்புக்கும் பலியாகிறார்.

நிர்விகல்ப சமாதி நிலையையோ அல்லது உயர்ந்த ஞானத்தையோ அல்லது ஆன்ம ஞானத்தையோ அடைவது பிரம்மச்சரியத்தின் (கற்பு நெறி) மூலமே ஒருவருக்கு சித்திக்கும்.

குண்டலினி சக்தி சகஸ்ராரத்தை அடையாத வரை ஒருவர் நிர்விகல்ப சமாதிநிலை எய்துவதென்பது இயலாதது.

முழுமையான பிரம்மச்சரியத்தை மேற்கொண்டாலொழிய குண்டலினி சக்தி சகஸ்ராரத்திற்குப் போய்ச் சேராது. ஆதலின் பிரம்மச்சரியம் நிர்விகல்ப சமாதிநிலையின் சித்தி, ஆன்ம ஞானம்

அல்லது இறையுணர்வு பெறும் நிலை ஆகிய எல்லாமே ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. பிரம்மச்சரியம் இன்றேல் ஆன்ம வளர்ச்சி இல்லை.

## 8. குரு ஒரு அவசியத் தேவை

ஆன்மீக வழிகாட்டியையே குரு என்கிறோம். எந்த ஆணோ அல்லது பெண்ணோ யார் வேண்டுமானாலும் இந்தப் பொறுப்புள்ள பதவியை நிர்வகிக்கலாம் என்பது முடியாத ஒன்று.

சாதாரணப் புத்தகம் மட்டும் படித்த தத்துவவாதியோ, ஆன்ம சித்திகளை எய்தாத சந்நியாசியோ இத்தகைய உன்னத பதவியையும், பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள முடியாது. இது உயிரோடு விளையாடும் ஒரு ஆபத்தான பதவி.

முறையான தகுதிகள் இன்றி ஒருவர் குருவின் பீடத்தை அமைத்துக் கொள்வாரானால் அது ஒரு பிறவிக் குருடன் மற்ற குருடர்களுக்கு வழி காட்ட முனைவது போன்றதாகும். இரு சாராருமே பள்ளத்தில் விழுந்து நாசமாவார்கள்.

நிர்விகல்ப சமாதி நிலையை அடைந்த ஒரு ஆணோ அல்லது பெண்ணோ அல்லது சவிகல்ப சமாதி நிலையை எய்தியவரோ மட்டுந்தான் (அருவம், உருவமாகிய இருவேறு தியானப் பயிற்சி

களிலும் இறையுணர்வைப் பெற்றவர்கள்) குருவாக இருக்க முடியும். அவர்கள் மட்டுமே சீடர்களை ஏற்று ஆன்மீகப் பாதையில் பாதுகாப்புடன் அழைத்துச் செல்ல முடியும்.

ஆனால் இந்த நாட்களில் பெரும்பாலோர் அதற்கான தகுதியின்றியே குருவின் பொறுப்பை ஏற்றுக் கொள்கின்றனர். இது ஒரு தொழிலாகவே ஆகி விட்டது.

சீடனிடமிருந்து ஒரு இலாபத்தையும் எதிர் பார்க்காதவனே உண்மையான குரு. வேதனைப் படும் மனித குலத்தின் மீது கொண்ட பரிவினால் சீடர்களுக்கு ஆன்ம விடுதலைக்கான வழியை அல்லது இறையுணர்வு பெறுவதற்கான பாதையைக் காட்ட வேண்டுமென்ற பளுவான பொறுப்பை ஏற்றுக் கொள்கிறார்.

இந்த ரீதியில் பார்ப்போமாயின் சீடனே குரு விற்குப் பெரிய கடனைச் செலுத்த வேண்டியவனா கிறான். ஆனால் குரு சீடனுக்குத் திருப்பித் தர வேண்டியது ஒன்றுமே கிடையாது. இதைக் கருத்தில் கொண்டு பார்த்தோமானால் ஆன்மீக உலகில் ஜனநாயகத்துக்கு வேலை கிடையாது. மீறி ஜனநாயகத்தைப் புகுத்துவோமானால் அது ஒரு தோல்வியாகவே முடியும். ஏனெனில் ஆன்மீகப் பாதை மிகவும் சூக்குமமானது. மேலும் சிக்கல்

நிறைந்தது. குருவின் அனுபவத்தையே முழுக்க முழுக்கச் சார்ந்திருக்கக் கூடியது.

ஒரு சீடன் தன் மனம் போன போக்கில் சாதனையை மேற்கொண்டால் அவனால் எந்தவித முன்னேற்றத்தையும் பெற முடியாது. பெருத்த வேதனையையே சந்திக்க நேரிடும். குருவிடம் ஒரு சீடன் ஆழ்ந்த அன்பும் நம்பிக்கையும் கொண்டிருக்க வேண்டும். அவர் உபதேசங்களைக் கண்மூடித்தன மாகப் பின்பற்ற வேண்டும்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் ரிஷிகேசத்திலிருந்த என்னிடம் ஆன்மீகப் பயிற்சி பெற ஒரு இளம் பட்டதாரி தன்னை அனுமதிக்கும்படிக் கேட்டுக் கொண்டான், நான் அவனை ஆமோதித்தேன். அவன் ரிஷிகேசுக்கு வர ஆயிரம் மைல் தூரத்திலுள்ள கல்கத்தாவிலிருந்து புறப்பட்டான். பயணத்தின் இடையில் அவன் மனத்தை மாற்றிக் கொண்டான். ரிஷிகேசத்திற்கு வருவதற்குப் பதிலாக அவன் காசியில் (மற்றொரு நகரம்) தங்கிக் கொண்டான்.

தனக்குத் தானே குருவின் ஸ்தானத்தை வகித்துக் கொண்டு தவறான வழியில் தீவிர சாதனையையும் செய்ய முற்பட்டான். விளைவு, ஓரிரண்டு வாரங்களில் மரணப் படுக்கையாகப் படுத்து விட்டான். அவனுடைய உறவினர் கல்கத்தா நகருக்கே, அங்குள்ள ஒரு மருத்துவமனைக்குத் திருப்பி அழைத்துச் சென்றனர்.

ஆனால் மருத்துவர்களால் அவன் நோயைத் தீர்க்க முடியவில்லை. இந்தத் தோல்விக்குப் பிறகு அந்த இளைஞனுக்கு எனக்குக் கடிதம் எழுதுவதற்கான துணிவும் வரவில்லை. அவன் வெட்கப்பட்டிருக்கவும் கூடும். அவனுடைய நண்பராக இருந்த ஒருவர் எனது சீடர், தன் நண்பனுக்கு உதவும்படி மன்றாடி எனக்குக் கடிதம் எழுதினார்.

நான் சில யோசனைகளைக் கூறி உணவிலும் மாறுதலைச் சொல்லிப் பதிலெழுதினேன். அது அவனுக்கு நிவாரணமளித்தது.

டென்மார்க்கிலும் வேறொரு நிகழ்ச்சி நடந்தது. ஒரு இளம் வாலிபன் குரு இல்லாமலேயே புத்தகங்களைப் பின்பற்றினான். எந்தக் குருவிடமும் தான் தலை வணங்கக் கூடாது என்று நினைத்தான். குரு இல்லாமலேயே தன்னுடைய சாதனையில் முன்னேற முடியும் என்றெண்ணினான். இந்த வாலிபன் உயர்நிலைப் பிராணாயாமங்களை மேற்கொண்டு அதிதீவிர சாதனையைச் செய்தான்.

விளைவு மூளைக் கோளாறு.

காவல் துறையினர் அவனைப் பலாத்காரமாகத் தூக்கிச் சென்று ஒரு பைத்தியக்கார மருத்துவமனையில் சேர்க்க வேண்டியதாயிற்று.

அதன் பிறகு அவனுடைய அன்னையும் எனது சீடர்களில் சிலரும் அவனுக்கு உதவும்படி வேண்டி எழுதினார்கள். இவனுக்கும் நான் உதவ வேண்டிய

நிலை ஏற்பட்டது. இது போன்ற எத்தனையோ நிகழ்ச்சிகள் நடந்துள்ளன.

அகங்காரம் கொள்வதால் ஏற்படும் அபாயத்தை எடுத்துக் காட்டவே இந்த இரண்டு நிகழ்ச்சிகளை யும் இங்கே எழுதினேன்.

தவறான பாதையைக் காட்டும் ஒரு போலி குருவின் மூலம் ஒரு சீடனுக்கு விளையும் அபாயத்தை நிரூபித்துக் காட்ட வேறொரு நிகழ்ச் சியையும் இங்கே எடுத்துச் சொல்கிறேன்.

நம்முடைய சீடர்களை சித்து விளையாட்டு களைச் செய்வதற்கு நாம் அனுமதிப்பதே இல்லை.

சித்துகளை விளையாடுவது என்பது அவனு டைய சொந்த உயிரோடு விளையாடுவது போலா கும் ஆனால் மேலே கூறி இருக்கும் குரு, நோய்வாய் பட்டவர்களின் நோய்களைத் தீர்க்க, சீடனைத் தன் சித்துகளை உபயோகிக்கச் சொன்னார்.

அந்த சீடர் ஒரு மருத்துவர். தன்னிடம் வரும் நோயாளிகளின் நோய்களைத் தீர்க்க தாராளமாகத் தன் சித்துகளைப் பிரயோகித்தார். அவருக்கு பெயரும் புகழும் கிடைத்ததோடன்றிச் செல்வமும் குவிந்தது. ஆனால் இது நெடுநாள் நீடிக்கவில்லை. வெகு விரைவிலேயே அவர் கடுமையான எதிர் விளைவுகளைச் சந்திக்க வேண்டியதாயிற்று.

ஆனால் அதை அவரால் சமாளிக்க முடிய வில்லை. இந்த மருத்துவர் சொந்த மருத்துவ மனையையே நடத்திக் கொண்டிருந்தார். ஒருநாள் இது போன்ற எதிர்விளைவு மிகவும் உச்சகட்டத் திற்குப் போய்விட்டது. குண்டுகளை நிரப்பிய கைத் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு மருத்துவ மனைக்குச் சென்றார்.

அங்கிருந்த மூன்று நோயாளிகளைச் சுட்டுக் கொன்றார். கடைசிக் குண்டைத் தன் மார்பிலேயே செலுத்திக் கொண்டார். அவருடைய வாழ்க்கை இவ்வாறு முடிந்தது.

எல்லோருமே குருமார்களாக ஆக முடியாது என்பதன் காரணம் இதுவே. சரியான தகுதிகள் இன்றி ஒருவர் இதைச் செய்தால் அது பெரிய விபரீதத்தையே விளைவிக்கிறது.

உண்மையிலேயே ஒரு குருவிற்கு மிகுந்த பொறுப்புகள் உள்ளன. தன்னுடைய சொந்த ஆன்மீக முன்னேற்றத்தை விரும்பும் ஒவ்வொரு சீடனும் நன்றியுடையவனாக அகங்காரத்தை விட்டொழித்து குருவின் உபதேசங்களின்படி சிரமப் பட்டு உழைக்க வேண்டும்.

அகங்காரியாக இருப்பது குருவை எதிர்த்தே புரட்சி செய்வது என்று பொருள். இது ஒரு சீடனின் ஆன்மீகப் பேரழிவேயாகும். இது மிகவும் நிச்சய

மானது. கண்டிப்பானது. இது போன்ற எத்த னையோ நிகழ்ச்சிகள் பார்த்தாகி விட்டது.

மிகவும் மேலான சமாதி நிலையைப் பெற ஒவ்வொருவருக்கும் குரு இருக்க வேண்டும் என்பது அத்தியாவசியந்தானா?

இல்லை! இந்தச் சட்டத்திற்கும் சில விதிவிலக்குகள் இருக்கின்றன.

முற்பிறவிகளில் சிலர் கடுமையாக உழைத்து உயர்நிலை ஆன்மப் பரிணாம வளர்ச்சியை அடைந்து அது திடீர் இறப்பின் காரணமாக நின்று போயிருக்கும். அது போன்றோர் தெய்வீக ஈடுபாடு உடைய குடும்பத்தில் நற்பிறவி எடுத்து நல்ல சூழ்நிலைகளில் வளருகிறார்கள்.

இவர்கள் பிறவியிலேயே தங்களுக்கான தெய்வப் பணியையும் பாதையையும் புரிந்து கொண்டு முற்பிறவியில் முடியாமல் நின்று போன வற்றை முடிக்கும் பணியில் ஈடுபடுகின்றனர். இது போன்ற அருளாளருக்கு குரு தேவையில்லை.

எங்கோ ஒரு இடத்தில் சொற்ப எண்ணிக்கையிலேயே அவர்கள் தோன்றுகின்றனர்.

சாதாரணமானவர்களுக்கு குரு மிக அவசியத் தேவையாகிறது.

# 9. குண்டலினி சக்தி அல்லது உடலின் பிரதான சக்தி

ஒரு மின் இயக்கி சாதனம் மின்சாரத்தை உற்பத்தி செய்கிறது அவ்வாறு உற்பத்தியான மின்சாரத்தின் உதவியைக் கொண்டே அதே மின் இயக்கியை மிகவும் மெதுவாகவும் சிறிது வேகமாக வும் அதிக வேகமாகவும் வேலை செய்ய வைக் கலாம்.

நாடி ஓட்டங்களின் மின் இயக்கியாகவும் காரணமாகவும் இருப்பது குண்டலினி சக்தி. மின்சா ரத்திற்கும் நாடி ஓட்டங்களுக்கும் அதிக வித்தியாசம் கிடையாது.

வேறு வகையில் கூறுவோமாயின் சின்னஞ்சிறு அளவில் இயங்கும் மின்சாரமே நாடி ஓட்டங்கள். அதனாலேயே ஒருவனுக்கு மின்சார அதிர்ச்சி ஏற்பட்ட உடன் இறந்து போகிறான். வலுவுள்ள மின்சாரம் உடலுக்குள் நுழைந்ததும் அது மின் இயக்கியை அழித்து பூமிச்சாரத்தில் கலந்ததும் மனிதன் இறந்து போகிறான்,

இருபத்து நான்குமணி நேரமும் குண்டலினி சக்தி நாடி ஓட்டங்களை உற்பத்தி செய்து நாடிகள் (நரம்புகள்) வழியே உடல் பூராவுக்கும் சுற்றிவரச்

செய்தபடி இருக்கிறது. இருதயத்திலும் நுரை ஈரல் களிலும் இயங்கும் நாடி ஓட்டங்களின் அதிர்வுகளே அவைகளை வேலை செய்ய வைத்து அதனால் விளையும் துடிப்பு மூச்சுவிடச் செய்கிறது.

ஒரு சாதாரண மனிதனில் மூலாதாரச் சக்கரமே குண்டலினி சக்தியின் இருப்பிடமாக இருக்கிறது. சாதனையை (ஆன்மீகப் பயிற்சிகள்) மேற்கொள்வ தன் மூலம் இந்த மைய இயக்கம் மாறுகிறது. இந்தச் சக்தியின் இரகசியங்களைத் தெரிந்து கொள்ள முழுமையான கற்பு நெறி ஒழுக்கம் (பிரம்மச்சரியம்) மிகவும் இன்றியமையாதது. பிரம்மச்சரியம் இன்றேல் இந்தச் சக்தியின் அ, ஆ, இ, என்ற ஆரம்ப அரிச்சுவடியைக்கூடக் கனவிலும் காண முடியாது.

ஒருவர் கண்டிப்பான கற்பு நெறியைப் பின் பற்றி ஆன்மீகப் பயிற்சிகளை மேற்கொள்வாரா னால் குண்டலினி சக்தி மேல் மட்ட மையங்களுக்கு எழுந்து செல்கிறது.

குண்டலினி சக்தியானது முழுமையாகச் சுழுமுனை நாடியில் நுழைந்து சகஸ்ராரத்தை அடைந்ததும் ஒருவர் நிர்விகல்ப சமாதி நிலையை எய்துகிறார். நிர்விகல்ப சமாதி நிலையில் மூச்சு விடாமலேயே ஒருவரால் இருக்க முடிகிறது. அப்போது அவருடைய முயற்சி இல்லாமலேயே தானாகவே மூச்சு நின்று போகிறது. இது இயல் பான ஒரு நிலை. இது கீவல கும்பகம் என்று அழைக்கப்படுகிறது.

முன்னரே கூறியுள்ளது போல இருதயத்திலும் நுரை ஈரல்களிலும் இயங்கும் நாடி ஓட்டங்களின் அதிர்வுகளே அவைகளை இயங்கச் செய்து மூச்சு விடுவது துவங்குகிறது.

குண்டலினி சக்தி சுழுமுனை நாடியில் நுழைந்து மேலேறிய பிறகு மின் இயக்கி வேலை செய்வதை நிறுத்திக் கொள்கிறது. எல்லா நாடிகளும் வேலை நிறுத்தம் செய்கிறது. உடல் முழுவதிலும் நாடி ஓட்டங்களின் விநியோகம் இல்லாமற் போகிறது. இருதயமும் நுரையீரல்களும் நாடி ஓட்டங்களின் விநியோகத்தைப் பெறாததினால் மூச்சு விடும் இயக்கமும் தானாகவே நின்று போகிறது. இதுபோல்தான் கீவல கும்பகம் ஏற்படுகிறது.

மனத்திற்குக் காரணமாக இருப்பது குண்டலினி சக்தி. அதற்கீடாக மனமும் மேற்கூறியது போல மின் இயக்கி ரூபத்திலும் மின்சார உருவத்திலும் சாதாரண அல்லது மிகச் சாதாரண அல்லது அசாதாரண நிலைகளில் வேலை செய்ய வைக்கிறது.

ஒவ்வொரு எண்ணமும் சூக்குும சக்தி படைத்தது. எண்ணத்தின் சக்தி பலவாறு மாறக் கூடியது. எண்ணத்தின் அல்லது உத்வேகத்தின் சக்தியை மெலிதாக அல்லது சிறிது அதிகமாக அல்லது வேகமாக இருக்கும் எந்த நிலையிலும்

அதைப் பற்றிய முடிவை எடுப்பதே புத்தியாகும். புத்தியின் இந்த முடிவுக்கு ஏற்ப மனம் குண்டலினி சக்தியைத் தட்டி அதைச் சாதாரணமாகவும் மிகச் சாதாரணமாகவும் அசாதாரணமாகவும் இயக்கு கிறது. சக்தியை சாதாரண நிலையில் இயங்கச் செய்யும் நிலைக்கே உடல் நலம் என்று பொருள். அது மிகச் சாதாரணமாகவும் அசாதாரணமான முறையிலும் இயங்கும் நிலைக்கு 'வியாதி' என்று பொருள். அது மிகவும் சாதாரணமாக இயங்கும் போது உடலில் நாடி சக்தி குறைந்து அதனால் களைப்பு மேலிடுகிறது.

அது அசாதாரண நிலையில் இருக்கும்போது உடலில் நாடி ஓட்டங்கள் அதிகமாகி அதன் விளை வாகவும் வியாதி ஏற்படுகிறது.

வியாதி என்பதின் பொருள் நாடி சக்தி குறை வதும் அதிகமாவதும் ஆகும். இதற்கு மனக் கட்டுப்பாடு அத்தியாவசியமாகிறது.

மனம், உணர்ச்சி வயப்படுதல், எண்ணங்கள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்துவதன் மூலம் நல்ல உடல் நலத்தை அனுபவிக்க முடியும். எண்ணங் களையும் உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்த முடியாமல் போனால் அவரே தீர்க்க முடியாத வியாதிகளை விளைவித்துக் கொண்டு நரக வேத னையை அனுபவிக்கிறார்.

# 10. நிர்விகல்ப சமாதி

ஆன்மப் பரிணாம வளர்ச்சியில் நிர்விகல்ப சமாதி நிலை அல்லது நிர்விகல்ப சமாதிநிலையின் சித்தி என்பதே கடைசிக் கட்டமாகும். இந்த நிலையில் தத்துவம் முற்றுப் பெறுகிறது. இந்தச் சமாதி நிலையில் ஒருவர் தன்னுடைய உண்மையான இயற்கை நிலையைச் சென்று அடைகிறார். உயிர் உணர்வின் மகா சமுத்திரத்தைப் போய்ச் சேருகிறார். இது மனத்தை விட்டு நீங்கிய ஒரு அனுபவம்.

சாதாரணமாக அறிந்து கொள்ளுதல் என்றால் அதற்காக ஒரு ஆதாரப் பொருள் (மனதோடு கூடிய ஒரு உயிர்) இருக்கும். அறியப்படும் பொருளும் இருக்கும். முடிவில் அறிவதற்கான ஞானமும் இருக்கும். இந்த மூன்று விஷயங்களும் இல்லாவிட்டால் புரிந்து கொள்வது என்பதே இருக்காது.

இதுபோலன்றி நிர்விகல்ப சமாதி நிலையில் ஆதாரப் பொருள், புரிந்து கொள்ளக்கூடிய பொருள், தெரிந்து கொள்ளக்கூடிய ஞானம் ஆகிய எல்லாமே மறைந்து போகின்றன.

நிர்விகல்ப சமாதி நிலையில் மனம் தனி நபரின் உயிருணர்வு ஆகிய இந்த இரண்டும்

நுட்பமும் சூக்குமமும் பெற்று பார்த்துக் கொண் டிருக்கும் போதே உயிர் உணர்வின் மகா சமுத் திரத்தில் போய்க் கலந்து விடுகிறது. இந்தக் கலப்புக்குப் பிறகு ஒருமை நிலையை ஒருவர் பெறுகிறார். பேத நிலைகள் அடியோடு மறைந்து போகின்றன. ஒன்று என்னும் (சிந்தனை) கருத்துக் கூட அப்போது இருக்காது.

ஒன்று எனும் கருத்து இருக்குமானால் பலவற்றுக்கான கருத்தும் இருக்கும். அவைகள் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. அது வெண்மையானது என்று சொல்லும்போது அதன் பக்கத்தில் வெண்மை இல்லாத ஒன்று இருந்தே யாக வேண்டும்.

அது போலவே உயிருணர்வின் மகாசமுத்திரம் எனும் ஒரே ஒரு பொருள் இருந்து உன்னுடைய தனிமனிதத் தன்மையை இழந்து அதிலேயே இரண்டறக் கலந்து ஒன்றிவிட்ட பிறகு நான் எனும் கருத்தைக் கூடப் பெற முடியாது.

நிர்விகல்ப சமாதி நிலையை எய்திய பிறகு ஒரு மனிதன் உலக பந்த உணர்வின் நிலைக்குக் கீழ் இறங்கிய பின்னர் அவர் முழுக்க முழுக்க ஒரு மாறு பட்ட மனிதனாகவே இருக்கிறார். அவர் ஒரு ஞானியாகிறார். இந்த உலகைப் பற்றிய அவருடைய பார்வையின் கோணமே அடியோடு மாறிவிடுகிறது. அவருக்குள் ஒரு அகமும் மனமும் வேலை செய்கிறது.

ஆனால் அது சாதாரண அகமும் மனமும் போன்றதல்ல. அது தூய்மையான அகம், நிர்மல மான மனம் என்றே அழைக்கப்படுகிறது.

வேக வைக்காத உருளைக் கிழங்குகளின் குவிய லுக்கு மத்தியில் ஒரே ஒரு வேக வைத்த உருளைக் கிழங்கினுடைய நிலை போன்றது அது. பார்ப்ப தற்கும் வெளித் தோற்றத்திற்கும் வெந்த உருளைக் கிழங்கும் வேகாத உருளைக் கிழங்குகளின் தோற் றத்தை பெற்றிருக்கிறது. ஆனால் அதை பூமியில் நட்டால் முளைப்பதில்லை.

ஒரு நூல் கயிறு கொளுத்தப்பட்ட பிறகு அந்த எரிக்கப் பட்ட சாம்பல் கயிறின் தோற்றத்தையே காட்டுகிறது. ஆனால் அது ஒன்றைக் கட்டுவதற்குப் பயன்படாது.

எந்த ஒரு கர்மமும் (தொழிலும் அதன் விளைவும்) எத்தகைய பயன்களையும் அவனுக்குத் தராது என்பதே இதன் பொருள். அவரை ஜீவன் முக்தர் (நற்கதி பெற்றவர்) என்கிறோம். அவரு டைய மனம் மிகவும் உயர்ந்த நிலையில் இருந்து கொண்டு இயங்குகிறது. அவர் மனத்தின் பெரும் பகுதி கடவுள் அல்லது பிரம்மத்தில் வசிக்கிறது. ஒரு சிறு பகுதியே உடலையும் புலன்களையும் இயக்குகிறது.

அது ஒரு மாலுமியின் திசைகாட்டிக் கருவி யிலுள்ள ஊசி போன்றது. அந்தத் திசை காட்டும்

கருவியை நீ எப்படித் திருப்பினாலும் அந்த ஊசி மட்டும் எப்போதும் வடக்கும் தெற்குமாக நிற்கிறது.

அதே போல் ஒரு ஜீவன் முக்தன் எந்த வேலையைச் செய்தாலும் அவன் மனம் கடவுள் அல்லது பிரம்மத்தின் தொடர்பு பெற்றிருக்கிறது.

அவர் செய்யும் செய்கைகள் எந்தப் பலனையும் விளைவிப்பதில்லை. அதன் காரணமாகவே ஒரு ஜீவன் முக்தர் செய்யும் ஒவ்வொரு காரியமும் அவர் செய்யும் காரியமல்ல என்று சொல்லப்படுகிறது. இதுவே மறுக்க முடியாத உண்மை.

ஒரு கலைஞன் களி மண்ணிலிருந்து பலதரப்பட்ட பொம்மைகளையும் பானைகளையும் செய்து அவைகளை சூளையில் சுட்டு பல்வேறு நிறங்களையும் தீட்டுகிறான். சின்னஞ்சிறு குழந்தை அந்த நிறங்களையும் உருவங்களையும் உண்மை என்றே நம்பி அவைகளின் மீது பற்றுக் கொள்கிறது. ஒரே வகைக் களி மண்ணிலிருந்துதான் பல தரப்பட்ட பொருள்களும் செய்யப் பட்டன என்றே அதற்குத் தோன்றுவதில்லை. ஆனால் பல்வேறு பெயர்களையும் உருவங்களையும் உடைய அவைகள் களி மண்ணைத் தவிர்த்து வேறொன்றுமில்லை என்ற உண்மை கலைஞனுக்குத் தெரியும். அவன் மட்டும் மாறுபட்ட தன்மைகளிலும் ஒன்றையே காண்கிறான்.

அதேபோல் ஒரு ஜீவன் முக்தர் அகிலத்தின் பல்வேறு பெயர்களுக்கும் உருவங்களுக்கும் பின்னணியில் ஒரே பேருண்மையைத்தான் காண்கிறார். அவரும் பலவற்றில் ஒன்றையே காண்கிறார். இதைக் கொண்டு ஒரு ஜீவன்முக்தருடைய புலன்கள் இயங்கவில்லை என்று பொருளல்ல! அவைகள் இயங்குகின்றன.

புலப் பொருள்களோடு அந்தப் புலன்கள் தொடர்பு கொள்ளும்போது புலன்களைப் பற்றிய உண்மை அவருக்குத் தெரிந்தாலும் ஒரு சாதாரண மனிதனுக்கு இருப்பது போல எதிர்விளைவுகள் ஏற்படுவதில்லை.

இங்கே ஒரு உதாரணத்தைப் பார்ப்போம்.

ஒரு கண்ணாடிக்கெதிரில் ஒரு பொருளை வைத்தாயானால் அந்தப் பொருளின் உருவத்தையும் நிறத்தையும் அந்தக் கண்ணாடி பிரதிபலிக்கும். அந்தப் பொருளை அப்புறப்படுத்தி தூரத்தில் வைத்து விட்டால் கண்ணாடியில் அந்த பொருளைக் குறித்த அறிகுறிகளே தென்படாது.

ஜீவன்முக்தருடைய நிலையும் இது போன்றதே.

புலன் — பொருள்களுக்கிடையில் அவர் பற்றற்று வாழ்கிறார்.

குண்டலினி சக்தியின் நிலையான மையம் சகஸ்ராரம் (தலை உச்சி). ஆனால் அதன் மின் இயக்கி மையம் மூலாதாரச் சக்கரம்.

ஜீவ கோசத்தை உற்பத்தி செய்வதற்காக குண்டலினி சக்தி தூலவடிவம் பெற்று கீழ்நிலைச் சக்கரங்களுக்கு இறங்கி வருகிறது. மூலாதாரச் சக்கரத்தை அடைந்ததும் அது மின் இயக்கியின் வடிவம் பெற்று அங்கேயே தங்கி விடுகிறது. இந்தச் சக்கரமே நாடி ஓட்டங்களுக்கான மின் இயக்கி சாதனம். நாடி ஓட்டங்களின் காரணப் பொருளாக இருப்பதும் குண்டலினி சக்தியேயாகும். நிலையான மையத்திலிருந்து பிரிந்தது போன்ற குண்டலினி சக்தியின் இந்தத் தோற்றம் ஜீவகோசத்தில் (மனிதன்) பேத நிலைக்குக் காரணமாகிறது. இதுவே மனிதனுடைய அறியாமைக்கும் பந்தத்திற்கும் காரணமாகிறது.

ஒருவர் ஆன்ம விடுதலையைப் பெற விரும்பினால் குண்டலினி சக்தி அதன் நிலையான மையத்திற்குத் திரும்பிப் போய்ச் சேர வேண்டும். இந்தச் சக்தி அதன் நிலையான மையத்தை அடைந்தவுடன் நிர்விகல்ப சமாதிநிலை சித்திக்கிறது.

குண்டலினி சக்தி சகஸ்ராரத்திற்கு (நிலையான மையம்) மேலேறிச் சென்றவுடன் நிர்விகல்ப சமாதி நிலைக்குள் புகுவதும் ஆன்மாவை அறிந்த நிலை என்னும் இறை உணர்வு பெற்ற நிலையைப்

பெறுவதும் ஒன்றைப் பற்றி ஒன்று தொடர்ந்து நிகழ்கின்றன.

குண்டலினி சக்தியை முழுமையாக மேலுக்கு எழும்பச் செய்வதற்கு மூவகைத் தூய்மை நிலைகள் இருக்க வேண்டும். உடல் தூய்மை, நாடிகளில் தூய்மை (தூல சூக்கும நரம்புகள்) மனத் தூய்மை ஆகும்.

இந்த மூவகைத் தூய்மை நிலைகளின்றி குண்டலினி சக்தி மேலுக்குக் கிளம்பாது.

அதற்கான பக்குவம் வருவதற்கு முன்பே சில யோக முறைகளினாலும் அல்லது L. S. D. அல்லது அபினி போன்றவற்றை உட்கொள்வதாலும் அதை நிர்ப்பந்தித்து மேலுக்கு எழச் செய்தால், பகுதி அளவிலான சக்தியே மேலுக்குச் செல்லும். இது மிகவும் ஆபத்தான நிலை. முற்பிறவிகளில் செய்த நன்மைகளின் காரணத்தினால் ஒரு சில அதிர்ஷ்டசாலிகளுக்கு இந்தக் குண்டலினி சக்தியின் பகுதி உயர்வால் கலை கவிதை போன்றவற்றில் ஆற்றல் பெருக்கம் கிடைக்கக் கூடும். ஆனால் நிர்விகல்ப சமாதி நிலையையோ அல்லது மோட்சத்தையோ எய்தவே இயலாது.

நிர்விகல்ப சமாதிநிலை என்னும் நற்கதியைப் பெற, குண்டலினி சக்தி முழுமையாக மேலுக்குச் செல்ல வேண்டும்.

குண்டலினி சக்தியை சகஸ்ராரத்திற்கு எழுப்பி அனுப்ப ஒவ்வொரு முயற்சியையும் மேற்கொள்ள வேண்டும். குண்டலினி சக்தியை மூலாதாரத்திலிருந்து சகஸ்ராரத்திற்கு கிளம்பிச் செல்ல மேற்கொள்ளும் முயற்சிக்கே 'சாதனா' என்று பெயர்.

ஒவ்வொரு உயிருக்கும் விடுதலை எய்துவதற்கும், தான் பிறந்த மூலப்பொருளுக்கே போய்ச் சேருவதற்குமான மனப்போக்கு இரத்தத்திலேயே ஊறிப்போயிருக்கிறது. சாதாரண புல் இதழில்கூட இந்த விடுதலைக்கான எண்ணம் படிந்திருக்கிறது. பாதை தவறிப்போன காரணத்தால் உயிர்களின் முயற்சிகள் விடுதலைக்கும் ஆனந்தத்துக்கும் பதிலாகப் பந்தத்துக்கும் துன்பத்துக்கும் ஆளாகி விட்டன.

புலன் போகங்களினாலும், செல்வத்தைச் சேர்ப்பதாலும், பெயரும் புகழும் பெறுவதாலும் உண்மையான மகிழ்ச்சியைப் பெறலாம் என பெரும்பாலானவர்கள் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். இவைகளெல்லாம் கணநேர திருப்திகளை அளிக்கின்றனவேயொழிய முடிவில் துன்பத்தையே விளைவிக்கின்றன.

மனக் கட்டுப்பாட்டின் மூலமும் நிர்விகல்ப சமாதி நிலையின் மூலமுமே உண்மையான சாந்தியையும் ஆன்ம விடுதலையையும் பெற முடியும்.

இதைப் பற்றி ஏற்கெனவே அறிந்திருப்பினும் இந்த நிலையைக் கண்டு பலரும் அஞ்சுகின்றனர். புலன்கள், போகப் பொருள்கள் ஆகியவற்றின் மீது அவர்கள் கொண்டுள்ள பற்று மிகவும் வலிமையுள்ளது. அது அவர்களுக்குத் துன்பத்தை விளைவிப்பதாக இருப்பினும், அந்தப் பற்றை விடுவதற்கு அவர்களுக்கு மனம் வருவதில்லை. அவர்கள் எப்போதாவது அல்லது வாரத்திற்கு ஒரு முறையாவது கோவில்களுக்குப் போவது, சர்ச்சுகளுக்குச் செல்வது போன்ற வெகு எளிதான மதக் கொள்கையையே பின்பற்ற விரும்புகிறார்கள்.

அவ்வாறு சென்று அங்குள்ள தெய்வத்திற்கும் பூசாரிகளுக்கும் எதையாவது காணிக்கையாகச் செலுத்தி அந்தத் தெய்வத்திடம் தங்களிடமுள்ள பாபத்தைப் போக்கும்படியும், தங்களையும் தங்கள் மனைவி குழந்தைகளையும் நோயிலிருந்தும் சாவிலிருந்தும் காப்பாற்றும்படியும், தங்கள் குடும்பத்தினருக்கும் உலக போகங்களை அருளும்படியும் வேண்டிக் கொள்கின்றனர்.

அவர்களுக்குச் சாப்பிடுவதற்கும் பருகுவதற்கும் ஏராளமான உணவும் பானமும் தேவைப்படுகிறது. அவர்கள் எட்டிலிருந்து பத்து மணி நேரம் தூங்குவதற்கு ஆசைப்படுகிறார்கள். முடிந்த அளவுக்கு காமக் களியாட்டங்கள் தேவைப்படுகிறது.

இதையேதான் அவர்கள் வாழ்க்கையின் சுக போகமென்று நினைக்கிறார்கள். ஆனால் முடிவில் அவர்களுக்கு விளைவது ஏமாற்றமேயாகும்.

ஏனெனில் மனக்கட்டுப்பாடு இல்லாத உணவும் தூக்கமும் காமமும் ஒருவருக்கு இன்பத்தை விளை விக்காது.

மற்றும் சிலர் இரண்டாவது பிரிவைச் சேர்ந்தவர்கள். அவர்கள் முதல் பிரிவினரைவிட கொஞ்சம் முன்னேறியவர்கள். அவர்களும்கூட உணவு தூக்கம் காமம் போன்றவற்றில் பற்றுள்ள வர்கள்தான். ஆனால் வாழ்க்கைக் கடமைகளைப் பற்றி அவர்கள் நல்ல விவரம் தெரிந்தவர்கள்.

அவர்கள் நேர்மையான வாழ்க்கையையும், சாத்திரங்களில் சொர்க்கத்துக்கான நல்வழிக்கு உறுதி கூறியுள்ளபடி நல்வாழ்க்கையை மேற் கொண்டும் நரகத்தில் தள்ளக்கூடிய பாபச் செயல் களில் ஈடுபடாமலும் வாழ்வாங்கு வாழ முற்படு கிறார்கள்.

சிலர் வழிபாடுகளையும், மந்திர ஜபத்தையும் தியானங்களையும் மேற்கொள்கிறார்கள். தர்மமும் செய்கிறார்கள். இந்த இரண்டாவது பிரிவின்கீழ் வருபவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவான தாகும்.

இப்போது மூன்றாவது பிரிவினரைப் பார்ப் போம். மிகவும் கண்ணியமும் நல்ல முன்னேற்றமும்

உள்ள மனிதன் (ஆன்மீகத்தில் முன்னேறிய மனிதன்) இந்த மூன்றாவது பிரிவின்கீழ் வருபவர்களின் எண்ணிக்கை மேலும் குறைவானதாகவே இருக்கும்.

இந்தப் பிரிவைச் சார்ந்த மக்கள் ஆன்மீக விழிப்பை உடையவர்கள். உலக போகங்களைத் துறந்து தூய, எளிய தெய்வீக வாழ்க்கையை வாழ்பவர்கள். அவர்களுக்குக் கற்பு நெறியிலான வாழ்க்கையின் (பிரம்மச்சரியம்) மதிப்பும் உயரவும் முக்கியத்துவமும் நன்றாகத் தெரிந்திருக்கும். அவர்கள் தினசரி மந்திர ஜப தியானப் பயிற்சியினால் மனத்தைக் கட்டுப்படுத்தி முடிவில் சமாதி நிலையை எய்துவதற்கான வழியையும் அறிந்திருப்பவர்கள்.

இந்த மூன்றாவது பிரிவிலும் நிர்விகல்ப சமாதி நிலைக்கு முயல்பவர்கள் ஏதோ ஒன்றிரண்டு பேர்கள் தான் இருப்பார்கள். நிர்விகல்ப சமாதி நிலையை எய்த விரும்பும் மகாத்மாக்களின் எண்ணிக்கையை வெகு எளிதில் விரல் விட்டு எண்ணி விடலாம்.

ஒவ்வொரு உயிருக்குள்ளும் அவர்களுக்கும் தெரியாமல் பிறவியிலிருந்தே தாங்கள் பிறந்து வந்த மேலான இடத்திற்குப் போய்ச் சேர வேண்டுமென்ற நோக்கம் இருக்கிறது. எல்லாக் கூட்டுப் பொருள்களுமே என்றைக்காவது ஒருநாள் தானாகவே கரைந்து, தன் மூலப் பொருளிலேயே போய்ச்சேர்ந்து ஈதனாக வேண்டும். இது இயற்கை நியதி.

மனிதன்கூடத் தான் புறப்பட்ட இடத்திற்குப் போய்ச் சேர்ந்தே தீருவான். அது இன்றைக்கே இருக்கக்கூடும். நாளைக்கும் நடக்கலாம். அல்லது லட்சோப லட்சம் ஆண்டுகளுக்குப் பிறகாவது நடந்தே தீரும். என்றாவது ஒரு நாள் அவன் புறப்பட்ட புள்ளிக்குப் போய்ச் சேர்ந்தேயாக வேண்டும்.

நிர்விகல்ப சமாதி நிலையில் மட்டுமே தன் மூலத்தில் போய்ச் சேருவதும் தன் நிலையில் போய் இணைவதும் நிகழ்கிறது.

நிர்விகல்ப சமாதி நிலையை எய்த வேண்டுமெனில் குண்டலினி சக்தி (உடலின் பிரதான சக்தி அல்லது மனிதனின் ஆதார சக்தி) அது இருக்கும் மின் இயக்கி சாதன மையத்தை (மூலாதாரம்) விட்டு நிலையான மையமான சகஸ்ராரத்துக்கு (தலையின் உச்சி)ப் போய்ச் சேரவேண்டும். மின் இயக்கி சாதன மையத்தில் குண்டலினி சக்தி தங்கி இருக்கும் வரை பேத நிலை நீடிக்கிறது.

ஒருவர் ஒன்றில் பலவற்றைப் பார்க்கிறார். அகிலத்தில் இதுவே நாம் காணும் அறியாமை, அடிமைத் தன்மை, துன்பம் போன்றவற்றுக்குக் காரணமாகும். குண்டலினி சக்தியை சகஸ்ராரத்திற்கு எழுப்ப வேண்டுமானால் எண்ணம், சொல், செயல் மூன்றிலும் கண்டிப்பான கற்பு நெறியைக் கடைப்பிடித்து ஐம்புலன்களையும் மனதையும் கட்டுப்

படுத்தி முடிவில் தூய்மை, எளிமை நிரம்பிய தெய்வீக வாழ்க்கை வாழ வேண்டும்.

தூய வாழ்க்கை என்று நான் கூறுவதற்குப் பொருள்*— சுவாசிப்பதற்குத் தூய காற்று, குடிப்பதற்குச் சுத்தமான தண்ணீர், சாப்பிடுவதற்கு எளிய சத்துள்ள உணவு, வசிப்பதற்குத் தூய்மையான இடம், கலந்து பழகுவதற்கு நல்ல சேர்க்கை, அணிவதற்குத் தூய ஆடைகள், பரிவுடனும் அன்புடனும் கண்ணியமாகவும் நடந்துகொள்ளுதல், பொய் பேசாதிருத்தல், கள்ளாமை, மற்றவர்களைத் துன்புறுத்தாது இருத்தல் போன்றவையே அவை.

நற்பண்புக்காக வகுக்கப்பட்டுள்ள எல்லா நீதி நெறி முறைகளையும் கடைப் பிடித்து வாழ்வதேயாகும்.

புத்திசாலித்தனமுள்ள நெறிகெட்ட ஒருஆணோ அல்லது பெண்ணோ தந்திரத்தையும் பொய்ப் பிரச்சாரத்தையும் கையாண்டு செல்வத்தைக் குவித்து விடலாம்.

ஆனால் ஆன்மீகத் துறையில் முன்னேறுவதற்கு ஒழுக்கத் தூய்மையையும் வலிமையையும் பெற்றிருக்க வேண்டும். ஆன்மீக வாழ்வின் அடித்தளமே தூய வாழ்க்கையாகும். இந்தத் தூய வாழ்க்கை உடலிலும் நாடிகளிலும் (நரம்புகள்)

தூய்மையைப் பரவச் செய்கிறது. மந்திர ஜபமும் தியானமும் மனத்தூய்மையைப் பெற்றுத் தருகிறது.

ஒரு மனிதன் நேரான வழியில் தன் பயணத்தைத் துவக்கினால் குண்டலினி சக்தி மேல் நோக்கி நகருகிறது. இவ்வாறு மேல் நோக்கிச் செல்லும் போது அந்த மனிதன் அதிக ஆனந்தத்தையும் அமைதியையும் அடைகிறான். தன் சாதனையில் பெருமிதங் கொள்கிறான்.

சில சமயங்களில் எதிர் விளைவுகள் வந்தே தீரும். பலர் இதனால் விரக்தி யடைந்து துவங்கிய வேலையை விட்டு மனம் போன போக்கில் போய் விடுகின்றனர். இது மிகவும் கெடுதியான, ஆபத்தானதுங்கூட! அது போன்ற சமயங்களில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, பொறுமையையும் விடாமுயற்சியையும் கடைப்பிடிக்க வேண்டும். எதிர்விளைவுகள் தானாகவே விலகி விடும்.

குண்டலினி சக்தி இதய மையத்தை அடைந்தவுடன் ஒருவர் தெய்வீக ஒளியையும் தெய்வீகக் காட்சிகளையும் பார்ப்பார்; தெய்வீக ஒலிகளைக் கேட்பார்.

இதை முழு சித்தியும் அடைந்து விட்டதாகக் கருதக் கூடாது. ஒரு மனிதனின் முன்னேற்றத்தையே இவை காட்டுகின்றன. ஆனால் பலவீன மனம்

யடைத்த பல மனிதர்கள் அவர்கள் எய்தியுள்ள சித்திகளைப் பெரிது படுத்தி சீடர்களைத் திரட்டி அவர்களுடைய ஆன்மீக வாழ்வுக்கே முடிவைத் தேடிக் கொள்கின்றனர்.

வேறொரு ஆபத்தும் இதில் இருக்கிறது. குண்டலினி சக்தி உயர்நிலை மையங்களுக்குக் கிளம்பியதும் ஒருவர் சித்தாடல் சக்திகளைப் பெறு கிறார். இது பெரிய கவர்ச்சியை உண்டாக்குவது.

தன்னையும் அறியாமல் தனக்குள் மறைந்தி ருக்கும் 'பெயருக்கும் புகழுக்குமான ஆசை' பொங்கி எழுகிறது. சித்துக்களைப் பயன்படுத்து வதற்கான தூண்டுதலைப் பெறுகிறார். இது ஒரு ஆபத்தான விளையாட்டு, தன் உயிரோடு விளை யாடும் விளையாட்டு. ஆகவே எச்சரிக்கை தேவை.

உனது சித்து விளையாட்டுகளை உபயோகிக் காதே; அவைகளைக் கட்டுப்படுத்து. அதனால் உனது மனோசக்தியும் மனஒருமைப் பாடும் வளர்ச்சி யடைகிறது.

சகஸ்ராரத்தில் ஒன்றிப் போவதற்கு முன்னர் குண்டலினி சக்தி ஆறாவது மையத்தை அடைந்த வுடன் ஒருவர் சவிகல்ப சமாதி நிலையை (இஷ்ட தேவதையின் உருவில் மனம் இலயித்துப் போதல்) எய்துகிறார்.

இந்த சமாதி நிலையின் ஆனந்தம் பேரானந்த மாயினும் இது ஒரு மேலான சித்தியானாலும் முடிவான சித்தி அல்ல!

பெரும்பாலான மக்கள் இதோடு நின்றுவிடு கின்றனர்.

ஆனால் நீ நிர்விகல்ப சமாதி நிலையை எய்த வேண்டுமானால் இங்கேயே நின்று விடாதே! இந்த ஆனந்தத்தையும் புறக்கணித்துவிடு!

அதன் பின்னரே உன்னால் நிர்விகல்ப சமாதி நிலையை எய்த முடியும். இதுவரை அனுபவித்த, கேள்விப்பட்ட எல்லாவகை ஆனந்தங்களையும் கடந்த ஒன்றே, நிர்விகல்ப சமாதி நிலையில் எய்தும் பேரானந்தம்!

எழுமின்! விழிமின்! வெற்றி முனையை அடையும் வரை சோர்வு கொள்ளாதீர்!

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

# ஆசிரியரும் அவர் பணியும்

தென் இந்தியாவில் ''கூர்க்'' மலைப் பிரதேசத்தில் 1902 ஆம் ஆண்டு ஏப்ரல் 12 இல் நாராயணானந்தா பிறந்தார். அவர் பெற்றோர் குழந்தைப் பேற்றுக்காகப் பல ஆண்டுகள் இறைவனை வேண்டி இறைஞ்சி நின்றனர். ஆகவே தான் தங்களுக்குப் பிறந்த பொலிவு மிக்க, அழகுள்ள மகனிடம் ஆழ்ந்த அன்பு காட்டி வந்தனர். அந்த மகனும் அந்தக் கிராமத்தினரின் மனத்தை மிகவும் கவர்ந்திருந்தான்.

அவனும் தன் பெற்றோரிடம் மிகவும் பாசம் கொண்டிருந்தான். ஆயினும் ஐந்தாவது வயதில் அவனைப் பள்ளிக்கு அனுப்பியதும் அவன் கொஞ்சம்கூடத் தயக்கம் காட்டாமல் வெகு சகஜமாக வீட்டை விட்டுச் சென்றான்.

சிறுவயதில் அவன் படிப்பில் சிறந்து, சுறுசுறுப்பு மிக்க மாணவனாகவும் விளங்கினான். பள்ளி விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ளும் தேர்வைப் பெற்று, பல பரிசுகளைப் பள்ளிக்குப் பெற்றுத் தந்தான்.

இதுபோன்ற பல்வேறு செயல்களுக்கிடையில் காலை மாலை இரு வேளைகளிலும் தீவிர

தியானத்தில் சுமார் அரை மணி நேரம் அமர்ந்து விடுவான். எந்த வெளிப்புறத் தூண்டுதலுமில்லா மல் உள்ளுக்குள்ளிருந்து கிளர்ந்தெழுந்த ஒருவகை உந்துதலினாலேயே இந்தப் பயிற்சியைத் தொடர்ந்து மேற்கொண்டான்.

இத்தகைய முறையான நியதியுடன் கூடிய தியானம் அந்தச் சிறுவனை ஆன்மிக வாழ்க்கையில் நிலை நிறுத்தி எதிர்காலத்தில் நிர்விகல்ப சமாதி நிலையை எய்துவதற்கான அரிய வாய்ப்புக்கு அடி கோலியது.

கல்வியை முடித்ததும் அந்த இளைஞன் திருமணம் செய்து கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக உலகைத் துறந்து தனது இருபத்தேழாவது வயதில் சந்நியாசியானார்.

வாழ்க்கையில் தோல்வி ஏதும் ஏற்படாத நிலை யிலேயே, அவர் இந்த சந்நியாசத்தை மேற்கொண் டார்.

எந்த விதமான விரக்தியும் ஏற்படாத நிலையில் ஒளிமிக்க எதிர்காலமும் அவருக்காகக் காத் திருந்தது. அவருடைய மனோ நிலையில் ஏற் பட்டிருந்த பெருத்த ஆன்மிக நிலை மாறுதலே இதற்குக் காரணம்.

ஒருநாள் வழக்கம்போல் தியானத்தில் அமர்ந் திருந்தபோது அவர் மனம் ஒரு மணி நேர அளவுக்கும் மேலே ஒருமுகப்பட்டு ஒருமைப்பாட்டில் ஊன்றி நின்றது. இந்த மேலான உயரிய சாதனை

முடிந்ததும் அந்தராத்மா அவரை அழைத்து உலகைத் துறக்கும்படிக் கட்டளை பிறப்பித்த சொற்கள் அவர் காதுகளில் ஒலித்தன. அந்த இளைஞர் கணநேரம்கூடத் தயங்காமல் கடைசி பைசா வரை தன்னுடைய செல்வத்தைத் தானம் செய்து விட்டார்.

1929-இல் குருவைத் (ஆன்மீக ஆசானை) தேடி தன் வீட்டை விட்டுப் புறப்பட்டார்.

களைப்பு மிகுந்த பல்லாயிரம் மைல் தூரமான நெடிய பயணத்திற்குப் பின்னர் கடைசியாக அந்த இளந்துறவி ஸ்ரீ இராமகிருஷ்ண மடத்தின் தலைமையகமான கல்கத்தாவிலுள்ள பேலூர் மடத்திற்கு வந்து சேர்ந்தார்.

அந்த மடத்திலிருந்த சந்நியாசிகள் மூன்று நாட்கள் வரை அவரைப் பலவிதமான சோதனைகளுக்கு உட்படுத்தி,அதன் பின்னரே ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நேர்ச் சீடரான தலைவர் சுவாமி சிவானந்தரைத் தரிசிப்பதற்கு அனுமதித்தனர். இந்த இளந் துறவி, அந்த மகானைக் கண்டதும் அவர் பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கிச் சரணடைந்தார்.

இவ்வாறு இவர் தமது குருவைச் தரிசித்ததும், அவர் தன்னுடைய ஆழ்ந்தஅன்பையும் ஆதரவையும் நல்கினார். இளந் துறவி பதிலுக்கு தமது நம்பிக்கையையும் பக்தியையும் கடவுளிடமும், குருவிடமும் சமர்ப்பித்தார்.

அடுத்து வந்த சில ஆண்டுகளுக்குள் சுவாமி நாராயணானந்தாவிடம் கடவுளைத் தரிசிப்பதற்கான உள்ளுணர்வுடன் கூடிய உந்துதல் உத்வேகமடைந்தது. அவருடைய முழு வாழ்க்கையுமே இந்த ஒரே குறிக்கோளின் முனைப்பிலேயே ஈடுபட்டு, அதன் பயனாக ஒரு தனி இடத்தைத் தேடி தீவிர சாதனையை (ஆன்மீகப் பயிற்சி) மேற்கொள்ள வேண்டுமென்ற தாபம் மேலிட்டது.

கடைசியாக அவருடைய குருவானவர் தனது அருள்நிலையில் சீடனை அழைத்து இமாலயத்திற்குச் சென்று தவம் (கடுந்தவம்) மேற்கொண்டு சமாதி நிலையில் (ஆழ்நிலைத் தியானம்) ஆழ்ந்து சித்தி பெறும்படிக் கட்டளையிட்டார்.

பிரம்மாண்டமான பனிச் சிகரங்கள் நிரம்பிய அதிசயானந்தத்தைத் தரக்கூடிய இமாலய மலைத் தொடர்களை நேருக்கு நேர் கண்டபோது சுவாமிஜி பரவசமடைந்து உண்மையான கடுந்தவத்தை உடனே தொடங்கி விட்டார்.

எந்தவித வசதிகளுமின்றி நடுக்காட்டில் ஒரு சிறிய குடிசையில் தங்கித் தளராத ஊக்கத்துடன் கடுமையாக உழைத்தார். வழக்கமாக அவர் நாளொன்றுக்கு சுமார் பன்னிரண்டு மணியிலிருந்து பதினாறு மணி நேர அளவுக்குத் தியானத்தில் அமர்ந்து மந்திர ஜபம் செய்தார். இரவு பகலில்லாமல் நாள் கணக்கில் ஓய்வு ஒழிச்சலின்றித் தொடர்ந்து தியானம் செய்தார். இது போன்ற

கடுமையான சாதனையின் பயனாக சுவாமி நாராயணானந்தா குறுகிய காலத்திலேயே மிக உயர்ந்த மேலான கதியான நிர்விகல்ப சமாதி நிலையை எய்தினார்.

1933ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் சிவராத்திரி தினத்தின் இரவு நேரத்தில், அதாவது இந்திய நாடெங்கணும் அனுஷ்டிக்கப்படும் சிவபெருமான் விழித்தெழும் கொண்டாட்ட தினத்தன்று சுவாமிஜீ வழக்கம் போல் அன்று நள்ளிரவில் தியானத்தில் அமர்ந்தார். மனம் ஆழ்ந்து ஒருமுகப்பட்டபோது குண்டலினி சக்தி முழுமையாகக் கிளம்பி சகஸ்ராரத்தை வந்தடைந்ததை உணர்ந்தார். அவருடைய இதயத் துடிப்பும் மூச்சும் தானாகவே நின்று போய்விட்டன (கேவல கும்பகம்).

உடலைப் பற்றிய உணர்வு அற்றுப் போய் விட்டது. மனம் பூரணத்துவத்தில் கலந்துவிட்டது. தான் எனும் உணர்வு மரத்து உயிர்ச்சார சாகரத்தில் சங்கமித்தது. மனம், அகந்தை, புத்தி போன்றவற்றின் அறிகுறிகள் கிஞ்சித்தேனும் புலப்படவில்லை. இதுவே கடைசி அனுபவம். இதுவே கடவுளின் உருவமற்ற நிலையின் உணர்வு. இதுவே அகண்டாகாரமான ஆனந்த நிலையுமாகும்.

சுவாமிஜீ இதே நிர்விகல்ப சமாதி நிலையில் நீண்ட காலம் இருந்தார். மிக மிக உயரத்தில் அவரது ஆன்மா இருந்தாலும் அவர் மனம் நிதானமாகவும் நிச்சயத்துடனும் உலக பந்தத்தின்

எல்லைக்குள் இறங்கி வந்தது. இந்த நிலையில் அவருடைய பார்வையின் கோணமே முற்றிலும் மாற்றம் பெற்றிருந்தது. பூரண ஞான ஒளி எய்திய காரணத்தால் அவர் மனத்தில் அறியாமையின் அறிகுறி கிஞ்சித்தேனும் இருக்கவில்லை.

அவர் எங்கணும் எல்லாப் பெயர்களுக்கும் உருவங்களுக்கும் பின்னால், ஒரே ஆத்மாவையே கண்டார். அகிலத்தின் பேதங்களில் தெய்வீக ஒற்றுமையை உணர்ந்து கொண்டார்.

இந்த அரிய சித்தியை அடைந்த பின்னரும் சுவாமி நாராயணானந்தா அதை விளம்பரப் படுத்திக் கொள்ளவில்லை. இமாலயத்தில் எளிய, தனிமை வாழ்க்கையையே தொடர்ந்து மேற் கொண்டார். அவர் சீடர்களைச் சேர்த்துக் கொள்ள வில்லை. பணத்துக்கோ வசதிகளுக்கோ ஆசைப் படவில்லை. அவை ஏதும் இல்லாத நிலையிலேயே அவர் வாழ்ந்தார்.

உலக ஆசாபாசங்களுக்கு ஆளாகாமல் மனத்தின் நுட்பமான இயக்கங்களின் நூதன கணிப் பிலேயே ஆழ்ந்து போனார். மறைந்திருக்கும் காரணங்களின் விளைவுகளால் எழும் சூக்கும இயக்கங்களைப் படம் பிடித்துக் கணிக்க தனது ஒருமுகப்பட்ட தூய மனத்தையே நிரந்தரமான ஆய்வுக் கூடமாக ஆக்கிக் கொண்டார்.

இவற்றைப் புத்தகங்களாகக் கொண்டு வர வேண்டுமென்ற யோசனையே இல்லாமல் மனோ

தத்துவத் துறையிலும், தத்துவ சாத்திரத் துறையிலும் அவருடைய உன்னதமான கண்டுபிடிப்புகளைக் குறிப்புகளாக எழுதி வைத்துக் கொள்ளலானார்.

முன் உதாரணமில்லாத, ஈடு இணையற்ற ஞானத்தை அளிக்கக் கூடிய ஒன்றன் பின் ஒன்றான தொகுப்புகளாக தனக்கே உரித்தான அற்புத ஆற்றலினால் எளிய லாகவத்துடன் எழுதிக் குவித்தார். இந்தக் கையெழுத்துப் பிரதிகளை உலகின் பார்வைக்குத் தெரியாமல் பாதுகாத்து வைக்கவே எண்ணினார்.

1947இல் இந்தியா, பாகிஸ்தான் பிரிவினையின் போது வெறி கொண்ட முஸ்லீம்களாலும் இந்து மதக் கும்பலாலும் கடவுள், மதம் போன்றவற்றின் பெயரால் நிகழ்ந்த மனிதாபிமானமற்ற கோர இரத்தக் களரியை சுவாமிஜீ நேரில் கண்டார்.

கொள்ளை, கொலை, பிணக்குவியல்களின் கோரக் காட்சிகளைக் கண்டார். கன்னிப் பெண்களும், இளம் பெண்களும் கடத்தப்பட்டதையும் பார்த்தார். துன்பப்படும் மக்களைக் கண்டு இரக்கங் கொண்டார். உடனே மனித குலத்துக்கு உதவி புரியத் தீர்மானித்தார். தனிமையைத் துறந்து சீடர்களை ஏற்றுக் கொள்ளத் துவங்கினார்.

ஆரம்பத்தில் சுவாமிஜீயிடம் சரணடைந்த சீடர்களில் மேற்கூறிய படுகொலைக்குத் தப்பிப் பிழைத்து வந்த ஏழை இளம் அனாதைகளும் இருந்தனர்.

அவர்கள் சுவாமிஜீயினுடைய குறிப்புகளையும் கையெழுத்துப் பிரதிகளையும் படித்துப் பார்த்தனர். அவற்றின் தனிப் பெருஞ் சிறப்பை உணர்ந்து அவற்றைப் புத்தகங்களாக வெளிக்கொணர விரும்பினர்.

சுவாஜீயிடம் அதற்கான பொருள் வசதி இல்லாமலிருந்தது. பாகிஸ்தானில் அனைத்தையும் இழந்து விட்டு வந்து சரண் புகுந்த சகோதர-சகோதரிகளிடம் நிதி வசதி இல்லை. புத்தகங்கள் வெளியிடுவதற்கான வாய்ப்பு இல்லாத நிலை.

அவர்களில் சில பெண்கள் தங்களிடம் எஞ்சி இருந்த ஓரிரு பொன் நகைகளை அதற்காக அளித்தனர். அதைக் கொண்டு புத்தகங்களை வெளியிடும் பணியைத் துவக்குவதற்கான வாய்ப்புக் கிட்டியது.

இந்த நேரத்தில் கெடுமதி கொண்ட சிலரிட மிருந்து கிளம்பிய எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டி நேரிட்டது. அவர்கள் வெறும் பொச்சரிப்புக் காரண மாகவே இந்த மகத்தான பணியின் துவக்கத்தைத் தடுத்து நிறுத்த நினைத்தனர்.

எந்த ஒரு ஆதரவும், உதவியும் யாரிடமிருந்தும் பெறாத நிலையிலேயே பல சோம்பேறிகளால் அவர் மீது சுமத்தப்பட்ட அவதூறுகளையும். பழிபாவங் களையும் அவர் தனி ஒருவராகவே ஏற்றுக்கொண்டு வாழ வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அதன் விளைவாகவே எல்லாராலும் அவர் இழிவாகக் கருதப்பட்டார். அதனால் தங்குவதற்கும் இடம் கிடைக்காத நிலை.

இதற்கெல்லாம் ஈடு கொடுத்து சுவாமிஜீ கிஞ்சித்தும் மனந்தளராமல் உறுதியுடன் இருந்தார். சில நாள்கள் சென்றதும் அவதூறுகள் ஓய்ந்து போயின. சோம்பேறிகள் தாங்கள் செய்த பாவங் களின் பலனை தாங்களே சுமந்து சென்றனர்.

புத்தகங்களின் பணி தொடர்ந்து, ஒன்றன் பின் ஒன்றாக அச்சேறி வெளி வந்தது. அவற்றைப் பற்றிய விளம்பரமோ பிரச்சாரமோ இல்லாமல் அவற்றின் உண்மையான உயர்ந்த மதிப்பினா லேயே உலகம் பூராவும் பரவுவதற்கான வாய்ப்புக் கிடைத்தது.

ஆரம்பத்தில் சுவாமி நாராயணானந்தா இதற்காக எந்த ஒரு நிறுவனத்தையோ அல்லது ஆசிரமத்தையோ அமைக்க விரும்பவில்லை.

அவருடைய துறவு வாழ்க்கையில் பொது மக்களிடமிருந்தோ, சீடர்களிடமிருந்தோ எந்தவித நன்கொடையையும் பெறவில்லை. (அவருக்கே

உரித்தான) எளிய வாழ்க்கையை மேற்கொண்டார். பொது வாழ்க்கையின் ஆடம்பரங்களை அவர் தவிர்க்கவே முயன்றார். நாள்கள் செல்லச் செல்ல சீடர்களின் எண்ணிக்கை அதிகரித்தது.

இது போன்று உருவாகிய இயக்கத்தை நெறிப் படுத்தி ஓர் ஒழுங்கான அமைப்பாக நிறுவ வேண்டிய சூழ்நிலை தவிர்க்க முடியாததாகி விட்டது.

பின்னர் 1967 ஆம் ஆண்டில்; ''நாராயணா னந்தா யூனிவர்சல் யோகா டிரஸ்ட்'' என்ற மையங்கள் இந்தியா, ஜெர்மனி, டென்மார்க், ஸ்விட்சர்லாந்து போன்ற நாடுகளில் ஆரம்பிக்கப் பட்டன. இந்த நேரத்தில் மேலை நாட்டு இளம் ஹிப்பிகள் பலர், குறிப்பாக, 'டென்மார்க்' தேசத் தவர் சுவாமி நாராயணானந்தாவிடம் வழிகாட்டி உதவும்படி வந்து சரணடைந்தனர்.

அவர்களில் பலர் போதை மருந்துக்கு அடிமை யானவர்கள்; மோசமான நாடோடிகள்; சரண்புகச் சென்ற பல இடங்களிலிருந்தும் விரட்டப்பட்டு கீழ்நிலைக்குத் தள்ளப்பட்டவர்கள்.

ஆனாலும் சுவாமிஜீ அவர்களைப் புரிந்து கொண்டு தமது சீடர்களாக ஏற்றுக் கொண்டார். விரைவிலேயே அவர்களைச் சரியான பாதைக்கு கொண்டு வந்து விட்டார்.

இதில் பல இளைஞர்களும், யுவதிகளும் டென்மார்க் தேசத்துக்குத் திரும்பி வந்து ஜில்லிங் என்ற இடத்தில் உள்ள என். யூ. யோக ஆசிரமத்தின் சந்நியாசிகளாகவும், சந்நியாசினிகளாகவும் மாறினார்கள். அந்த ஆசிரமம் புதிதாகத் தொடங்கப் பட்டிருந்த சமயம் அது.

ஜில்லிங் ஆசிரமம் எழுபது ஏக்கர் பரப்பளவுள்ள ஒரு பழைய பண்ணையில் அமைக்கப்பட்டது. அந்த நிலத்தைப் பண்படுத்தி அங்கு ஒரு ஆசிரமத்தை உருவாக்க ஆசிரமவாசிகள் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது. இந்த உழைப்புடன்கூடத் தங்கள் வயிற்றுப் பாட்டுக்காக அவர்கள் வெளியே சென்று தொழிற்சாலைகளில் பணிபுரிந்து சம்பாதிக்கவும் வேண்டிருந்தது.

சுவாமிஜி அவர்களுடைய உண்மையான உழைப்பைக் கண்டு, டென்மார்க் நாட்டிற்கு வருகை புரிந்தார். சுவாமிஜி ஜில்லிங் ஆசிரமத்தில் ஐந்து மாத காலம் தங்கித் தமது முதல் இலவச ஆன்மிகப் பயிற்சி முகாமை நடத்தினார்.

அந்த முகாமில் உண்மையான ஆன்மிகப் பயிற்சியாளர்கள் தங்களுக்கெனத் தனித்தனிக் கூடாரங்களை அமைத்துக் கொண்டு அவற்றில் தங்கி அடிக்கடி குருவை நேரில் பார்த்து சந்தேகங்களைக் கேட்டறிந்து தெளிந்தனர். தினசரிப் பயிற்சி நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டனர்.

முகாம் மூன்று மாதகாலம் நடந்தது. ஆயிரக் கணக்கானவர்கள் வந்து கலந்து கொண்டார்கள்.

1971 ஆம் ஆண்டு முதல் சுவாமி நாராயணானந்தா டென்மார்க் நாட்டிற்கும் மற்ற நாடுகளில் உள்ள மையங்களுக்கும் தவறாமல் ஒவ்வொரு ஆண்டும் சென்று வந்தார்.

ஜில்லிங்கில் மட்டும் ஒவ்வொரு ஆண்டும் ஜுன், ஜுலை, ஆகஸ்டு மாதங்களில் இலவச ஆன்மிகப் பயிற்சி முகாமை நடத்துகின்றனர். மெய்ஞ் ஞானத்தை நாடிவரும் அன்பர்களுக்கு உபதேசம் அளித்து அகில உலகத்திலுமுள்ள ஆயிரக் கணக் கான சீடர்களுக்கு அக்கறையுடன் வழிகாட்டி உதவி புரிகின்றனர்.

சுவாமிநாராயணானந்தா சீடர்களுடன் கொண் டுள்ள உறவுமுறை அந்தரங்கத் தொடர்புடையது. அவரது அருட்பார்வை சீடர்களுக்குள் மறைந்துள்ள ஆற்றல்களை விழிப்படையச் செய்து, அவர்களைத் தங்கள் சொந்த பலத்திலேயே நின்று செயலாற்றும் சக்தியைக் கொடுத்து விடுகிறது. அவருடைய ஆன்மிகப் போதனையிலுள்ள கருத்தாழமும் ஞானந் தெளிவும் பொழுது போக்காக விளம்பரப் படுத்தக் கூடியது அல்ல. அவர் தமது சீடர்களைப் பாதிவழி யில் கைவிடுபவரல்ல. முடிவான, உறுதியான மனக்கட்டுப்பாட்டை எய்தி அதன் மூலம் நற்கதிக்கு (மோட்சம்) போய்ச் சேரும்படிக் கட்டளை இடுகிறார்.

சுவாமி நாராயணானந்தாவின் சீடர்கள் உழைத்துச் சம்பாதித்து சமூகத்தில் ஒருவராகக் கலந்து வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் நல்லொழுக்க விதிமுறைகளைக் கண்டிப்புடன் கடைப்பிடித்துச் சுயநலமில்லாத, பற்றற்ற வாழ்க்கையைப் பின்பற்றி நடக்க முயல்கின்றனர்.

பெரும்பாலான ஆண் – பெண் சந்நியாசிகளும் ஆசிரமங்களிலேயே வாழ்ந்து வருகின்றனர். அவற்றில் பல சுயபலத்தில் இயங்கும் பண்ணைகளாக உள்ளன. அந்தப் பண்ணைகளிலேயே பட்டறைகளும் அதற்கான எல்லா வசதிகளும் உள்ளன. ஆசிரமங்களில் தங்கியுள்ள ஆசிரமவாசிகளுக்கு வேலை வாய்ப்பை அளிக்கத்தக்க வசதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

சர்வதேசக் கூட்டமைப்பின் மையமாக உள்ள டென்மார்க்கிலுள்ள ஜில்லிங் ஆசிரமத்தில் விவசாயப் பண்ணைத் தொழிலுடன் இணைக்கப்பட்ட ஒரு பால் பண்ணையும் இருக்கிறது. இந்த ஆசிரமத்தில் மிகப் பெரிய அச்சுக் கூடமும் உள்ளது. இங்குதான் வெளியீட்டுத் துறைக்கான புத்தகங்களும் பத்திரிகைகளும் அச்சிடப்பட்டு வெளியாகின்றன.

இங்குள்ள வேறொரு அணியினருக்கு பல்வேறு ஆசிரமங்களிலும், மையங்களிலும் கட்டக்கூடிய புதிய கட்டடங்களுக்கான கட்டுமானப் பணி தொடர்ந்து இருந்து வருகின்றது. இதுபோன்ற பணிகளுக்கு உதவும் வகையில் உலகம் பூராவிலுமுள்ள பல்வேறு மையங்களுக்கிடையே தங்களது

அங்கத்தினர்களைப் பரிமாறிக் கொள்ளும் வழக்கம் தீவிரமடைந்துள்ளது.

இத்தகைய நெருக்கமான கூட்டுறவினால் இந்த நிறுவனம் சர்வதேசப் பல்சமயச் சீடர்களுக்கிடையே நல்லுறவுக்கான ஒற்றுமையை நிலவச் செய்கிறது.

தாங்கள் செய்யும் தினசரித் தொழில்கள் போக ஆசிரமவாசிகள் காலை நேரங்களிலும், மாலை வேளைகளிலும் தியானத்தில் ஈடுபட்டு வருகின்றனர். ஞாயிற்றுக்கிழமைகளிலும், விழாக் காலங்களிலும் எல்லாரும் தியான மண்டபத்தில் பொது தியானத்திற்காக ஒன்றாகக் கூடுகின்றனர். அப்போது நிகழும் கூட்டு வழிபாட்டிலும் இசையிலும் சேர்ந்து கொள்கின்றனர்.

இந்தப் பேரழகு மிக்க இயக்கத்தின் வாயிற் கதவுகளுக்குப் பின்னாலிருந்து, இதன் கர்த்தாவின் பரமாத்ம உளப்பூர்வ வாழ்த்துகள் புரண்டோடி வருகின்றன.

அவருடைய மாபெரும் ஆன்மிகக் குடும்பத்தின் அங்கத்தினர்களாக உள்ள அனைவருமே மற்றுமுள்ள ஞானவழியைத் தேடி வரும் மெய்யன்பர்களோடு சேர்ந்து தங்களுக்குக் கிடைத்துள்ள விலையில்லாப் பெரும் பரிசை பகிர்ந்து கொள்ளும் பணிவான விருப்பத்துடன் வாழ்ந்து வருகின்றனர்.

○